## உங்கள் அழகே உங்களுக்கு ஆபரணம்...

## உங்கள் முக சருமத்தை மென்மையாயும் அழகாயும் வைக்க

# பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம்

## உபயோகியுங்கள்

மிருதுவானதும், குளுமையானதுமான பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உங்கள் சருமத்திற்குப் பாதுகாப்பு அளித்து, அதை அழகுடனும், இளமையுடனும் வைக்கும்! இது எண்ணெய்ப் பசையற்றது. மற்றும் முகத்தில் தடவிய சிற்றே விநாடிகளில் மறைந்து விடுகிறது. பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் தடவி பவுடர் போட்டுக் கொண்டால் பவுடர் மணிக்கணக்கில் படிந்திருக்கும்.



### சருமத்தை சுத்திகரிக்கும் அற்புதமான க்ரீம்

தினமும் இரவில் பாண்ட்ஸ் கோல்டு க்ரீமை உங்கள் முகத்தில் தடவுங்கள். அது சருமத்தை சுத்தம் செய்து, சருமம் மிருதுத்தன்மையற்றுப் போவதையும், சருமத்துவாரங்கள் வரண்டு போவதையும் தடுக்கிறது. அன்றாடம் பாண்ட்ஸ் கோல்டு க்ரீம் உபயோகித்து, உங்கள் அழகுக்கு தகுந்த பாதுகாப்பு அளியுங்கள்.




### இலவச புத்தகம்

"LOVELIER WITH POND'S" என்ற எமது இலவச புத்தகத்தை வரவழையுங்கள். இதில் அழகு பராமரிப்புபற்றி உபயோகமான குறிப்புகள் அடங்கியுள்ளன. பி. ஓ. பாக்ஸ் 1512, டிபார்ட்மெண்ட் நெ. 25V. பம்பாய் 1 என்ற விலாசத்திற்கு தபால் செலவிற்காக 25 நயா பைசா ஸ்டாம்புடன் எழுதவும்.

செஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பரேட்டட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ. வில் இணைக்கப்பெற்றது)

# கல்கி பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



# சௌந்தர்ய வாழ்க்கைக்கு...

மர்பி ரேடியோக்கள் உங்கள் குடும்பத்தை மகிழ்விப்பதுடன் இல்லத்தையும் அழகுபடுத்தும் முறையில் உருவாக்கப்பட்டிருக்கின்றன.

**murphy**

Today's most desired radio!



இனிமையான ஒலி!
அழகான தோற்றம்!

மாடல் 222
* ஆல்வேவ் * 3-பாண்ட் * 5-வால்வ்
*AC or AC/DC * ரூ. 50'' உள்ளூர் வரிகள் தனி

தென் இந்தியாவுக்கு சோல் டிஸ்ட்ரிபியூட்டர்கள்:

**முகம்மது இப்ராஹிம் & கம்பெனி பிரைவேட் லிமிடெட்**

சென்னை - பெங்களூர் - ஹைதராபாத்



மலர் 17 | இதழ் 43

தமிழ்த்திரு நாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா—பாரதியார்

விளம்பி ௵ | வைகாசி 12

# நாகரிகப் போட்டி

ராஜாஜி

உடலும் உயிரும் உணர்ச்சியும் கொண்ட தனி மக்களின் கூட்டம் நாடு. நாடு சுகமாக இருக்கிறது என்றால் அதன் பொருள் அந்த நாட்டில் வாழும் தனி மக்கள் சுகமாக இருக்கிறார்கள் என்பது. மக்களின் தனி உணர்ச்சியைக் காப்பாற்றாமல் சமூகச் சுகமே நோக்கமாகக் கருதுவது கம்யூனிஸ்ட் கொள்கை. தனி நபருக்குள்ள சுதந்திரத்தைப் பறிகொடுத்து விட்டு ராஜ்யத்தைப் பலப்படுத்துவது கம்யூனிஸ்ட் திட்டம். தனி மனிதனுக்குச் சுதந்திரம் இல்லாவிடில் அவன் அரசாட்சியின்மூலம் என்ன சந்தோஷம் பெறமுடியும்? தனி மனிதனுக்குச் சந்தோஷம் இல்லை என்றால் அந்த மக்கட் கூட்டத்தின் வாழ்க்கை பயனற்றதாகும். இதுவே கம்யூனிஸ்ட் நாடுகளுக்கும் மற்ற நாடுகளுக்கும் உள்ள வேறுபாடு. மக்களுடைய வியக்தி சுதந்திர உணர்ச்சிக்குத் திருப்தி தராத சமூக வாழ்க்கை பயனற்றது என்பது ஒரு கட்சி. சமூக வாழ்க்கையே பிரதானம்; தனி மனிதனுடைய வாழ்க்கையெல்லாம் சமூக முன்னேற்றத்துக்காகவே என்பது கம்யூனிஸ்ட் கொள்கை.

இந்த இரண்டு கொள்கைகளின் வேறுபாடே தற்போது மேற்கு வல்லரசுகளுக்கும் ருஷியா, சீனா வல்லரசுகளுக்கும் உள்ள வேற்றுமைக்கு மூலகாரணம் என்று சொல்லப்படுகிறது.

ஆனால், கவனித்துப் பார்த்தால் இரு பட்சத்து நாடுகளிலுமே தனி மக்களின் சுதந்திரம் அழிந்து போய் வருவதைப் பார்க்கலாம். கம்யூனிஸ்ட் அரசாங்கங்களின் அதிக்கிரமத்துக்குப் பயந்து அந்தக் கம்யூனிஸ்ட் நாடுகளை எதிர்க்கும் மேற்கு வல்லரசுகளும் தத்தம் நாடுகளில் தனி மக்களின் சுதந்திரங்களைக் குறைத்துக் குறைத்து அரசாட்சி நடத்தி வருகின்றன. போட்டிப் போராட்டத்துக்கு இப்படிச் செய்வது அவசியமாகிவிட்டது. யாரை எதிர்க்கிறோமோ, எந்தத் தீமைக்குப் பயந்து அவர்களை எதிர்க்கிறோமோ அந்தக் குற்றம் நமக்குள்ளும் பாய்ந்து விடுகிறது. இது ஒரு இயற்கை நியதி. கம்யூனிஸ்ட் நாடுகளில் தனி மக்கள் எப்படி அடக்கி ஆளப்பட்டு வருகிறார்களோ அவ்வாறே அமெரிக்காவிலும் அடக்குமுறை வரவர அதிகரித்து வருகிறது. விரோதிகளை அடக்குவதற்கு இதுவே வழி என்று மக்களும் கூசாமல் ஒப்புக் கொண்டு ஆட்சேபிக்காமல் இருந்து வருகிறார்கள்.

இதற்கு என்ன செய்வது என்பது கேள்வி — சுதந்திரம் இல்லையென்றால் சுகம் இல்லை. பலவித கண்ட்ரோல்களுக் கிடையில் என்ன சுதந்திரமோ, சுகமோ இருக்க முடியும்? தனி மக்களின் சுதந்திரம் பறி போகாமலிருக்க வேண்டுமானால் ஒரே வழிதான் உண்டு: ஆசைகளைக் குறைத்துக் கொள்ள வேண்டும். 'முன்னேற்றம்' 'முன்னேற்றம்' என்று ஆசைகளைப் பெருக்கிக்கொண்டே போனோமானால் அரசாங்கத்துக்கு எல்லா அதிகாரத்தையும் கொடுத்துவிட்டுத் தனிமக்கள் அடிமைகளாகப் பாடுபட்டு வாழ வேண்டியதே முடிவு. இது சுக வாழ்வு அல்ல என்று எண்ணினால் வரம்பற்ற முன்னேற்றப் போட்டியை விட்டுவிட்டு ஆசைகளைக் குறைத்துக் கொள்ள வேண்டும்.

ஆசை என்றால் பொருளாசையும் பொருளைக் கொண்டு தீர்த்துக் கொள்ளும் ஆசைகளும் அதில் அடங்கும். மேம்பட்ட பண்பாட்டுக்கு இது அவசியமில்லை. உயர்ந்த வாழ்க்கை வேறு; பொருளைக் கொண்டு சுகம் அடையப் பார்ப்பது வேறு. நம்முடைய பெரியோர்கள் உபதேசித்த வாழ்க்கையில் மேம்பட்ட பண்பாடு உண்டு. பொருளைச் சம்பாதித்து அதனைக் கொண்டு அடையும் சுகங்களை நோக்கமாக வாழ்வது தற்கால நாகரிகப்

போட்டி. இந்த நாகரிகத்தில் உண்மைப் பண்பாடு இல்லை.

நாகரிகப் போட்டியை விட்டொழித்து உண்மையான பண்பாட்டை நோக்கமாக வைத்துக்கொண்டு வாழ்ந்தோமானால் தனி மக்களின் சுதந்திரம் பறி போகாது. நாட்டில் சுகம் தோன்றும்.

நாகரிகப் போட்டியின் விளைவு கவலை. சந்தோஷத்துக்குப் பதில் கவலையே விளைவு.

கூட்டுறவு செய்வது எல்லாருக்கும் சந்தோஷம் தருகிறது. அதனால் தனி மனிதனுக்கும் சந்தோஷம் உண்டாகும்; சமூகத்துக்கும் நற்பயன் தருகிறது. ஆனால் அந்தக் கூட்டுறவு முறை ராக்ஷச அளவுக்குப் பெருகிவிட்டால் அதுவே கம்யூனிஸ்ட் வாழ்க்கையாகிறது. அந்த வாழ்க்கையில் மக்கள் எறும்புக் கூட்டம்; உழைப்பதே அவர்களின் கடமை; தனிப்பட்டவனுடைய உணர்ச்சிகளைக் கவனிக்க வேண்டியதில்லை; அரசாங்கமே பிரதானம். இப்படி மக்களின் சுதந்திரம் பறிமுதலாகியே சமூகம் முன்னேற வேண்டும் என்கிற அரக்க நியதி வேண்டாமென்றால் பொருளாசை வரம்பு கடந்து போகாமல் காத்து, உள்ளத் தூய்மையிலும் உண்மைப் பண்பாட்டிலும் மக்கள் சந்தோஷம் காண வேண்டும். இதற்கு அரசாங்கமும் பாடுபட வேண்டும்.

மக்கட் சமூகத்தை ஒரு யந்திரமாக்கி விட்டு, பொருட் குவியலை நோக்கமாக வைத்துக் கொண்டு, மக்கட் சாதிகள் போட்டி போட்டு வருவதே இந்த யுகத்தின் கவலைக்குக் காரணம். இந்த அறியாமையிலிருந்து உலகத்தை மீட்பது பாரத நாட்டின் கடமை. ரிஷிகள் வாழ்ந்த நம்முடைய நாட்டில் உண்மைப் பண்பாட்டை வளர்க்கும் பணியில் நாம் ஈடுபடவேண்டும். அதை விட்டு மற்ற உன்மத்த நாடுகளோடு நாமும் சேர்ந்து அவர்களுடைய பொய்மான் வேட்டையில் நாமும் கலந்து கொள்வது கவலையே தவிர, சுகம் தராது. உண்மைச் சுகத்தைப் பறிகொடுத்து கவலையைவிலைக்கு வாங்கிக் கொள்ளப் பார்ப்பது அறியாமை.

வல்லரசுகளின் போட்டி முழு நாசத்தில் முடியும்; அந்தக் கட்டத்தை இப்போது அடைந்து விட்டார்கள். மயிரிழைதான் தற்போதுள்ள நிலைக்கும் சர்வ நாசத்துக்கும் இடையிலிருக்கும் தூரம். பாரத நாட்டின் பணி இந்தச் சர்வநாசத்தில் கலந்து கொள்ளாமல் மற்ற நாடுகளுக்கு நாம் வழிகாட்டுவதேயாகும்.

உயர்ந்த பண்பாட்டுக்குப் பொருட் குவியல் போட்டி வேண்டியதில்லை. அந்தப் போட்டியினால் உண்டாகும் விரோதமும் வேண்டியதில்லை. தூய எளிய வாழ்க்கையே சுகம் தரும் என்பதை நாம் நிரூபித்துக் காட்ட வேண்டும்.

மேற்கு வல்லரசு நாடுகளும் ருஷியாவும் போட்டியிட்டுப் போரில் இறங்கி இரண்டு கட்சி நாடுகளும் நாசமாய்ப் போகும்; ஆசிய நாடுகளே எஞ்சி நிற்கும்; அவைதான் உலகத்தை இனி ஆளும் என்று ஒரு அமெரிக்க மேதாவி சமீபத்தில் எழுதினார். அந்த முடிவை நாம் ஆசைப்படவில்லை. எல்லாருமே நன்றாக வாழ்வோமாக. எல்லாருமே மெய்ச் சுகத்தை நாடி பொய்ச் சுகத்தை விட்டொழிப்போமாக.

# தேவிகுளம் தேர்தல்

தேவிகுளம் பீர்மேடு தொகுதித் தேர்தல் முடிந்து விட்டது!

தேர்தலில் கம்யூனிஸ்ட் அபேட்சகர் ஸ்ரீமதி ரோஸம்மா பொன்னூஸ் அபரிமிதமான வாக்குகளைப் பெற்று வெற்றி பெற்றுவிட்டார். இத் தேர்தலைப் பற்றி ஒரு வார்த்தை. ஆட்சிபீடத்தில் அமர்ந்திருக்கும் நிலையில் தேர்தல்கள் எப்படி நடத்த வேண்டும் என்பதைக் கேரள கம்யூனிஸ்ட்டு சர்க்கார் நடத்திக் காண்பித்து விட்டார்கள். கம்யூனிஸ்ட்டு மந்திரிகள் ஒருவரும் தொகுதிக்குப் போய் கம்யூனிஸ்ட் அபேட்சகருக்காகப் பிரசாரம் கடைசி நிமிஷம் வரை செய்யாதது அவர்களது நேர்மையைக் காட்டுகிறது. 'நாங்கள் இந்த ஒரு ஆண்டில் செய்த சாதனையைக் கருதி வோட்டளித்தால் அளிக்கட்டும்!' என்று அவர்கள் இருந்தது. உண்மையிலேயே அவர்கள் ஜனநாயக முறைக்குத் திரும்பி விட்டார்கள் என்பதைக் காட்டுகிறது!

அதற்கு மாறாக, கேரள காங்கிரஸ்காரர்கள் நடந்து கொண்ட விதத்தையும் பார்க்க வேண்டும்.

கேரள கம்யூனிஸ்ட் மந்திரிகள் எத்தனையோ நாட்களுக்கு முன்பு பிரதமர் நேருவைக் கேரள ராஜ்யத்துக்கு விஜயம் செய்யும்படி கேட்டுக் கொண்டார்கள். என்றைக்கோ நேருஜிக்குக் கொடுத்த அழைப்பை, கேரள காங்கிரஸார், இந்தத் தேர்தல் சமயத்தில் உபயோகித்துக் கொள்ளும்படி செய்து, நேருஜியைக் கேரளத்துக்கு அழைத்து வந்து பல இடங்களில் பேசச் செய்தார்கள். கேரள காங்கிரஸ் மகாநாடு கூட்டி நேருஜியைப் பேச வைத்தார்கள்.

நேருஜியின் புதல்வி ஸ்ரீமதி இந்திராவை, தேவிகுளம் தொகுதியில் தேர்தல் பிரசாரம் செய்ய வைத்தார்கள். சென்னை ராஜ்ய மந்திரிகள் திரு கக்கன், திரு காமராஜ் முதலியவர்கள் வேறு இந்தத் தொகுதிக்குச் சென்று பேசியிருக்கிறார்கள்!

இவ்வளவு பலமான எதிர்ப் பிரசாரம் செய்தும் கம்யூனிஸ்ட்டு மந்திரிகள் நிலை பிறழாமல் இருந்ததற்கு அவர்கள் பாராட்டுக்குரியவர்கள்!

''தேர்தலில் வெற்றி பெற்றோம்; காங்கிரஸ்காரர்கள் வரம்பு மீறித் தங்கள் செல்வாக்கை உபயோகப்படுத்திக் கொண்டார்கள். ஆனாலும் வெற்றி பெற்றோம்'' என்று கம்யூனிஸ்டுகள் இனி பெருமையோடு சொல்லிக் கொள்ள முடியும்.


காங்கிரஸில் புகுந்த ஊழல்களைக் களையக் காங்கிரஸ் மேலிடம் திட்டம் வகுத்திருக்கிறது.
ஊழல்

காங்கிரஸ் திட்டம்



அமெரிக்க உதவி ஜனாதிபதி தென் அமெரிக்காவில் சுற்றுப் பிரயாணம் செய்த போது, பலமான ஆர்ப்பாட்டங்களைச் சமாளிக்க வேண்டியிருந்தது.
இது தென் அமெரிக்க மக்களின் வேலை.


பிரான்ஸில் நடைபெறும் உள் நாட்டுக் குழப்பம் மேற்கத்திய கூட்டுறவைப் பலவீனப் படுத்துகிறது.


இந்தி வெறியர்களால் உருது மொழியாளர்களுக்கு இழைக்கப் படும் அநீதியை உணர்ந்து பேசியிருக்கிறார் நேரு
உருது

மாற்றாந்தாய் குழந்தைகளா?

# அருள்வாக்கு

நகரத்திலும் வெளியூர்களிலும் குளங்களைப் பொது மக்கள் சரிவர மராமத்து செய்து அவற்றைச் சுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டியது அவசியம். இது ஒரு முக்கியமான சமூகத் தொண்டு. தானங்கள் பலவிதம் உள்ளன. அன்னதானம், வித்தியாதானம் முதலிய பல தானங்கள் உத்தமமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. குளிர் காலத்தில் ஏழைகளுக்குக் கம்பளி தானம் செய்வது சிலாக்யம். அதேமாதிரி கோடையில் ஆங்காங்கு குடிதண்ணீர் வழங்க ஏற்பாடு செய்வது முக்கிய தர்மமாகும். நகரத்தில் மின்சார விசை, குழாய் வசதி முதலியவை இருக்கின்றன. ஆனாலும் இவை திடீரென்று நின்றுவிட்டால் ஒரே கஷ்டம் தான். பதில் ஏற்பாடுகூட உடனே செய்துகொள்ள முடியாத நிலையில் ஜனங்கள் இருக்கிறார்கள். நகரத்தில் குழாய்கள் ஆங்காங்கு ஏற்பாடு செய்யப்பட்டாலும், சில காலத்தில்தான் ஜலம் வரும். ஏழை எளியோருக்குச் சிரமம் ஏற்படக்கூடும். நகரில் பல இடங்களில் குளங்கள் இருக்கின்றன. இவற்றில் சில தேவஸ்தானங்களைச் சேர்ந்தவையாக இருக்கின்றன. இக் குளங்களையெல்லாம் சீர்ப்படுத்தி நல்ல நிலையில் வைத்துக் கொண்டால் எக்காலத்திலும் எல்லாருக்கும் இதனால் சௌகரியமேற்படும். ஸ்நானபானங்களுக்கு அனுகூலமுண்டு. இவற்றைத் தூர் எடுத்து மராமத்து செய்து நல்ல நிலையில் வைக்க எல்லோரும் சேர்ந்து உழைக்கலாம். இது ஒரு சிறந்த சமூகத் தொண்டாகும். சர்க்கார் கார்ப்பொரேஷன் அதிகாரிகளுக்கும் இதில் அக்கறை இருக்க இடமுண்டு. உதவ முன் வருவார்கள். முக்கியமாக, சென்னை நகரத்திலுள்ளோர் இதில் கவனம் செலுத்துவது அவசியம்.

— ஸ்ரீ சங்கராச்சாரியார், காஞ்சி காமகோடி பீடம்

# இலங்கைத் தமிழர் படும் பாடு

கொழும்பு, 17உ

தீவிர சிங்கள வகுப்புவாதியான திரு கே. எம். பி. ராஜரத்ன என்பவருடைய தலைமையில் பௌத்த பிக்ஷுக்களும் சிங்கள வகுப்புவாதிகளும் ஆரம்பித்திருக்கும் தமிழர் பகிஷ்கரிப்பு இயக்கம் சில இடங்களில் உச்ச நிலையை அடைந்திருப்பதாகத் தகவல் கிடைத்திருக்கிறது. களுத்துறை, மொறட்டுவை, வெளிமடை, பாணந்துறை முதலான சில ஊர்களில் தமிழ் மக்கள் மானம் மரியாதையுடன் வாழ முடியாத நிலைமை உருவாகியிருக்கிறது. இங்குள்ள தமிழர் கடைகளின் முன்னால் சிங்கள வகுப்புவாதிகள் தமிழர் எதிர்ப்பு சுலோக அட்டைகளுடன் நின்றுகொண்டு அந்தக் கடைகளில் எவரும் சாமான்கள் வாங்காதபடி பலாத்காரமாகத் தடை செய்கிறார்கள். மறியல் மீறிச் சாமான் வாங்குகிறவர்களின் முகத்திலும் முதுகிலும் தார் பூசி அவமானப்படுத்துகிறார்கள். இதைப் போலீஸார் பார்த்துக் கொண்டு சும்மாயிருக்கிறார்களே தவிர, எவ்விதத்திலும் உதவி புரிவதாயில்லை. தமிழர்கள் போலீசாரிடம் முறையிட்டால்வீண்தொல்லைகளுக்குஉட்படாமல் கடைகளை மூடிவைப்பதே நல்லதென்று உபதேசம் செய்யப்படுகிறது. இவைகளைப் பார்க்கும் பொழுது இலங்கையில் சட்டமும் சட்டத்தைப் பாதுகாக்கும் போலீசும் இருக்கின்றனவா என்பதையே சந்தேகிக்க வேண்டியிருக்கிறது. அனேகம் யாழ்ப்பாணத்தவர்கள் தங்களது கடைகளை மூடிக் கொண்டு யாழ்ப்பாணத்துக்குத் திரும்பிவிட்டார்களாம். இரும்பாமலிருப்பவர்களும் தங்கள் தொழிலை வெகுவாகச் சுருக்கிக் கொண்டு வருகிறார்கள்.

தமிழ்ப் பகுதிகளில் சிங்கள மொழி ஆதிக்கத்தை எதிர்த்துத் தமிழ் மக்கள் நடத்தும் போராட்டத்துக்குப் பதில் நீட்டுவதற்காகச் சிங்களப் பகுதிகளில் தமிழர் எதிர்ப்புப் போராட்டத்தை நடத்துவதாகச் சிங்கள வகுப்புவாதிகள் சொல்லிக் கொள்ளுகிறார்கள். தமிழர்கள் தங்களுடைய தாய் மொழி ஒழிக்கப்படுவதையும் தங்கள் மீது ஒரு அன்னியமொழி பலாத்காரமாகத் திணிக்கப்படுவதையும் எதிர்த்துச் சுதந்திரப் போராட்டம் நடத்துகிறார்கள். புதிய உரிமைகளையோ, சலுகைகளையோ எதையும் கோராமல் பழைய நிலைமை திரும்ப ஏற்பட வேண்டுமென்று கேட்கிறார்கள். ஆனால் சிங்கள மொழிவெறியர்கள் சிங்கள மொழி ஆதிக்கத்தை நிலைநிறுத்தப் பலாத்காரத்தைக் கையாளுகின்றனர். இதன் முடிவு பாரதப் பிரதமர் நேருஜி சமீபத்தில் எச்சரித்ததைப் போல் பயங்கரமானதாயிருக்குமென்பதை அரசாங்கமும் உணருவதாகத் தெரியவில்லை. வகுப்புவாதத்தைப் போக்குவதற்குப் பதிலாக அதற்கு ஊக்கமளிக்கும் முறையிலேயே காரியங்கள் நடந்து வருகின்றன.

திரு வி. சுந்திரலிங்கம் எம். பி. தலைமையில் உள்ள அடங்காத் தமிழர் முன்னணி இம்மாதம் வவுனியாவில் ஒரு முக்கியமான மகாநாடு கூட்டத் திட்டமிட்டிருக்கிறது. தமிழ்ப் பிரதேசங்கள் ஈழ நாடு என்ற பெயருடன் ஒரு தனித் தமிழ் ராஜ்யமாகப் பிரகடனப் படுத்தப்பட வேண்டுமென்பதை இந்த மகாநாடு வலியுறுத்தும். இலங்கை பிரிட்டிஷ் ஆதிக்கத்தின்கீழ் வருவதற்கு முன்னால் தமிழ்ப் பகுதிகள் தனிராஜ்யமாக இயங்கின என்றும், பிரிட்டிஷ் ஆட்சி மறைந்தபின் தமிழ்ப் பகுதிகளில் சிங்கள ஆட்சி ஏற்பட நியாயமேயில்லையென்றும் கூறும் இக்கட்சியினர், ஜனநாயக சோஷலிஸ அடிப்படையில் தனித் தமிழ் ராஜ்யத்தை ஏற்படுத்தி அதை காமன்வெல்தில் ஒரு சுதந்திர அங்கத்தினராக்க வேண்டுமென்று கோருகிறார்கள். தீவிர சிங்களவாதிகளின் வகுப்பு வெறியாட்டம் நீடிக்கும் பட்சத்தில் தனித் தமிழ்நாடு கோரிக்கைக்கு ஆதரவு அதிகரிப்பதை யாரும் தடுக்க முடியாதென்று பொதுவாகக் கருதப்படுகிறது.

உதாரணமாக, கோப்பாய் எம். பி. திரு வி. வன்னியசிங்கம் உடுப்பிட்டியில் நிகழ்த்திய ஒரு பிரசங்கத்தில் தமிழர்களும் சிங்களவர்களும் ஒரு சமஷ்டி அரசியலில் வாழ முடியுமானால் அதுவே நல்லதென்றும் இது சாத்தியமில்லாத பட்சத்தில் தனித் தமிழ் ராஜ்யம் ஏற்படுவதைத் தாம் வரவேற்பதாயும் அறிவித்தார். பெரும்பாலான தமிழர்கள் கருதுவதும் இப்படியேதான்.

— ரஜனி

# எழுத்தாளர் மகாநாடு

மே 31, ஜூன் 1 ஆகிய தேதிகளில் தமிழ் எழுத்தாளர் மகாநாடு கூடப்போகிறது என்பதை யறிந்து மகிழ்கிறோம். வழக்கமாகச் சென்னை நகரில் நடக்கும் தமிழ் எழுத்தாளர் மகாநாடு இந்த ஆண்டு நாகர்கோவிலில் கூடப் போகிறது.

இந்த மகாநாட்டுக்கு வரவேற்புக் குழுத் தலைவராகத் 'தினமலர்' நிர்வாக ஆசிரியர் திரு டி.வி. ராமசுப்பையர் அவர்களையும், மகாநாட்டுத் திறப்பாளராக அகில இந்தியாவிலும் உள்ள எழுத்தாளர்களின் நன்மதிப்புக்குப் பாத்திரமானவரான மத்திய சர்க்கார் கலாசார இலாகா மந்திரி பேராசிரியர் ஹுமாயூன் கபீர் அவர்களையும் தேர்ந்தெடுத்ததிலிருந்தே மேற்படி மகாநாடு கூடுவதற்கு முன்னாலேயே அது பாதி வெற்றி யடைந்துவிட்டது என்று சொல்லலாம். தமிழ் எழுத்தாளர்கள் எல்லாம் இந்த மகாநாட்டில் கலந்துகொண்டு மேற்படி பாதி வெற்றியைப் பரிபூரண வெற்றியாகச் செய்வார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

எழுத்தாளர்கள் எல்லாரும் தனித்து இயங்கும் இயல்புடையவர்கள். அவர்கள் எல்லாரும் ஒரு இடத்தில் கூடி, பரஸ்பரம் அன்பையும் நல்லெண்ணத்தையும் வளர்த்துக் கொள்ள இந்த எழுத்தாளர் மகாநாடு ஒரு நல்ல வழி காட்டும் என்று எதிர்பார்க்கிறோம். அத்துடன் இந்த மகாநாடு தமிழ் எழுத்தாளர்களின் எதிர்கால நன்மைக்கான வழிவகைகளைப் பற்றிச் சிந்தித்து அதற்கு வேண்டியதைச் செய்யுமென்று கருதுகிறோம்.

## வத்னியால் குளுமையுடன் விளங்குங்கள்



என மதுபாலா கூறுகிறார்

இந்த உஷ்ண காலத்தில், நீங்கள் சோர்வடைந்தவுடன் வத்னி சோப்பால் அலம்பிக்கொள்ளுங்கள், நீங்கள் தேன்புடன் திகழ்வீர்கள்—இது சுதேசி சோப்.

கீர்த்திவாய்ந்த சினிமா நக்ஷத்திரம் மதுபாலா உபயோகிப்பதும்; சிபாரிசு செய்வதும், புஷ்பங்களின் புதுமை நிறைந்த வத்னி சோப்பே.




கடைசி செதில் வரை புதுமையும் நறுமணமும் உள்ளது.

மற்றும் வத்னி பேபி



100% சுதேசி

சோப்புகளில் புகழ்பெற்ற பெயர்.

# நாய்ச்சாமி

ராஜாஜி

"பழனி! எனக்கு ஒன்றும் பிடிக்கலேடா! நான் ஆண்டியாப் போகப் போறேன்" என்றான் கிட்டு.

இருவரும் சென்னைத் தெருப்பிள்ளைகள். சென்ட்ரல் ஸ்டேஷனண்டை இவர்கள் குடியிருப்பும் தொழிலும். தொழில் பிரயாணிகளின் ஜோபிகள் வேட்டை.

பழனி அழுதான். "நீ ஆண்டியாப் போயிட்டா நான் என்ன செய்வேன்?"

"அழாதே, பழனி! சாமி இருக்கிறாரடா! எப்படியாவது பார்த்துக் கொள்வார்" என்றான் கிட்டு.

"சாமியாவது கிமியாவது! இந்தப் புது இன்ஸ்பெக்டர் வந்தது முதல் எதுக்கும் இடமில்லையடா. நான் இந்த ஸ்டேஷனை விட்டுத் தொலைத்து, திருவல்லிக்கேணி கடைத் தெருவுக்குப் போகப் போகிறேன்" என்றான் பழனி.

"திருவல்லிக்கேணி வேண்டாம். அங்கே ஒன்றும் இல்லை. எல்லாரும் பிச்சைக்காரப் பயல்கள். நீயும் மயிலேறுவும் மயிலாப்பூருக்குப் போங்கள். அங்கே அவ்வளவு பாரா இல்லை."

"நீயும் வாயேன்" என்றான் பழனி.

"எனக்கு இந்த வேலை பிடிக்கவில்லை. நான் ஆண்டியாத்தான் போவேன். அதோ மயிலேறு ஓடி வரான்."



மயிலேறுவும் பழனியும் பாய்க்கடை பக்கம் போனார்கள். கிட்டு ஒரு மரத்தடியில் உட்கார்ந்து மடியிலிருந்து ஒரு பொட்டலம் எடுத்து அவிழ்த்து உடம்பெல்லாம் சாம்பல் பூசிக் கொண்டான். அங்கிருந்து தெற்கே புறப்பட்டான்.

தெரு நாய் ஒன்று வாலாட்டிக் கொண்டு அவன் கூடவே போயிற்று. அவன் விரட்டினான். விரட்டினாலும் அது கேட்கவில்லை. கொஞ்சம் பின்னால் அவனைத் தொடர்ந்தே போயிற்று. ஒரு வாராவதியண்டை கிட்டு நின்று நாயைப் பார்த்து, "நீ ஏன் என்னோடே வருகிறாய்? போ" என்றான்.

அது வாலை ஆட்டித் தன் தலையைத் தூக்கி அவன் முகத்தையே பார்த்த வண்ணம் நின்றது.

கொஞ்ச தூரம் சென்று மறுபடியும் நாயை அதட்டினான். அது விடமாட்டேன் என்று முன்போலவே கெஞ்சியது.

"என்னிக்கோ ஒரு ரொட்டித் துண்டு போட்டேன். அதற்காகவா என்னோடு வருகிறாய்? போ" என்றான். நாய் அவன் காலை நக்க ஆரம்பித்தது.

போகவில்லை.

"என்னண்டை ஒரு புதுக் காசுதான் இருக்கிறது. இதற்கு ஒரு பிடி வாங்கிக் குடிக்கப் போகிறேன். நீ ஏன் என்னோடு வருகிறாய்? நான் ஆண்டியாய்ப் போனேன், தெரியுமா?" என்றான்.

"தெரியும், தெரியும். ஆனாலும் உன்னோடுதான் வருவேன்" என்றது நாய். அதாவது வாலை ஆட்டிக் கொண்டு அவன் முகத்தை நோக்கித் தன் கருங் கண்களை அகலமாகத் திறந்தது.

★

ஒரு வெற்றிலை பாக்குக் கடைக்குப் பக்கத்தில் நின்றான். "ஒரு பிடி கொடு" என்று காசை நீட்டினான்.

"படவாப் பயலே, ஓடிப் போ" என்றான் கடைக்காரன்.

"கடையண்டை யாராவது வியாபாரம் செய்ய வந்தவர்கள் ஜோபியிலிருந்து திருட வந்தாயா, ஓடிப் போ!" என்று கடைக்காரன் அதட்டினான்.

"சிவ! சிவ! நான் திருடன் என்று எண்ணினீரா! ஐயோ குமரவேலா!" என்றான் கிட்டு.

அப்போது ஒரு போலீஸ்காரன் பெரிய மீசையும் தடியுமாய் வந்தான். கிட்டு, "சிவ சிவ" என்று கொஞ்சம் உரக்கச் சொல்லிக் கொண்டு சென்றான். சொறி நாயும் அவன் கூடவே சென்றது.

★

"சொறி நாயே நான் ஆண்டியாகிப் போனேன். நீ ஏன் என்னை அண்டிக் கொண்டு வருகிறாய்?" என்று மறுபடியும் நாயைப் பார்த்துச் சொல்லி விரட்டினான். விரட்டினாலும் அது போகவில்லை. கொஞ்ச தூரம் திரும்பி ஓடிச் சென்று மறுபடியும் அவனையே தொடர்ந்தது.

தோசை சுட்டுக் கொண்டிருந்த ஒரு கிழவியண்டை கிட்டு நின்றான்.

"இந்தா, காசு! ஒரு அப்பம் கொடு" என்றான்.

வாங்கிப் பாதி தான் வைத்துக் கொண்டு பாதி நாய்க்குப் போட்டான்.

★

கிட்டு பழனியில் அமர்ந்தான். நல்ல சாமியாராகவே ஆய்விட்டான். மரத்தடியில் உட்கார்ந்து வந்தவர்களுக்கு விபூதி தருவான். வியாதியஸ்தர்கள் எல்லாம் அந்த விபூதி பெற்றுக் கொண்டு சொஸ்தப்பட்டார்கள். காசு கொடுத்தால் வாங்க மாட்டேன் என்பான். யாராவது அன்றாடம் அவனுக்குச் சாப்பாடு தருவார்கள். இவனுக்கென்று தந்த சோற்றை முதலில் நாய்க்குப் போடுவான். அது தின்றபின் "போதுமடா, தம்பி!" என்று கேட்பான். அது வாலை ஆட்டிப் படுத்துக் கண்ணை மூடிக் கொள்ளும். அதன் பின் இவன் மிச்சத்தை உண்பான்.

நாய்ச் சாமியார் என்று அவனுக்குப் பெயர். எல்லா வைத்தியமும் பார்த்து விட்



டுச் சுகப்படாத நோயாளிகள் 'நாய்ச் சாமியாரண்டை போவோம்' என்று அவனண்டை விபூதி வாங்கிக் கொள்ள வருவார்கள்.

★

ஒருநாள நாய்க்குக் கால்கள் இழுக்க ஆரம்பித்தது. கண்களில் நீர் பெருகிற்று. தலையைத் தரையில் சாய்த்துக் கிடந்தது.

"ஐயோ, பாவம்!" என்றார்கள், ஆண்டிப் பையனண்டை வந்தவர்கள்.

கிட்டுவும் நாயின் தலையில் விபூதி பூசி, "சிவ! சிவ!" என்று சொன்னான். இரண்டு நிமிஷங்களுக்குள் நாய் தன் உயிரை விட்டது.

முனிசிபாலிடி வண்டி வந்தது. நாயை எடுத்துக் கொண்டு போய்விட்டார்கள்.

★

சாமியாரைக் காணவில்லை. ரொம்பப் பேர்கள் அடிக்கடி வந்து வந்து, "எங்கே நாய்ச் சாமி? எங்கே நாய்ச் சாமி?" என்று விசாரித்தார்கள். கிட்டுவைக் காணவில்லை.

கிட்டு பழனியாண்டவன் மலை மேல் கோயிலில் சந்நிதிக்குப் பின்புறம் சமாதியில் கிடந்தான்.

"குழந்தாய்! துயரப்படாதே. துறவியாகியும் ஒரு நாயிடம் பாசம் வைத்தாயே, வைக்கலாகாது. நாய் என் சொத்து, உனதல்ல. எழுந்து நட!" என்றான் லோகநாதன்.

"நானும் உன் சொத்துத்தானே? என்னை மட்டும் ஏன் இன்னும் அலைய விட்டிருக்கிறாய்?" என்றான் கிட்டு.

"வருவாயா, ஆனால் வா!" என்றான் மகாதேவன்.

★

நாய்ச்சாமியின் பிரேதத்தை ஊரார் எடுத்து ஊர்வலம் செய்து வெகு விமரிசையாகத் தகனம் செய்தார்கள்.

கிட்டுவின் சென்னப் பட்டணத்துச் சகாக்களோ தங்கள் தொழிலை எப்போதும் போல் நடத்திக் கொண்டு வந்தார்கள். மகாதேவன் அவர்களையும் தான் கவனித்து வருகிறான். தெருக் குழந்தைகள் அவனுக்கு மிகப் பிரியம்.



சென்னை, திருவொற்றியூர் நெடுஞ்சாலையில் இருக்கும் கன்னியா குருகுலத்தின் மூன்றாவது ஆண்டு விழா சென்ற பத்தாம் தேதி திரு ஒ. வி. அளகேசன் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது. விழாவில் திருமதி வைதேகி, திரு அக்பர்பிச்சை, திரு கமலக்கண்ணன், திருமதி வெங்கடாசலபதி, திரு எ. கே. சந்திரசேகர முதலியார், திருமதிகள் ஜெயலக்ஷ்மி சுப்பிரமணியம், கமலாம்புஜம்மாள், பார்வதி கக்கன் ஆகியோர் கலந்து கொண்டு சொற்பொழிவாற்றிச் சிறப்பித்தனர். பல போட்டிகளில் தேர்ச்சிபெற்ற கன்னியா குருகுலத்துப் பெண்களுக்குத் திருமதி மேகராமி சபேசன் அவர்கள் தமது செலவிலேயே புடவைகளும் டிரங்குப் பெட்டிகளும் நன்கொடையாக வழங்கியதைப் பாராட்ட வேண்டும். குருகுலச் செயலாளர் திருமதி சரஸ்வதி பாண்டுரங்கம் வந்தனோபசாரம் கூற விழா இனிது முடிவடைந்தது. விழாத் தலைவர் திரு ஒ. வி. அளகேசன் தலைமையுரை நிகழ்த்துவதைப் படத்தில் காணலாம். அவருக்கு அருகில் அமர்ந்திருப்பவர் ஸ்ரீமதி மேகராமி சபேசன்.

# வட்ட மேஜை

## தமிழ் அறிஞர்கள் கடமை

“இது பேசும் மொழியா?” என்ற தலைப்பில் தொகுத்துள்ள கட்டுரை என் சிந்தனையைப் பெரிதும் கவர்ந்தது. 42 சதவிகிதத்தினர் பேசுவதாலேயே இந்தி, இந்தியாவின் ஆட்சி மொழியாக வேண்டும் என்று கூறும் இந்தி வெறியர்களுக்கு, அரசியல் சட்ட வாக்கியங்களையும் இன்னும் சில உதாரணங்களையும் எடுத்துக் காட்டி, அதனால் தமிழ் நாளடைவில் அழியும் நிலை ஏற்படும் என்பதையும் சுட்டிக் காட்டி, இந்தி அரசு மொழியாக ஏற்க முடியாதது, பயனற்றது என்பதனையும் விளக்கியிருப்பது மிக மிகப் பொருத்தம்.

சென்னை—13
13—5—58
பி. கே. சீனிவாசன்

## நல்ல பாடம்

‘இது பேசும் மொழியா?’ என்ற கட்டுரையைப் படித்தேன். நம தமிழ் நாட்டில் இந்தியைப் பற்றி விவாதிக்க அண்மையில், கூடவிருக்கும் மகாநாட்டுச் செயலாளர்களுக்கு இக்கட்டுரை நல்ல பாடமாக அமைந்திருக்கிறது. தமிழன்பர்கள் இக் கருத்தை வரவேற்பார்கள். தமிழகத்தில், இந்தி, ஆளப் பார்க்கிறது. இலங்கையில் சிங்களம் தமிழர்களை விரட்டப் பார்க்கிறது.

கண்டி
12—5—58
டி. கே. எஸ். துரை

## கிராம மக்கள் கஷ்டம்

எங்கள் ஊர் ஓடைமரிச்சான் கிராமம் என்பது. இதைச் சுற்றிக் காந்தபுரம், உடையாம்புளி, நாராயணபுரம், கொல்லங்குளம் ஆக நான்கு கிராமங்கள் உள்ளன. இங்கு குடிதண்ணீர், தெருவிளக்கு, வைத்தியம் போன்ற வசதிகள் கிடையாது.

எங்கள் ஊரில் பஞ்சாயத்து போர்டு ஏற்பட்டுச் சுமார் மூன்று நான்கு வருடங்கள் ஆகின்றன. அவர்களும் இது விஷயமாக நடவடிக்கை எதுவும் எடுக்கவில்லை. இனியாவது சம்பந்தப்பட்ட அதிகாரிகள் கிராம மக்களின் கஷ்டங்களை நிவர்த்திப்பார்களா?

ஓடைமரிச்சான்
5—5—58
ஓ. கு. வள்ளிவேல்

## பரிதாப நிகழ்ச்சி

சிதம்பரம் தாலூக்காவைச் சேர்ந்த நெய்வாசல், தொருக்குழி, கலிகடந்தான், சோழக்கூர் ஆகிய நான்கு ஊர்களுக்கும் உள்ள இரண்டு மைல் நீளமுள்ள மண் பாதையானது களிமண் நிரம்பிக் குளம் போன்று ஐம்பது ஆண்டுகளாய் இருந்தும் அரசாங்கத்தின் கண்களுக்குப் புலப்படவில்லை. ஏதோ தென்னாற்காடு மாவட்ட மன்றத்தினர் கண் வைத்து ஒரு பெரும் தொகை அனுமதித்தனர். கற்கள் கொண்டு வந்து கொட்டப்பட்டன. அத்துடன் வேலை நின்று விட்டது.

பெய்த பெரு மழையாலும் விரைந்த வரி இஞ்ஜினியர்களின் கருணையாலும் வாய்க்கால்கள் வழியே வரும் நீர் இரு புறமும் ரோடிற்கு மேல் ஒரு அடி எழும்பிப் பாதையை மறைத்து விட்டது. ஊர் மக்கள் இது வாய்க்கால் இது வழி என்று தெரியாமல் வாய்க்காலில் இறங்கி அமிழ்வது தினம் நடக்கும் பரிதாப நிகழ்ச்சியாகும். இதனால் பள்ளிக்கு வரும் சிறுவர்கள் பாதிக்கப்படுகிறார்கள். குடிக்க நீரும் இல்லை ஊராட்சிக் கழகமும் இல்லை. கால் நடைகள் வழுக்கி விழுவதோ கணக்கில்லை. முன்பிருந்த அகலப் பாதையையும் கற்குவியல்கள் அடைத்துக் கொண்டு விட்டன. சாமி வரம் கொடுத்தும் பூசாரி வரம் கொடுக்காத கதையாய்க் கண்டிராக்டர்கள் கண் திறந்து பாராது எங்களைத் தவிக்க விட்டிருக்கின்றனர்.

நெய்வாசல்
9—5—58
நெய்வாசல் வாசி

## ஏழு மைல் யாத்திரை!

எங்கள் ஊரில் கிளை தபால் நிலையம் இருக்கிறது. ஆனால் கவர் கார்டு கேட்டால் இல்லை என்று சொல்லுகிறார்கள். தந்தி கொடுக்கவோ ஏழு மைல்களுக்கு அப்பாலுள்ள திருபுவனம் செல்ல வேண்டும். எங்களுக்குத் தந்தி வந்தால், திருபுவனத்திலிருந்து வந்து சேர இரண்டு நாட்கள் ஆகின்றன. ஆனால் எங்கள் ஊரில் போலீஸ் ஸ்டேஷன், உயர்நிலைப் பள்ளி, மின்சார வசதி எல்லாம் இருக்கின்றன. ஆகையால் பொதுமக்களின் சௌகரியத்தை முன்னிட்டு மேற்படி தபால் நிலையத்தை ஸப் ஆபீஸாக மாற்ற வேண்டுகிறோம்.

திருப்பாச்சேத்தி
2—5—58
நு. சுப்பிரமணியன்

## அதிர்ச்சி வைத்தியம்!

கல்கியில் 11—5—58-ல் “அதிர்ச்சி வைத்தியம்” என்ற தலையங்கத்தில் பாரபட்சமின்றி மற்றவர் கூறத் தயங்கிய கருத்தை ஒளிவு மறைவின்றி யாவருக்கும் புரியும்படி எழுதியிருப்பது பாராட்டத் தக்கது. “நேருஜிக்குப் பின் காங்கிரஸின் ஏகபோகம் நடக்காது” என்ற ஒரு வார்த்தையே அத்தனை கருத்துக்களையும் உள்ளடக்கியதாயிருக்கிறது.

திருப்பூர்
13—5—58
எம். காதர்முகைதீன்

## கேரள ரேடியோ நிலையங்கள்

கேரள ராஜ்யத்தில் மூன்று ரேடியோ நிலையங்கள் உள்ளன. இவற்றுள், திருச்சூர் நிலையம், மற்ற இரு நிலையங்களிலிருந்து ஒலி பரப்பாகும் பெரும்பாலான நிகழ்ச்சிகளை அஞ்சல் செய்யும் நிலையமாக இருக்கிறது. மிக உயர்ந்த ரேடியோவில்கூடத் திருவனந்தபுரம் கோழிக்கோடு, நிலையங்களிலிருந்து ஒலி பரப்பும் நிகழ்ச்சிகள் சரிவரக்கேட்பதில்லை. திருச்சூர் நிலையம் தெளிவாகக் கேட்கிறது.

ஞாயிற்றுக் கிழமைகளில், காலை 9 மணி முதல் 10 மணி வரை “தமிழ்ச் சோலை மாலை தொகுப்பு நிகழ்ச்சி” என்று ஒரு நிகழ்ச்சியைத் திருவனந்தபுர நிலையத்திலிருந்து ஒலி பரப்பு

கின்றனர். இந்நிகழ்ச்சியைத் தமிழ் நாட்டன்பர்கள் கேட்டு ரசிக்கமுடிவதில்லை. ஞாயிற்றுக்கிழமைகளில் காலை ஒன்பது மணியுடன், திருச்சூர் கோழிக்கோடு, நிலையங்களின் ஒலி பரப்பு முடிவடைந்து விடுகிறது. ஆகவே, இந்தக் ''தமிழ்ச்சொல் மாலை'' என்ற நிகழ்ச்சியைத் திருச்சூர் நிலையமும் அஞ்சல் செய்தால்தமிழன்பர்களுக்கு, மிகவும் உபயோகமாக இருக்கும்.

கோயம்புத்தூர்
12—5—58

தா. கி. கணபதி

## பொங்கிவரும் பெருநிலவு

''பொங்கிவரும் பெருநிலவி''ல் உலாவும் கதாபாத்திரங்கள் யாவருமே மிகவும் பழக்கப் பட்டவராகவே தோன்றுகிறார்கள். இருப்பினும் கதாநாயகன் நடராஜன்தான் என்னை முழுதும் கவர்ந்திருக்கிறான்! (நானும் அவனுடைய தொழிலில் ஈடுபடப்போவதினால் இருக்கலாம்!)

இந்த வாரம் கதாசிரியர் அன்யூரிஸத்தை (Aneuryam) பற்றி எழுதியிருப்பது பெரிய ஸர்ஜன்களும் பாராட்டக் கூடிய வகையில் அமைந்திருக்கிறது. கதாசிரியர் ஆப்பரேஷன் தியேட்டரையும் அதிலுள்ள கருவிகள், நர்ஸ்கள்; எல்லாவற்றையும் கண் முன் கொண்டு நிற்க வைக்கிறார். நடராஜன் சஸ்திர சிகிச்சை செய்யும் விதம் அபாரம்.

கி. ராஜேந்திரன் டாக்டருக்குப் படித்தவராக இருக்கவேண்டும் என்பது என் ஊகம்! அவர் திறமைக்கு என் பாராட்டுதல்கள்.

ஹைதராபாத்
9—5—58

வி. சி. நரஸிம்மன்

## சங்கர ஜயந்தி

பல்பல பெரிய மகான்களைப் பெற்றெடுத்த பெருமை பாரத பூமிக்கே உரியது. அத்வைத மதத்தின் சிறப்பை அகில மனைத்தும் பரவச் செய்த ஆதிசங்கரர் அவதரித்த பெருமையும் நமது பாரத புண்ணிய பூமிக்கே உரியது.

அம்மகானின் ஜயந்தி விழாவை ஏப்ரல் 24-ந் தேதி தமிழ் கூறும் நல்லுலக மெங்கும் கொண்டாடினார்கள். நகரங்களிலும் கிராமங்களிலும் பக்தர்கள் ஆதிசங்கரரின் திருவுருவத்தை மேளதாள வாத்தியங்களோடு ஊர் வலமாக எடுத்துச் சென்று மகிழ்ந்தார்கள். விசேஷ பூஜைகளும், சங்கர சரித்திர உபன்யாசங்களும் விழாவைச் சிறப்புறச் செய்தன.

1. காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள் தண்டையார்பேட்டையில் தங்கியிருந்தபோது தண்டையார்பேட்டை பெருமக்கள் ஸ்ரீ சங்கர ஜயந்தி விழாவை வெகு விமரிசையாக நடத்தினார்கள்.

2. சென்னை புரசைவாக்கம் சன்மார்க்க சபையின் ஆதரவில் சங்கர ஜயந்தி விழா நாலு நாட்கள் மிகவும் விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. அதை ஒட்டி லட்சார்ச்சனை, வேதபாராயணம், பஜனை முதலியவை நிகழ்ந்தன. ஸ்ரீ ஆதிசங்கராச்சாரிய விக்கிரகத்தின் ஊர்வலக் காட்சி.

3. புது தில்லியில் நடந்த சங்கர ஜயந்தி விழாக் காட்சி. இவ்வைபவத்துக்கு சுப்ரீம் கோர்ட் நீதிபதி ஸ்ரீ டி. எல். வெங்கட்ராமய்யர் தலைமை வகிக்க, உடையாளூர் ஸ்ரீ ராமமூர்த்தி சர்மா உபன்யாசங்கள் செய்தார். ஆயிரக்கணக்கான தமிழ் மக்கள் விழாவில் கலந்துகொண்டனர்.



வெளியீடு

















# ராயன்

டைரக்ஷன்
ராமண்ணா

திரைக்கதை வசனம்: துறையூர் K. மூர்த்தி சங்கீதம்: G. ராமநாதன்
பாடல்கள்: தஞ்சை ராமையாதாஸ் ஒளிப்பதிவு: T.K. ராஜாபாதர்
கலை: கங்கா . . .

ஆற்காடு, தென்னாற்காடு, செங்கல்பட்டு, சித்தூர் (புதுச்சேரி உள்பட): கீதா பிக்சர்ஸ்.
லகிரி: ஆறுமுகம் பிக்சர்ஸ், பொள்ளாச்சி: ★ திருச்சி & தஞ்சாவூர் (காரைக்கால் &
வேலி: செட்டியார் பிலிம்ஸ், மதுரை: ★ மைசூர் ராஜ்யம்: விஜயா டாக்கி டிஸ்ட்ரிபியூட்
ஸினிமாஸ் லிட்., கொழும்பு: ★ எப். எம். எஸ்.: இந்தியன் பிலிம் கம்பைன்ஸ், பம்பாய்

# வள்ளுவர் வாசகம்

## ராஜாஜி

### 31

நமக்குத் தீமை விளைவிக்கவோ, நம்மை அவமதிக்கவோ கருதுவாரையும் நாம் பொறுத்துக்கொள்ள வேண்டும். எதைப் போல்? பூமியானது தன்னை வெட்டிக் குழி தோண்டுகிறவர்களையும் சுமக்கிறது அல்லவா? அதைப்போல். இதைச் சொல்லி வள்ளுவர் மிக அழகிய ஒரு குறளை நமக்குத் தந்திருக்கிறார்.

அகழ்வாரைத் தாங்கும்
நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை

இகழ்வது செய்கையினாலாவது சொல்லினாலாவது, எவ்வாறாயினும் சரி, பொறுத்துக் கொள்வதே தலை—சிறந்த தருமமும், தலைசிறந்த விவேகமும் ஆகும்.

*       *       *

நமக்குத் தீமை விளைவிக்கப் பிறர் செய்யும் தருமம் வழுவிய செயல்களை நாம் எப்போதும் பொறுத்துக்கொள்ள வேண்டும். 'சில சந்தர்ப்பங்களில் பொறை உதவாது. தீமைக்குத் தீமை செய்ய வேண்டும்' என்று எண்ணுவது தவறு. எந்தச் சந்தர்ப்பத்திலும் பொறையே நல்லது.

பொறையைவிட மேலான செயல் ஒன்று உண்டு. அது பிறன் ஒருவன் இழைத்த தீங்கை மறந்தேவிடல். நினைவில் இருப்பதைப் பொறுத்தல் வேண்டும். அதைவிட நல்லது, அதை மறந்தே விடல்.

இறத்தல் என்றால் வரம்பைத் தாண்டிச் செல்லல், தருமத்தைப் புறக்கணித்தல், பிறர் செய்யும் அறம் வழுவிய செயல் என்பதற்கு 'இறத்தல்' என்று வைத்து அடியில் கண்ட குறளில் இறப்பினைப் பொறுத்தல் வேண்டும், எப்போதும் பொறுத்தல் வேண்டும் என்று உபதேசிக்கிறார்.

பொறுத்தல் இறப்பினை
என்றும் : அதனை
மறத்தல் அதனினும் நன்று.

*[பொறுத்தல்—பொறுத்துக் கொள்க. மறத்தல்—(தொழிற் பெயர்) மறந்து விடுதல்.]*

முடிந்தால் மறந்தே விடுக. அது உன்னால் முடியாது என்றால் பொறுமை காட்டுவாயாக. அது எந்தச் சமயத்திலும் உன் கடமையாகும். இது குறளின் கருத்து.

*       *       *

குற்றத்தைப் பொறுத்துக் கொள்ளாமல் உன்னுடைய சக்தியைக் கொண்டு உனக்குத் தீங்கு இழைத்தவனைத் தண்டித்து விட்டாயானால், அதை உன் வெற்றி என்று யாரும் நினைக்க மாட்டார்கள். அது உனக்கிருந்த பலத்தின் காரியம். தீங்கு இழைத்தவனைத் தண்டிக்கும் சக்தி உனக்கிருந்த போதிலும் அதை நீ பயன்படுத்தாமல் பொறுத்துக்கொண்டாயானால் உலகம் உன்னைப் போற்றும். பலம் இருந்தும் பழிக்குப் பழி வாங்காமல் மன்னித்து விட்டால் அதுவல்லவோ உன் வெற்றி என்கிறார் முனிவர்.

சக்தியற்றவன் பொறுத்துக் கொண்டுதான் தீர வேண்டும். அது பொறையாகாது. சக்தியிருந்தும் கோபத்துக்கு இடம் தராமல் பொறுத்துக் கொண்டால் அது வள்ளுவர் சொல்லும் பொறையாகும்.

ஒறுத்தாரை ஒன்றாக
வையாரே : வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போல்
பொதிந்து.

*[ஒறுத்தல்—தண்டித்தல். ஒன்றாக வையார்—புகழுக்குத் தகுந்தவர் என்று உலகம் கருதாது.]*

பொன்னை மதிப்பதுபோல் பொறுத்தாரை மதிப்பார்கள்.

# கழுகுகளுக்கு விருந்து

**டைபோர் ஸெகல்ஜ்**

அமேஜான் நதிக் கரையில் வசித்து வந்த பூர்வ குடிகளில் ஒரு குறிப்பிட்ட பகுதியினரைக் காண வேண்டுமென்பதுதான் எங்களுடைய குறிக்கோள். வெகு நாட்கள் பிரயாணம் செய்த பின்னரே நாங்கள் அப்பகுதியினர் வசித்த பிரதேசத்தை அடைவது சாத்தியமாயிற்று. அங்கு ஆறு உட்பிரிவுகள் கொண்ட பூர்வகுடிகள் வாழ்ந்தனர். காட்டுப் பகுதியில் ஏராளமாகக் கிடைத்த ரப்பர் செல்வத்தை நாடி வெள்ளையர்கள் அங்கே அடிக்கடி வருவதுண்டு. அவர்களுடன் இந்தப் பூர்வ குடி மக்கள் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தனர். இவர்கள் வசித்த இடத்துக்கு அருகாமையிலேயேதான் வெள்ளையர்கள் முகாமிட்டிருந்தனர்.

அவர்களுக்காக ரப்பர் மரங்களை வெட்டியும், பாலைச் சேகரித்தும், பட்டைகளைச் சீவியும் பல வகைகளில் இக்குடிகள் வேலை செய்தனர். அதற்குக் கூலியாகச் சிறு கத்திகளும், சமையலறைக் கத்திகளும், வெட்டுக் கத்திகளும், உப்பும், நிஜார், சட்டை வகைகளும், புகையிலையும் இதர வகைப் பண்டங்களும் அவரவர்கள் விருப்பத்துக்கேற்றபடி கொடுக்கப்பட்டன. இந்த வெள்ளையர்கள் முகாம்களிலிருந்து வந்தவர்களிடமிருந்து இக்குடிகள் போர்ச்சுகீசிய பாஷை கற்றுக் கொண்டனர். அம் மக்களின் பாஷையைக் கற்றுக் கொள்ளவும், அவர்களுடன் பேசவும் இது எங்களுக்கு மிகவும் உதவியது.



டைபோர் ஸெகல்ஜ்

குடிமக்களில் பெரும்பான்மையினர் ரப்பர் வியாபாரிகளிடம் வேலை செய்தாலும், எல்லோருமே அவ்விதம் தொழில் புரியவில்லை. அவர்களுடைய தலைவனான ஜென்தெரை என்பவன், காட்டுக்குள் ஒரு சிறுகூட்டத்தினருடன் தனியேதான் வசித்தான். வெள்ளையரை முதன்முதலாகப் பார்த்ததிலிருந்தே அவன் அந்த இடத்தை விட்டு விலகி, வெகுதூரம் உள்ளே சென்று வசித்து வந்தான். முதல் சந்திப்பின்போதுதான் இரு தரப்பினருக்கும் சண்டை மூண்டு! உயிர்ச் சேதம்கூட ஏற்பட்டதாம். அந்தத் தலைவன் வாயிலிருந்தே அந்த வரலாற்றைக் கேட்டுத் தெரிந்து கொள்ள ஆவல் கொண்டேன். இதற்காக அவனைத் தேடிக் கொண்டு காட்டினுள்ளே அலைந்து திரிந்து கடைசியில் அவனைக் கண்டு பிடித்து அவனுடன் அவன் குடிசையிலேயே தங்க வசதி செய்து கொண்டேன். எதிரிகளைக் கூட்டம் கூட்டமாகக் கொன்று குவிப்பவன் என்று பிரசித்தி பெற்ற அத் தலைவன், தன்னுடன் வசிக்க என்னை அனுமதித்தது எனக்கு ஒரு பெரும் வெற்றியேயாகும்.

இவ்வாறாக, ஜென்தெரை என்ற அந்தப் பூர்வ குடிகளின் தலைவனும், பத்திரிகையாளன் என்ற முறையில் ஆயிரக் கணக்கான மைல்களுக்கு அப்பாலிருந்து அவனைப் பேட்டி காண வந்திருந்த நானும் எதிர் எதிராக உட்கார்ந்திருந்தோம். முதலில் அவன்தான் பேச்சைத் தொடங்கினான்.

" கழுகுகளுக்கும் பருந்துகளுக்கும் நான் ஏற்கெனவே நிறைய விருந்து அளித்திருக்கிறேன் " என்றான் தலைவன். சண்டையில் இறந்தவர்களைக் கழுகு தின்றதைத்தான் அவன் இவ்வாறு குறிப்பிட்டான்.

" அது எப்படி நடந்தது? எனக்குச் சொல்லு! " என்று நான் ஆர்வத்துடனும் ஆச்சர்யத்துடனும் அவனைக் கேட்டேன்.

ஒரு நீண்ட மௌனம். தலைவன் ஐந்து வருஷங்களுக்கு முன்னால் நடந்த சம்பவங்களை நினைத்துப் பார்த்து அவற்றை முறைப்படுத்திக் கொண்டிருந்தான் என்பது அவன் முகத்திலிருந்து தெளிவாகத் தெரிந்தது. கடைசியாக அவன் பேசத் தொடங்கினான் :—

" வெள்ளைக்காரர்கள் இந்தியர்களை மிரட்டி வேலை செய்யும்படி அதிகாரம் செலுத்தினர். மழையென்றும், வெய்யில் என்றும் பாராமல் வேலை செய்யச் சொன்னார்கள். இந்தியர்கள் அவ்வாறு வேலை செய்வதை விரும்பவில்லை " என்றான் தலைவன்.

இதிலிருந்து வார்த்தை வளர்ந்ததாம். பேச்சு முற்றிக் கைகலப்பு ஏற்பட்டதாம். வெள்ளைக்காரர் கோஷ்டியிலிருந்த ஒன்பது பேர்களில் நான்கு பேர்கள் தலைவனைச் சூழ்ந்து கொண்டு அவனை ஒரு மரத்தில் கட்டிக் கொன்று விடுவதாகப் பயமுறுத்திப் பல வகைகளில் துன்பப் படுத்தியதோடு அவமானப்படுத்தினார்களாம்.

கொஞ்ச நேரத்துக்கெல்லாம் தலைவனைச் சேர்ந்த ஒரு சிறுவன் அங்கு வந்து அவனைக் கட்டவிழ்த்து விடுவித்தானாம். உடனே தலைவன் ஆத்திரத்துடன் ஒரு கோடரியை எடுத்துக் கொண்டு சென்று, அந்த நான்கு வெள்ளையர்களையும், என்ன நடக்கிறதென்று அவர்கள் உணர்ந்து கொள்ளு முன்பே, கொன்று விட்டானாம். அவர்கள் போட்ட

கூக்குரலைக் கேட்டு முகாமிலிருந்து மீதி ஐந்து வெள்ளையர்களும் அவசர அவசரமாக அங்கே ஓடி வந்தார்களாம். ஜென்தெரையும் அவனுடைய குடி மக்களும் பொழிந்த அம்புமாரி தான் அவர்களை வரவேற்றதாம். ஐந்து பேர்களில், நடந்த வரலாற்றை வெளி உலகத்துக்குத் தெரிவிக்க ஒருவர்கூட உயிருடன் திரும்ப வில்லையாம். எல்லோரும் அங்கேயே கோரமாகக் கொல்லப்பட்டனர்.

அந்தக் குடிமக்களுக்கு வெள்ளைக்காரர்களுடன் ஏற்பட்ட முதல் சந்திப்பு அப்படி அலங்கோலமாக முடிந்தது.

ஆனால் இந்த ஒரு சம்பவத்திலிருந்து மட்டும் 'கூட்டத்தையே கொல்லுபவன்' என்ற சிறப்புப் பெயர் ஜென்தெரைக்குக் கிடைத்து விடவில்லை. அவன் கூறியது போலவே ஏழு இந்திய மக்களை ஒரு சமயம் கொன்று தீர்த்து அவர்களின் சடலங்களைக் கழுகுகளுக்கு இரையாகக் கொடுத்தானாம்.

இவ்வரலாற்றைச் சொல்லிவிட்டு, வேறொரு ருசிகரமான சம்பவத்தைப் பற்றி அவன் சொன்னான். யாகு (Yaku) என்னும் பேய் ஓட்டுபவன் ஒரு சமயம் அவனை விஷம் வைத்துக்கொல்ல முயற்சி செய்தானாம். அதற்காக அவன் சாப்பிடவிருந்த ஒரு பானத்தில் விஷக் கிழங்குகள் சிலவற்றைப் பிழிந்து விட்டிருந்தானாம். இப்படிச் செய்வது அவனுக்கு ஒரு விளையாட்டு போன்றது. இதில் அவன் மகிழ்ச்சியே கொண்டான். ஆனால் அதை அருந்திய ஜென்தெரையோ அசாதாரண பலசாலியானதால் மரணமடைய வில்லை; சற்று அசௌக்கியமடைந்தான். அவ்வளவே!

ஆனால் சில நாட்களுக்குப் பின் யாகு மற்றொரு குடியின் தலைவனான மூடான் என்பவனை இதேபோல் பானத்தில் விஷம் கலந்து கொல்ல முயற்சி செய்தான். மூடான் ஜென்தெரையின் நண்பன். அவனும் உடல் நலம் குன்றினான். அவன் ஜென்தெரைக்குச் சேதிசொல்லி யனுப்பும் வகையில், விஷத்தினால் தோய்த்து எடுத்து அலங்கரிக்கப்பட்ட ஒரு அம்பை அனுப்பினான்; தான் அசௌகரிய முற்றிருப்பதையும் அதற்குக் காரணத்தையும் அவன் விளக்கிச் சொல்லி அனுப்பி யிருந்தான்.

நடந்த விஷயத்தை ஊகித்தறிந்து கொண்ட ஜென்தெரை, உடனே தன்னுடைய அலங்காரத் தலையணியை அணிந்து கொண்டான். புலித்தோலை உடுத்திக் கொண்டான். நேராக மூடான் வசித்த கிராமத்துக்குச் சென்றான். அங்கே பல நண்பர்களைச் சந்தித்தான். அவர்களிடையே விஷம் வைத்துக் கொல்ல முயற்சி செய்த யாகுவும் இருந்தான். உடனே தயங்காது தன் வில்லை வளைத்தான். மூடான் அனுப்பி யிருந்த அந்த விஷம் தோய்ந்த அம்பை அதில் பூட்டினான். யாகுவைப் பார்த்து அதை வேகமாக எய்தினான். யாகு அடுத்த கணம் பிணமாகக் கீழே சாய்ந்தான்.

இதைப் பார்த்துக் கொண்டிருந்த மூடான், ''இவன் சடலம் கழுகுகளுக்கு இரையாகட்டும்'' என்று உத்தரவிட்டான்.

அவன் வார்த்தைக்குக் கட்டுப்பட்ட ஜென்தெரை அவ்வாறே செய்தான். அவனுக்கும் இந்த விஷக் கிழங்கைப் பற்றித் தெரியுமாதலால், மூன்று இந்தியக் குடிமக்களை மற்றொரு சமயம் தக்க காரணத்துக்காக விஷம் வைத்துக் கொன்றிருக்கிறான்.

இதைப் பற்றியெல்லாம் சொல்லிக் கொண்டிருந்த ஜென்தெரை முடிவாக, ''இப்போது அதையெல்லாம் எதற்காகப் பேச வேண்டும்? எப்போதோ நடந்த சம்பவங்கள். நாம் இப்போது நடனமாடச் செல்வோம்'' என்று சொல்லி என்னையும் அழைத்தான்.

ஆமாம். அவனுடனும் அவனைச் சேர்ந்த குடிமக்களுடனும் நடனமாடும் வாய்ப்பும் எங்களுக்குக் கிட்டியது. நாணற் கோரைகளையே புல்லாங்குழல் போல் அவர்கள் ஊதி இசை எழுப்பினர். அதற்கு இணங்க நாங்கள் கொம்மாளம் அடித்து நடனம் ஆடினோம்.

* * *

அன்றொரு நாள் அதிகாலையிலிருந்தே ஜென்தெரையின் இரு மனைவியரும் மற்றப் பெண்களும் அருகாமையிலிருந்த சோளக் கொல்லையிலிருந்து சோளம் சேகரித்து எடுத்து வந்த வண்ணம் இருந்தனர். குடிசைக்குள் கொண்டு சேர்த்ததுமே தானியத்தைத் தண்ணீரில் போட்டு வேக வைத்தனர். எட்டுவயது சிறுமியிலிருந்து எண்பது வயது கிழவி வரையில் எல்லோரும் ஒன்றாக உட்கார்ந்து வேக வைத்த இந்தச் சோளத்தை ஒவ்வொரு பிடியாக அள்ளி மென்று தின்னத் தொடங்கினர்!

அவர்கள் ஒரு கிண்ணத்தில் கொடுத்த பானத்தை நான் வாயருகில் எடுத்துக் குடிக்கப் போகும் சமயத்தில் யாரோ பின்னிருந்து எனது தோளைப்பற்றியது தெரிந்தது.



குழந்தைப் பருவத்திலேயே வில்வித்தைப் பயிற்சி

நான் திரும்பிய போது ஜென்தெரைதான் நின்று கொண்டிருந்தான். அந்தப் பானத்தைக் குடிக்க வேண்டாமென்றும், அதைவிட உயர்ந்த ரக பானம் எனக்காக அவன் பிரத்தியேகமாக வைத்திருப்பதாகவும் சொன்னான். என் கிண்ணத்தை அவனே பிடுங்கி அதிலிருந்த பானத்தைக் கொட்டி விட்டான். பிறகு என்னை அழைத்துக் கொண்டு அக்குடிகள் எல்லாருமே கூடி வாழ்ந்த அந்தப் பெரிய குடிசைக்குள் சென்றான். உள்ளே அவன் மனைவியருள் ஒருத்தியைப் பார்த்து, ''இதோ திரு சாப்புக்கு (அவர்கள்பேசிய முகுராப் பாஷையில் திரு




# சாரங்கதாரா

டைரக்ஷன் · V.S. ராகவன்

திரைக்கதை · வசனம் S.D. சுந்தரம் * பாடல்கள் மருதகாசி * சங்கீதம் G. ராமனாதன்

RIGHTS CONTROLLED BY.....
THE ANNAMALAI CORPORATION [PRIVATE] LTD.,
MADRAS-18.

சாப்பு என்றால் தாடிக்காரன் என்று அர்த்தம்) நாம் வைத்திருக்கும் பானத்தில் கொஞ்சம் கொடு. வடி கட்டுவதற்கு முன் நன்றாகக் கலக்கிக் கொடு'' என்று சொன்னான்.

அவன் என்னுடைய கிண்ணத்தை வாங்கி அதை நிரப்பித் தந்தான். அதை இனிக்கும்படி செய்ய மலைத்தேன் சில சொட்டுகள் விடும்படி ஜென்தெரை கூறினான். அவன் அப்படியே செய்தான். பானம் வெகு ருசியாக இருந்தது. அந்தக் கிண்ணத்திலிருந்த அவ்வளவு பானத்தையும் ஒரே மூச்சில் குடித்துத் தீர்த்தேன். பிறகுதான் வாயில் வைத்த கிண்ணத்தை வெளியே எடுத்தேன்.

பிறகு என்னுடைய நண்பர்கள் இருந்த கிராமத்தை நோக்கி நான் சாப்பிட்ட அந்தப் பிரத்தியேக தயாரிப்பை அவர்களுக்குச் சொரிக செய்யப் புறப்பட்டேன். செல்லும் வழியில் என் சிந்தனைகள் வேகமாக ஓடத் தொடங்கின.

அந்தத் தலைவன் மற்றவர்கள் எல்லோரும் அருந்திய அதே பானத்தை நான் சாப்பிடவேண்டாம் என்று ஏன் தடுத்தான்? எனக்கு மட்டும் 'உயர்ந்ததாக' ஒரு தனி பானம் ஏன் தயார் செய்து கொடுத்தான்? 'கொடுப்பதற்கு முன்னால் நன்றாகக் கலக்கிக் கொடு' என்று ஏன் அவன் தன் மனைவிக்கு உத்தரவிட்டான்? எனக்காக வென்று தனியாக விஷத்தைப் பானத்தில் கலந்து கொடுத்திருப்பானோ? ருசி மாறியிருப்பதை நான் உணராமலிருக்கத்தான் மலைத் தேன் இரண்டு சொட்டுகள் விடச் சொன்னானோ? ஆமாம், இப்போது எனக்குக் கவனத்துக்கு வந்தது, அந்த விஷக் கிழங்கைப் பற்றி அவனுக்குத் தெரியும் என்று. அவன் வாயாலேயே சொல்லியிருந்தானே!



நரமாமிசம் தின்னும் தலைவன்

இப்படிப் பலவாறாகச் சிந்தித்த நான் எனது சந்தேகங்களை என் நண்பர்களிடம் கூறினேன். எனக்கு என்ன ஆறுதல் வார்த்தைகள் சொல்வது என்றே அவர்களுக்குத் தோன்றவில்லை. நான் கொஞ்சம் கொஞ்சமாகச் செத்துப் போய்க் கொண்டிருந்தேன்!

ஆனாலும் அவ்வளவு சுலபமாக நான் செத்துப் போகத் தயாராக இல்லை! எனவே ஏதாவது செய்ய வேண்டும்; அதுவும் உடனடியாகச் செய்ய வேண்டுமே என்று தீர்மானித்துக் கொண்டேன். என்ன செய்வது? அந்தக் கொலை பாதகனைக் கொன்று விடலாமா?

இதென்ன அசட்டு யோசனைகள்? கூடாது. முதலில் எனக்கு ஏதாவது தாமதமின்றிச் செய்து என் உயிரையல்லவா காப்பாற்றிக் கொள்ள வேண்டும். எனது நண்பர் டாக்டர் ரோஸோதான் உதவிக்கு வந்தார். என் குடல் சுத்திக்காக ஏதோ மருந்து கொடுத்தார். அது ஓரளவுக்குத்தான் பலனளித்தது. நான் அருந்திய பானத்தில் பாதியளவு இன்னமும் என் வயிற்றில் தங்கியிருந்தது.

எல்லோரும் அன்றிரவு மிகக் கவலையுடன் படுக்கச் சென்றனர். நானும் திகிலடைந்துதான் இருந்தேன். என்னுடைய பயத்தை வெளிக்குக் காட்டாமல் இருந்ததுதான் நான் செய்த பெரிய காரியம். கயிற்று ஏணையில் ஏறிப் படுத்துக் கொண்டேன். தோட்டாக்கள் நிரம்பிய ரிவால்வரைக் கையில் பிடித்தவண்ணம் விழித்துக் கொண்டே படுத்திருந்தேன். பதினைந்து நிமிஷங்கள் கழித்து மேரி என்னைக் கூப்பிட்டாள்.

''தூங்கிப் போய் விட்டாயா?'' என்றுதான் அவள் கேட்டாள். ஆனால் அவள் கேட்டதன் உள் அர்த்தம் எனக்குத் தெரியும். ''நீ இன்னமும் உயிருடனிருக்கிறாயா?'' என்பதற்குப் பதிலாகத்தான் அவள் அப்படிக் கேட்டாள்.

''என் தொண்டையெல்லாம் வீங்கி நெஞ்சை அடைப்பது போல் தோன்றுகிறது'' என்று பதிலளித்தேன்.

மேலும் அரைமணி நேரம் கழித்து அவள் திரும்பவும் என்னைக் கூப்பிட்டாள்.

''என் வயிறு என்னமோ கனக்கிறது'' என்று பதிலளித்தேன்.

என் கால்கள்கூடச் செயலிழந்து விட்டன போல் தோற்றம்.

கலவர மடைந்திருந்த என் மனம் 'மரணம்' என்பது எப்படி, எவ்வாறெல்லாம் ஆரம்பித்து வேலைசெய்யும் என்றெல்லாம் கற்பனை செய்யத் தொடங்கியது.

கடைசியாக எப்படியோ நான் தூங்கி விட்டேன். மறுநாள் காலை வெகு நேரம் கழித்துத்தான் நான் விழித்தெழுந்தேன். என்னைச் சுற்றிலும் என் நண்பர்கள் கவிழ்ந்து கொண்டிருந்தனர். கையில் கண்ணாடிகளை வைத்துக் கொண்டு என்னுடைய உடல் வெறும் சடலந்தானா? அல்லது உயிருள்ள மனிதனின் உடல்தானா என்று ஆராய்ந்து கொண்டிருந்தனர். நான் எழுந்து ஏணையை விட்டு வெளியே வந்தேன். எவ்விதவலியும் எனக்குத்தெரியவில்லை.

ஜென்தெரை என்னை உண்மையிலேயே விஷம் வைத்துக் கொல்ல எண்ணினானா? அல்லது அவன் என்னைக் கௌரவிக்கவே பிரத்தியேக பானம் தயாரித்து, தனது குடும்பத்தினர் மட்டுமே உபயோகிப்பதை எனக்கும் கொடுத்தானா? இதன் உண்மையை யாரால் அறிந்து கூற முடியும்? அதன் உண்மை அவனுக்கும் கடவுளுக்குந்தான் தெரியும்.



எனது குமாரன் ஸி. ராஜாராமனுக்கு 5-5-58 அன்று உபநயனம் விமரிசையாக நடைபெற்றது. அவ்வமயம் பிரமுகர்கள் பலர் வருகை தந்து சிறப்பித்தனர். இரவு தஞ்சை குமாரி பிரேமா பார்ட்டியாரின் இன்னிசையும் நடைபெற்றது. வாழ்த்தும் அன்பளிப்பும் அளித்த அன்பர்களுக்கு இதன் மூலம் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

**டாக்டர் எஸ். சீனிவாஸன்**
ஹோமியோ பிஸிஷியன் & ஸர்ஜன்
டைரக்டர், ஹானிமான் ஹோமியோ இன்ஸ்டிட்யூட்
திருவாரூர்



சகிக்க முடியாத உபாதை; தூக்கமும் கிடையாது; சுகமான நித்திரைக்கும் உபாதை நிவர்த்திக்கும்

**எப்ரிலிம்**

# EPHRILIME





நீண்ட நாள்பட்டதும், மிக்க உபாதைத் தரக்கூடியதுமான மார்ச்சளி, ஆஸ்த்மா முதலிய நோய்களுக்கு ஓர் சிறந்த ஹானியற்ற மருந்து.

## யூனியன் டிரக் கம்பெனி லிட்.

மதராஸ் டிப்போ:
2, ஜோன்ஸ் லேன் :: மதராஸ்-1

# ஏற்றுமதிகள் இப்போது இரு விதத்தில் பலன் அளிக்கின்றன

அவை, தற்போது ஆபத்தான அளவுக்குக் குறைந்துள்ள அன்னிய நாணயக் கையிருப்பை அதிகப்படுத்துகின்றன

அதிக ஏற்றுமதிகளால் தொழில்துறை அலுவல்கள் அதிக மும்முரமாக நடைபெறுகின்றன. அதன் பலனாக ஐந்தாண்டுத் திட்டம் சுலபமாக நிறைவேறுவது சாத்தியமாகிறது

ஏற்றுமதி, வர்த்தக சம்பந்தமான எல்லா விஷயங்களிலும் உங்களுக்கு உதவி அளிக்கவும், ஆலோசனைகள் கூறவும் சகல வசதியுடன் எமது பாங்கு இருக்கிறது

## தி இந்தியன் பாங்க் லிட்.

தலைமை ஆபீஸ்:
வடக்கு பீச் ரோடு, சென்னை-1



தென்னாடு முழுவதும் மற்றும் இந்தியா, சிலோன், மலேயா, சிங்கப்பூர் நாடுகளின் முக்கிய நகரங்களிலும் கிளைகள் இருக்கின்றன.

உலகின் எல்லா பாகங்களிலும் பிரதிநிதிகள் உள்ளனர்.

காரியதரிசி
D. P. பார்த்தசாரதி

## அத்தியாயம் 7

# சிவசக்தி தாண்டவம்

திருவாசகப் பெருமகனின் ஆனந்த மனோலயத்துக்கு அன்றொரு நாள் அபிநயம் பிடித்துக் காட்டிய செங்கமலம், இன்றைக்குக் கவிஞன் பாரதியின் சக்தித் திருக்கூத்தை ஆடத் தொடங்கினாள். நடனத்தின் ஆரம்பமே பொறுமை கொண்ட பூமித்தாய் பூகம்பத்தால் வெடித்துக் கிளம்புவதுபோல் மயிர்க்கூச்செறிய வைத்தது. உலகப் பிரளய, ஊழிக் கூத்தின் பயங்கரத் தாண்டவக் கற்பனையா இது?

செங்கமலம் ஆடினாள்; பாடினாள்:

**''அன்னை! அன்னை!**
**ஆடுங்கூத்தை நாடச்செய்தாள் என்னை!**

**பாழாம் வெளியும்**
**பதறிப் போய்மெய் நோவச்—சலனம்**

**பயிலும் சக்திக்**
**குலமும் வழிகள் கலைய—அங்கே**

**ஊழாம் பேய்தான்**
**'ஓஹோஹோ!' வென்றலைய—வெறித்**

**துறுமித் திரிவாய்,**
**செருவெங் கூத்தே புரிவாய்!''**

**(அன்னை! அன்னை!)**

தணிகாசலம் பிரமித்துப் போனான்: செங்கமலத்தின் வாழ்க்கை பாழ்வெளியாய்ப் போய்விட்டதா? அதனால் அவள் பதறுகிறாளா? ஊழ்வினைப் பேய் 'ஓஹோஹோ!' என்று கொக்கரித்து அவளைத் துரத்திக் கொண்டு வருகிறதா?—செங்கமலம் நடனம் என்ற பெயரில் தன்னுடைய வாழ்க்கையைக் கூறி இப்படி முறையிடுகிறாளா?

தொடர்ந்து ஆடினாள் அந்தப் பெண் செங்கமலம்.

**''காலத் தொடுநிர்**
**மூலம் படுமூவுலகும்—அங்கே**

**கடவுள் மோனத்**
**தொளியே தனியா யிலகும்—சிவன்**

**கோலங் கண்டுன்**
**கனல்செய் சினமும் விலகும்—சிவன்**

**கோலங் கண்டுன்**
**கனல்செய் சினமும் விலகும்!''**

துரித கதியில் பளீர் பளீரென்று உணர்ச்சி மின்னல்களை வீசி அவள் ஆவேசங் கொண்டு சுழன்றாள். மிகச் சாதாரணமான உடல் அசைவுகளின் மயக்கப் போதைக்கு அங்கு இடமில்லை. மெல்லிய நளின உணர்ச்சிகளைக்கூட அவள் வெளியிடவில்லை. அவளுடைய கண்வீச்சில் மின்னல்கள் நெளிந்தன: கரவீச்சில் பெரும் புயல் சீறியது; பாதக் குழம்பில் அகிலமே அதிர்ந்தது. செங்கமலம் நெருப்பு மழை பொழிந்தாள்.

ஆட்டம் முடிந்தவுடன் அவளால் தரையில் நிற்க முடியவில்லை. திடீரென்று தரையில் குப்புற விழுந்து சற்று நேரம் மயங்கிக் கிடந்தாள். பிறகு மெல்ல எழுந்து, குனிந்தபடியே தரையில் சுற்றும் முற்றும் பார்த்து, தான் கிழித்தெறிந்த தணிகாசலத்தின் கடிதத் துணுக்குகளைப் பொறுக்கினாள். அவற்றை ஒன்றாகச் சேர்த்து நடராஜப் பெருமானுக்கு முன் நெருப்பிலிட்டாள். சூட தீபாராதனை கண்டு கன்னங்களில்



போட்டுக் கொள்வது போல், தன் கன்னங்களில் அவள் ஆவேசத்துடன் வேகமாக அறைந்து கொண்டாள்.

"இதை நான் இவ்வளவு நாள் வைத்திருந்தது தப்பு!—தப்பு! தப்பு! தப்பு!" என்றாள். அவள் கன்னங்கள் அவள் விரல்கள் பட்டுக் கன்றிச் சிவந்தன.

"என்ன செங்கமலம்! உனக்கு 'வெறி பிடித்து விட்டதா? இல்லை......"

"இல்லை; இதுவரையில் அவரிடமே நான் குறை கண்டு கொண்டிருந்தேன்." அவள் குரல் தழுதழுத்தது. "என் குறை எனக்குத் தெரியவில்லை. உங்கள் வாயாலேயே என்னுடைய குறையைச் சுட்டிக் காட்டி விட்டீர்கள்."

"என்னை மன்னித்துக் கொள்" என்று கூறித் தலைகவிழ்ந்தான் தணிகாசலம். "உலகம் நினைத்த நினைவிலிருந்து என்னாலும் தப்ப முடியவில்லை. நேற்று உன்னைப் பார்த்ததிலிருந்து வெறுப்பும் வேதனையுமே எனக்கு மிஞ்சின. உன்னுடைய கலை அபாயம் நிறைந்த கலை. நடனத்தைப் பார்ப்பதற்கு வரும் மனிதர்களில் முக்கால்வாசிப் பேர்கள் உன் கலையை ரசிக்க வருவதில்லை. உன் அழகைப் பருக வருகிறார்கள். உனக்கே உன் அழகின் அபாயம் தெரியாது."

"நீங்கள் சொல்வது உண்மைதான். இந்தக் குறைந்த நாள் அநுபவத்திலேயே நான் இதனால் அவதிப்பட்டிருக்கிறேன். சிங்காரம் மட்டும் எங்களுக்குத் துணையாக இல்லாவிட்டால் இந்த மனிதர்கள் என்னைச் சீரழித்து விரட்டியிருப்பார்கள். ஆனால் இன்று வரையில் நான் என் கையைப் பிடித்தவருக்குத் துரோகம் செய்யவில்லை. உங்கள் கடிதத்தை என்னிடம் வைத்துக் கொண்டிருந்த ஒன்றுதான் நான் செய்த துரோகம்.—இனி மேல் தெளிந்து விடுவேன். பட்டினி கிடந்தாலும் பாதகமில்லை."

"சொந்தத்தில் வேறு ஒரு பெண்ணைப் பார்த்துக் கல்யாணம் செய்து கொண்டாரா, குமாரசாமி?"

"அப்படிச் செய்து கொண்டிருந்தால் கூடத் தேவலாமே? நான் சொன்னபோதெல்லாம் அதை அவர் கேட்கவில்லை. இன்னொரு நல்ல குடும்பத்தை அல்லவா அவர் கெடுத்து விட்டார்!"

செங்கமலம் கூறிய விவரங்கள் தணிகாசலத்தை மிகவும் புண்படுத்தின. குமாரசாமியிடம் அவனுக்குப் பற்றுதல் விட்டாலும், செங்கமலமும் அவரும் ஒன்றி வாழ்ந்ததால்; அவரிடம் அவன் மதிப்பு வைத்திருந்தான். இவ்வளவு முறை கெட்டு நடந்து கொள்வார் என அவன் கனவில்கூட நினைக்கவில்லை.

பம்பாயில் அடுத்த வீட்டில் கணவனோடு வாழ்ந்த ஓர் சேத்திப் பெண்ணிடம் அவருக்குப் பழக்கம் ஏற்பட்டதாம். இருவரும் ஓட்டல்கள், ஆட்டங்கள், குடி, கும்மாளம் இப்படி நெறி கெட்டு அலைந்தார்களாம். தொழிலில் நஷ்டம் ஏற்பட்டதல்லாமல், அவரிடம் இருந்த பணத்தையும் அவள் கரைத்து விட்டாளாம். மேற்கொண்டு தொழிலில் போடுவதற்கென்று செங்கமலத்தின் தாயாரின் சொத்து முழுவதையும் விற்றுத் தரச் சொன்னாராம். பெற்றவளைக் கரைவாய்க் கரைத்துப் புதுப்பட்டிச் சொத்துக்களையும் தன்னுடைய நகைகளையும் அவரிடம் கொடுத்தாளாம் செங்கமலம்.

"அவளுடைய புருஷன் இங்கே தொல்லை கொடுத்ததால், அவளை அழைத்துக் கொண்டு சென்னைக்குக் கிளம்பினார். நான் தடுத்துப் பார்த்தேன்; அவர் கேட்கவில்லை. வேறு வழியின்றி நாங்கள்மட்டும் இங்கேயே தங்கி விட்டோம்" என்று கூறினான்.

"கஷ்டத்தோடு கஷ்டமாய்க் கிராமத்துக்குப் போயிருக்கலாமே?" என்று கேட்டான் தணிகாசலம்.

"கிராமத்துக்குப் போய் வீட்டுக்கு என்ன செய்வது? சாப்பாட்டுக்கு என்ன செய்வது? நான் அம்மாளைக் கூப்பிட்டுப் பார்த்தேன். கையில் நாலு காசு சேர்க்காமல் புதுப்பட்டியில் அடியெடுத்து வைக்க அம்மாளுக்கு மனமில்லை. அவளுடைய பேச்சைத் தாங்க முடியாமல் தான் இப்போது ஆடிப் பிழைக்கிறேன். இன்னும் ஐந்தாறு மாதங்களில் புதுப்பட்டிக்கே போய் விடுவோம். கையில் கொஞ்சம் பணம் சேர்ந்திருக்கிறது.

இனிமேல் பையனைப் படிக்க வைத்து எப்படியாவது மனிதனாக்கி விடலாம்.''

தாயாரின் சொல்லைத் தட்ட முடியாதவள் செங்கமலம் என்பது அவனுக்கு ஏற்கனவே தெரியும். அப்படிப்பட்ட தாயாரின் சொத்தையே அவள் கணவனுக்கு வாங்கிக் கொடுத்திருக்கிறாள்! அதுவும் குமாரசாமியைப் போன்ற ஒரு மனிதருக்கு!

''அம்மாளை நான் கெட்டவள் என்று சொல்ல முடியாது. ஆயிரம் ஆயிரமாய்ப் பணத்தை வைத்துக் கொண்டு சில பேர்வழிகள் இங்கு கெட்ட நோக்கத்துடன் வந்தார்கள். அவர்களை விட்டுப் படி ஏறவிடாமல் திருப்பி அடித்தவள் அவள்தான். சிங்காரம் அறைந்த



அறையில் ஒருவனுக்கு முன் வரிசைப் பற்களெல்லாம் விழுந்து விட்டன.''

''இந்த வாழ்க்கை உனக்குப் பிடித்திருக்கிறதா?'' என்று தயக்கத்துடன் கேட்டான் தணிகாசலம்.

செங்கமலம் இதைக் கேட்டுக் கலங்கிப் போனாள். ''நீங்களே இப்படிக் கேட்கலாமா? பையன் ஒருவன் இல்லாவிட்டால் என்றைக்கோ நான் செத்துத் தொலைந்திருப்பேன். அவனுக்காக இந்த உயிர் கிடந்து அடித்துக் கொள்ளுகிறது. ஆட்டத்தின் போது ஒரு சிலர் பல்லைக் காட்டுவதைப் பார்த்தால் அவர்கள் முகத்தில் காறி உமிழத் தோன்றுகிறது. என்னை என்ன செய்யச் சொல்கிறீர்கள்?'' என்றாள்.

இப்படி அவளிடம் கேட்டதற்காகத் தன்னையே நொந்து கொண்டான் தணிகாசலம். அவன் எழுதிய முதல் கதைக்கு அவள் எழுதிய பதில் அவன் நினைவுக்கு வந்தது. 'சமூகத்தில் மற்றப் பெண்களுக்குள்ள மதிப்பு எனக்கு இல்லை. அதற்காகவே இரண்டு மடங்கு பொறுப்புடன் என் பெண்மையைக் காப்பாற்றுவேன். மதிப்புக்காக வாழாமல் மானத்துக்காக வாழ ஆசைப்படுகிறேன்.''

செங்கமலம் தன் கணவனைப் பற்றி அவனிடம் ஒன்றும் தூற்றிப் பேசவில்லை. இருந்தாலும் எல்லையற்ற துன்பங்களை அவள் அநுபவித்துக் கொண்டிருக்கிறாள் என்பதைக் கண்டு கொண்டான். வெளிப் பார்வைக்குக் கலக்கமற்றவள் போல் தெரிந்தாலும், உள்ளே துயரம் அவளைக் கொஞ்சம் கொஞ்சமாகத் தின்று கொண்டுதான் இருந்தது.

தணிகாசலத்தின் மனைவி மக்களைப் பற்றி விசாரித்தாள். தொழில் பற்றிக் கேட்டாள். கதைகளைப் படித்து வருவதாகவும் சொன்னாள். அவனும் அவளுக்குப் பதிலளித்துவிட்டு, ''ஒரு வாரத்துக்கு முன்புகூடக் குமாரசாமி என்னிடம் கதை கேட்டிருந்தார்'' என்றான்.

''தாராளமாய் எழுதிக் கொடுங்கள். ஆனால் முதலிலேயே பணத்தைப் பேசி முடிவு செய்து கொள்ளுங்கள். ஒரு நாளைக்கு ஆயிரமும் ஐந்நூறும் வெட்டிச் செலவு செய்யும் மனிதர் அவர்.''

தணிகாசலம் தனக்குள் சிரித்துக் கொண்டான். பம்பாய்க்கு வந்த இந்த நாலைந்து நாட்களில் இன்றைக்கே அவனால் இப்படிச் சிரிக்க முடிந்தது. அவனுடன் பழகிய நான்கு பெண்களையும் எண்ணிப் பார்த்தபோது, ஒவ்வொருவரும் ஒவ்வொரு வகையில் தனித்தே விளங்கினார்கள். ஆனால் அவர்களுடைய தனித் தன்மையைக் காப்பாற்றிக் கொள்ள அவர்கள் பட்ட சிரமங்கள் மலை போன்றவை. நேற்று வரையில் செங்கமலம் ஒருத்திதான் உல்லாசமாக வாழ்கிறாள் என்று கவலையற்றிருந்தான். அவளுடைய கதியும் இந்த நிலைக்கு இறங்கி வர வேண்டுமா?

நேரமாயிற்று. மாலைப்பொழுது மெல்லிய இருளாக மாறிக் கொண்டு வந்தது. எழுந்து சென்று எல்லா விளக்குகளையும் எரிய விட்டாள் செங்கமலம்.

''நேற்று பாடிய அந்தப் பெண் யார்?''

''பக்கவாத்தியத்துக்காக அந்த மூன்று பேர்களையும் வேலைக்கு வைத்துக் கொண்டிருக்கிறேன். மிருதங்கக்காரரின் மகள் அவள். மாதத்தில் இங்கே பத்து நாட்கள் நடனம் நடந்தால்

அதிகம். மற்ற நாட்களில் அவர்கள் வேறு நடனமாடும் இடங்களுக்குப் போய்விட்டு வருவார்கள்.''

விடைபெற்றுக் கொள்வதற்காக நாற்காலியை விட்டு எழுந்தான் தணிகாசலம். இனிமேல் அவளைப் பம்பாயில் சந்திக்கும் உத்தேசம் அவனுக்கு இல்லை. இரண்டு நாட்களில் சென்னைக்குப் போக வேண்டும். எழுந்தவன் திரும்பவும் உட்கார்ந்து அவள் முகத்தை ஒருகணம் ஏறிட்டுப் பார்த்தான்.

''உன்னிடம் ஒரு சந்தேகத்துக்குப் பதில் வேண்டும்.''

''என்ன?''

''நீ என்னைத் தவருக நினைக்கக் கூடாது. ஏன் எனக்கு முன்னுல் நீ நடனம் ஆடுவதற்கு மறுத்தாய்?''

புன்முறுவல் பூத்தாள் செங்கமலம்.

''நீ குமாரசாமியுடன் வீட்டில் இருந் திருந்தால் நானே உன்னை ஆடச் சொல்லியிருக்க மாட்டேன்.''

அதற்கும் அவள் பதில் சொல்லவில்லை.

''விருப்பமில்லை யென்றுல் சொல்ல வேண்டாம். இனிமேல் எப்போது உன்னை மறுபடியும் பார்க்கப் போகிறேனே, தெரியாது. காரணத்தைத் தெரிந்து கொண்டால் நல்ல மன அமைதியுடன் போய்ச் சேருவேன்.''

''நீங்களே இந்தக் கலையை அபாயகரமான கலை என்று ஒப்புக் கொண்டீர்களே?''

''அதற்காக?''

''ரசிப்பவர்களுக்கு மாத்திரம் அதனுல் சலனமேற்படுவதில்லை. சில நிர்ப்பந்தங்களில் ஆடுகிறவர்களைக்கூட அது தடுமாறச் செய்து விடும்'' என்முள்.

விஷயம் புரியாமல் விழித்தான் தணிகாசலம்.



''வயிற்றுக்காக ஆடும் நடனங்களில் நான் என்னை மறந்து ஆடுவதில்லை. அதனுல் அவை என்னை வஞ்சனை செய்வதும் இல்லை. நெஞ்சுக்காக ஆடும் நடனங்களை அப்படிச் சொல்ல முடியாது. இந்த நடராஜருக்கு முன்னுல் மட்டும் நான் தனியாக ஆடுவது வழக்கம். என்னுடைய நெஞ்சே எனக்கு வஞ்சனை செய்துவிடக் கூடாதல்லவா?''

''நீ என்ன சொல்கிருய்?''

''நேற்று உங்களைப் பார்த்தவுடன் எனக்குப் புதுப்பட்டியில் நடந்த அரங்கேற்றம் நினைவுக்கு வந்துவிட்டது. அன்றைக்கு நடந்த என்னுடைய நடனம்தான் என்னை அதிகமாய் அலைக்கழித்து விட்டது. அதேபோல் நீங்களும் அப்போது நிலைகுலைந்து போனீர்கள். எல்லாம் என் ஆட்டத்தால் வந்த வினைதானே? திரும்பவும் உங்கள் முன்னுல் நான் ஆடப்போவதாகவே கனவு காணவில்லை. திடீரென்று நேற்று என்னையறியாமலே என் வீடு தேடி வந்துவிட்டீர்கள். உங்களைப் பார்த்தபிறகு உங்கள் முன்னுல் ஆடினுல், எங்கே எனக்கு அழிவுகாலம் வந்து விடுமோ என்று நான் பயந்தேன். நானும் துணையில்லாத் தனிப்பெண்; நீங்களும் உணர்ச்சி வசப்படும் மனிதர். என்னையே நான் கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டாமா? நல்லவேளை; நடராஜர் காப்பாற்றினுர்'' என்ருள் செங்கமலம்.

கலகலவென்று நகைத்தான் தணிகாசலம். ''நான் அவ்வளவு அயோக்கியனல்ல'' என்று பெருமையடித்துக் கொண்டான். இப்படிச் சொன்னுனே தவிர, அவள் சொல்லியதும் உண்மையென்பதை அறிந்தான். மனிதர்கள் விநாடிக்கு விநாடி மாறக் கூடியவர்கள். சந்தர்ப்பங்களை விலக்கிக் கொண்டு வாழ்வதே சரியான வாழ்க்கை. துன்பம் தாங்காமல் சிலர் குடித்துக் கெடுகிருர்கள்; சிலர் உற்சாகத்தை விலைக்கு வாங்குகிருர்கள்; இன்னும் சிலர் எப்படியெல்லாமோ தவறி விடுகிருர்கள். தணிகாசலமும் துன்பம் தாங்காமல் நடனம்பார்க்க வந்தவன்தான்.

''நீ மிகவும் கெட்டிக்காரி; சாமர்த்தியசாலி'' என்று சிரித்தான். ''நெருப்புக்கு மத்தியில் வாழ்ந்து கொண்டே அது உன்னைச் சுடாமல் பார்த்துக் கொள்ளுகிருய்'' என்ருன்.

''என்னுடைய தலைவிதி அது. இப்படி ஒரு தங்கை உங்களுக்கு இருப்பதை நீங்கள் தவருக மதிக்கமாட்டீர்களே?''

''தங்கை அவள் கணவனுடன் சேர்ந்து வாழும் காலம் வர வேண்டும்.''

''இப்போதைக்கு அது வராது.''

நம்பிக்கை இழந்த அவள் பேச்சு அவனை வாட்டத் தொடங்கியது. பிறர் துன்பத்தைப் பார்த்துக் கொண்டே, அதைத் துடைக்க முடியாத செயலற்ற தன்மை ஒன்று இருப்பது அவனுக்குப் பிடிக்கவில்லை. பல சந்தர்ப்பங்களில் மனிதன் தன்னுடைய கையாலாகாத தன்மையை உணரத்தான் செய்கிருன். உணர்ந்து பலன் என்ன?

''நீங்கள் அவரைச் சந்தித்தால் மறந்து கூட என் பேச்சை எடுக்காதீர்கள். சொந்த விஷயங்களில் மற்றவர் சொல் அவரிடம் எடுபடாது. வீணுக அதனுல் உங்களுக்கு நஷ்டம்தான் ஏற்படும்.''

"சரி, நான் போய் வருகிறேன்" என்று கூறி அவன் எழுந்தான்.

"முடிந்தால் அவர் நன்றாக இருக்கிறாரா என்பதைத் தெரிந்து கொண்டு எனக்கு எழுதுங்கள். என்னைப் பற்றி அவரிடம் சொல்ல வேண்டாம். என்னைப் பற்றி அவருக்குத் தெரியாமல் இருப்பதே நல்லது. நான் எங்கே எப்படி இருந்தாலும், அவர் நோய் நொடி இன்றி வாழ்ந்தால் போதும். என் விலாசத்தைக் குறித்துக் கொள்ளுங்கள்."

செங்கமலத்தின் பரிவு அவன் கண்களைக் கலங்க வைத்தது. இந்த உலகில் பெண்ணாய்ப் பிறந்தால் அவள் தமிழ் நாட்டு மண்ணில் பிறக்க வேண்டும் என்று எண்ணிக் கொண்டான்.



## அத்தியாயம் 8

# மனிதரை மாற்ற முடியுமா?

பம்பாயில் உமா இல்லை என்பதைத் தணிகாசலம் உடனடியாகச் சென்னைக்கு எழுதியிருந்தான். கௌரியும் கல்யாணி அம்மாளும் எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணிக் குமைந்தார்கள். மனோன்மணியை விட்டால் வேறு இடம் உமாவுக்கு இல்லையே? கௌரி குழம்பித் தடுமாறினாள். கல்யாணி அம்மாளுக்கு விபரீதமான எண்ணங்கள் தோன்றின.

"உமா எழுதிய கடிதங்கள் எல்லாம் வெறும் பொய்! எங்கேயோ கண் காணாத இடத்துக்குப் போய் அவள் தன் உயிரை மாய்த்துக் கொண்டிருப்பாள். உண்மையைச் சொன்னால் நாம் தாங்க மாட்டோம் என்று இப்படிச் செய்திருக்கிறாள்."

கௌரி அதை மறுத்தாள். "உமா பொய் எழுத மாட்டாள். இந்தச் சந்தேகத்தை அத்தானிடம் சொல்லி வைக்காதீர்கள். பிறகு அவர்களைச் சமாதானப்படுத்த நம்மால் முடியாது. கட்டாயம் அவள் இங்கு வரப் போகிறாள். தில்லிக்குப் போன அவள் அப்பா ஏதாவது தகவல் கொண்டு வந்தாலும் கொண்டு வருவார்."

கல்யாணி அம்மாள் உமாவைப் படிக்க வைத்த அவள் அப்பாவைக் குறைப்பட்டுக் கொண்டாள். தன்னையும், கௌரியையும், தணிகாசலத்தையும் நொந்து கொண்டாள். தங்கள் வீட்டில் ஆரம்பத்திலேயே எல்லோரும் அவளிடம் கண்டிப்பாக நடந்து கொண்டிருந்தால் இப்படி நடக்குமா? மாமியும் மருமகளும் எதை எல்லாமோ தங்களுக்குள் பேசிக் களைத்தார்கள். என்னதான் பேசினாலும் 'உமா எங்கே?' என்ற கேள்விக்குச் சரியான பதில் கிடைக்கவில்லை.

தணிகாசலம் பம்பாயிலிருந்து ஒரு விவரமும் இல்லாமல் சென்னைக்குத் திரும்பி வந்தான். வந்தவுடன் கௌரியிடம், "பேராசிரியர் சந்திரசேகரன் இங்கு வந்து விசாரித்தாரா?" என்று கேட்டான். அவர் வரவில்லை.

"குடும்பத்தை மாற்றிக் கொண்டு வருவதாய்ச் சொன்னார். அதனால் ஒரு வேளை தாமதமாகலாம். ஊருக்கு வந்திருந்தால் நம்மை வந்து பார்க்காமல் இருக்க மாட்டார்" என்று அவனே சமாதானம் சொல்லிக் கொண்டான்.

"தாமதமாவதைப் பார்த்தால் ஏதும் தகவல் கொண்டு வருவார் போல் தெரிகிறது. உமா அவள் சித்தியிடம் போனாலும் போயிருக்கலாம். அந்த அம்மாளிடம் சொல்லி அவள் அப்பாவை மாற்றக் கூடாதா, என்ன?"

கௌரியின் பேச்சு முட்டாள்தனமான பேச்சாகத் தோன்றியது அவனுக்கு. உமாவின் கடிதத்தில் அவள் சித்தியிடம் போவதற்கான ஆதாரங்களே இல்லை. என்றாலும் அந்த முட்டாள்தனமான பேச்சையும் அவன் நம்பினான். யார் எதைச் சொன்னாலும் நம்புவதைத் தவிர அவனுக்கு வேறு வழியில்லை.

உரலுக்கு ஒரு பக்கம் இடி; மத்தளத்துக்கு இரண்டு பக்கங்களிலும் அடி. பம்பாய்க்குப் போவதற்கு முன்னால் அவனுக்கு ஒரே கவலை; உமாவின் கவலை. போன பிறகோ இரண்டு கவலைகள். செங்கமலம் வேறு தன் சோகக் கதையுடன் அவன் முன்னால் வந்து நின்று கொண்டாள்.

உடனடியாக அவளுக்கு ஒரு வகை செய்ய வேண்டுமென்று முடிவு கட்டினான் தணிகாசலம். தன்னிடம் கதை கேட்டு அனுப்பிய குமாரசாமியிடம் அவளுக்காகத் தூது போனால் என்ன? அந்த முயற்சியில் வெற்றி கிடைத்தாலும் சரி; தோல்வி கிடைத்தாலும் சரி; இரண்டில் ஒன்று முடிவு தெரிந்து விடும்.

எந்த அடிப்படையில் தூது போவது என்ற சிக்கல் எழுந்தது. செங்கமலமும் அவனைப் போகச் சொல்லவில்லை. குமாரசாமிக்கு அவன் நண்பனுமல்ல; உறவினனும் அல்ல; நம்பிக்கைக்குப் பாத்திரமான நல்ல மனிதனுமல்ல. மூன்றாவது மனிதர்கள் விவகாரம். விபரீதமான பலன் விளைந்தால் என்ன செய்வது?

அருமையான யோசனை ஒன்று தோன்றியது தணிகாசலத்துக்கு. சமுதாயச் சிக்கல்களுக்குப் பரிகாரம் தேடுவதற்கு அவன் சில காலம் தன் பேனாவை நம்பியிருக்கிறான். 'இந்தக் குடும்பச் சிக்கலுக்கும் ஏன் பேனாவைக் கருவியாகக் கொள்ளக் கூடாது? குமாரசாமியோ திரைக் கதை வேண்டுமென்று எழுதியிருக்கிறார். அவருடைய சொந்தக் கதையையே எழுதி அவரிடம்கொடுத்தால்? கதையை அவர் ஏற்றுக் கொள்ளவும் வேண்டாம். படமாக்கவும் வேண்டாம்; ஒரே ஒரு முறை படித்துப் பார்த்தால் போதும்.'

'உமாவின் அப்பா திரும்பி வருவதற்குள் இந்த வேலையை முடித்துவிடலாம்.'

தொழிற்சாலைக்குப் போய் வேலையை ஒப்புக் கொண்டு, செங்கமலத்தின் கதையையும் அத்துடன் எழுத முனைந்தான் தணிகாசலம். அவருக்காக அதை எழுத வேண்டிய நிர்ப்பந்தம் வராவிட்டால் கூட, உண்மையிலேயே அபூர்வமான கதைக் கரு அவள் வாழ்க்கையில் அமைந்திருந்தது. பிறப்பிலிருந்து சுக வாழ்வைத் தவிர சோக வாழ்வையே கண்டதில்லை. புதுப்பட்டிச் சலனம் ஒன்றுதான் அவளைச் சிறிதளவு பாதித்திருக்க வேண்டும். மற்றப்படி வறுமையிலோ, அன்பிலோ, பாசத்திலோ அவளுக்குப் பஞ்சமில்லை. திருவல்லிக்கேணி கடற்கரையில் குழந்தையும் கையுமாக அவளைச் சந்தித்தபோது எவ்வளவு மலர்ச்சியுடன் அவள் காணப்பட்டாள்? குடும்ப வாழ்க்கையின் பூரிப்பு அவள் பொன்னுடலில் புது மெருகு பூசியிருந்ததே!

அந்தப்பூரிப்பையும், பம்பாயில் அவள் பாடிய பாடலையும், ஆடிய ஆட்டத்தையும் ஒப்பிட்டுப்பார்த்தான். 'பெண்ணமுதம் அனையவர் விண்ணதமும் ஊட்டப் பெறுகின்ற சுகமனைத்தும் பிற்பட்டோட' என்ற வரிகளில் ராமலிங்க அடிகளார் தமது துறவு மனப்பான்மையைச்சொல்லியிருந்தார். அதேவரிகளைத் திருப்பித் திருப்பிச் செங்கமலம் பாட வேண்டுமென்றால் அவள் மனம் என்ன பாடுபட்டிருக்க வேண்டும்? துறவு மனம் ஏன் வந்தது? ஊழிக் கூத்தை ஏன் ஆடினாள்? இவ்வளவும் செய்துவிட்டுக் கடைசி கடைசியாக, "அவர் நோய் நொடி இல்லாமல் வாழ்ந்தால் போதும்; எனக்கு அவர் நலனை எழுதுங்கள்" என்று ஏன் கூறினாள்? ஆடிப் பிழைக்கும் கலைக் கணிகையா அவள்?

குமாரசாமி குடிகாரர்; பெண்பித்தர்; நாணயமற்றவர்; எடுப்பார் கைப் பிள்ளை. 'சேற்றில் பிறந்த செந்தாமரை அவள்' என்ற அலட்சியம் அவருக்கு வந்து விட்டதா? குரங்கின் கைப்பூவைப் போல் எப்படி அவளைப் பிய்த்தெறிய அவருக்குத் துணிவு வந்தது? அவள் தான் போகட்டும். தமக்குப் பிறந்த மகனை மறக்கும் மனிதர் ஒரு மனிதரா?

தணிகாசலத்தின் பேனா அவனுடைய மனச்சாட்சிக்குத் துரோகம் செய்யாமல் பற்பல உண்மைகளையும் வெளியிட்டது. கிடைத்த தகவல்களை வைத்துக் கொண்டு, நடந்திருக்கக் கூடியவைகளையும் கற்பனை செய்து, அதை ஒரு முழுக் கதையாக முடித்தான். திரும்பவும் அதைப் படித்துப் பார்த்தபோது அவனுக்கே நடுக்கம் ஏற்பட்டது. 'திருடனைத் திருடனென்று சொல்லலாமா? கொலைகாரனைக் கொலைகாரனென்று சொல்லலாமா? குற்றவாளியைச் சுட்டிக் காட்டலாமா?' இதையெல்லாம் எழுதத் தயங்கும் எழுத்தாளனின் பேனாவைத் தாராளமாகப் பொய்க் கணக்கு எழுது



கிறவனிடம் அவன் அடகு வைத்து விடலாம். தணிகாசலம் தன் பயத்தைப் போக்கிக் கொண்டான். நடப்பது நடந்து விட்டுப் போகட்டும்.

தான் வரப் போவதாக அவருக்கு எழுதி விட்டு, குறித்த நாளில் குமாரசாமியைப் பார்க்கக் கிளம்பினான் தணிகாசலம். பாதி வழி போய்க்கொண்டிருக்கும்போது செங்கமலத்தின் எச்சரிக்கை ஞாபகத்துக்கு வந்தது. 'மறந்தும்கூட என் பேச்சை அவரிடம் எடுக்காதீர்கள். சொந்த விஷயங்களில் மற்றவர் தலையீடு அவருக்குப் பிடிக்காது. வீணாக அதனால் உங்களுக்கும் நஷ்டமேற்படும்.'

"எனக்கு வரும் நஷ்டம் உனக்கு லாபம் தந்தால் போதும்" என்று தனக்

குத்தானே சொல்லிக்கொண்டு, அவரது அலுவலகத்துக்குள் நுழைந்தான். உடனே அவர் பேட்டி கிடைத்தது. கடிதங்களைப் படித்துக் கொண்டிருந்தவர், அந்த வேலையை முடித்துவிட்டு, தணிகாசலத்திடம் திரும்பினார். சாவகாசமாக அவனிடம் பேச்சுக் கொடுத்து ஒருவழியாக முன்னுரை விவகாரங்களை எல்லாம் பேசி முடித்தார்.

தொழில் தோரணையில் பேசாமல் இவ்வளவு நளினமாக அவர் நடந்து கொண்டது அவனுக்கு மிகுந்த வியப்பையும் திகைப்பையும் தந்தது.

"நடந்த விஷயங்களைத் தயவு செய்து மறந்து விடுங்கள். பசுபதி இப்போது என்னிடம் இல்லை" என்றார்.

'செங்கமலம் கூடத்தான் இல்லை' என்று எண்ணிக் கொண்டான் தணிகாசலம்.

அவருடைய தொழிற்துறைப் பேச்சிலிருந்து, அந்தத் துறையில் அவர் நல்லதொரு மாற்றத்துக்கு உள்ளாகியிருந்தார் என்று தெரிந்தது. சொந்தத் திறமையற்ற முகஸ்துதிக் கூட்டத்திலிருந்து விலகி, உழைப்பால் உயர்ந்த சில கலைஞர்களிடமும் தொழிலாளர்களிடமும் அவர் தஞ்சம் புகுந்திருந்தார்.

"எழுத்தாளர் தங்கராஜனையும் டைரக்டர் முத்துவையும் எனக்கு உதவி செய்யச் சொன்னேன். அவர்களே உங்களிடம் கதை கேட்கச் சொன்னார்கள்."

அந்தக் கலைஞர்களின் தயாரிப்பாக வந்த சில படங்களைக் கண்டு களித்திருக்கிறான் தணிகாசலம். தமிழ்ப் பண்பு கொண்ட படங்களை எடுத்து, திரை உலகத்திலேயே ஓர் திருப்பத்தை ஏற்படுத்திக் கொண்டிருந்தவர்கள் அவர்கள்.

"தங்கராஜனுக்கு வேலைகள் அதிகம். உங்கள் நாவல்களை எல்லாம் படித்திருக்கிறாராம். சமீபத்தில் வந்த நாவலைக் குறிப்பிட்டுச் சொன்னார்."

தணிகாசலத்தின் மனம் அந்தக் கலைஞர்களுக்கு நன்றி சொல்லியது. படித்தவர்களிடம் மட்டும் கருத்தைப் பரப்பி வந்தவனுக்கு, படிக்காத பல லட்சம் ரசிகர்களைத் தேடித் தருகிறார்களல்லவா? ஆனால் அவன் கையில் வைத்திருந்த கதைச் சுருக்கம் அவனைச் சும்மாயிருக்க விடவில்லை. யோசனை செய்தான்: 'கொண்டு வந்த கதையைக் கொடுக்கலாமா? அல்லது வந்து கொண்டிருக்கிற வாய்ப்பை ஏற்றுக்கொள்ளலாமா?'

"என்ன யோசனை செய்கிறீர்கள்?"

மேசையைத் திறந்து புத்தம் புது நூறு ரூபாய் நோட்டுக்களாக ஐம்பது நோட்டுக்களை எண்ணி அவனிடம் நீட்டினார் குமாரசாமி. ஐயாயிரம் ரூபாய்! தணிகாசலம் திடுக்கிட்டான்.

"இதை முன் பணமாக வைத்துக் கொள்ளுங்கள்."

"இப்போது எதற்காக? நான் ஒரு வேலையும் செய்யவில்லையே?"

மாதக் கணக்காக உழைத்தவனின் அருமை தெரிந்து முன்னால் ஐந்துரூபாய் கூட நீட்டாதவர், இப்போது எப்படி ஐயாயிரத்தைக் கொடுக்க முன் வருகிறார்? அரசாங்கம் அச்சடித்த நோட்டுக்கள்தானா? செல்லாத 'செக்'கை அவர் முன்பு கிழித்துக் கொடுத்ததாகவும் கேள்விப்பட்டிருந்தான்.

"அவர்கள் தான் சொன்னார்கள். வாழ்க்கையின் ஒவ்வொரு படியிலும் உங்களைப் போல் கஷ்டப்பட்டு முன்னுக்கு வந்தவர்கள் அவர்கள்."

ஐயாயிரம் ரூபாய் புத்தம் புது நோட்டுக்களாக அவர் கையில் பளபளத்தது. ஐயாயிரம் ரூபாய் கிடைத்தால் அது அவனுக்கு அப்போதைய நெருக்கடியில் ஐம்பதினாயிரத்துக்குச் சமம். மேற்கொண்டு வேறு அவர் பணம் தரப் போகிறார். இது நாள் வரையில் கலைமகளின் ஆட்சியைக் கண்டு, அவனிடம்



திருவல்லிக்கேணியில் ஒருமாத காலமாகச் செங்கலிபுரம் ஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர் அவர்களின் ராமாயண உபன்யாசத்தைக் கேட்டுப் பக்தர்கள் பரவசமடைந்தார்கள். மே 11ந் தேதியன்று பட்டாபிஷேக வைபவம் வெகு விமரிசையாக நடந்தேறியது. ராஜாஜி அவர்கள் ராமாயண உபன்யாசத்துக்கு விஜயம் செய்திருந்தார். ஸ்ரீ அனந்தராம தீக்ஷிதரின் உபன்யாசத்தை ராஜாஜி அவர்கள் பாராட்டி, பக்தர்கள் அன்புடன் அளித்த 1500 ரூபாய் பணமுடிப்பையும் அவருக்கு வழங்கினார். ''ராமாயணம் எல்லா பாஷைகளிலும் இருப்பதால் அதை எந்த பாஷையில் வேண்டுமானாலும் படிக்கலாம். பரதன், லக்ஷ்மணன், ஹனுமான், சீதை ஆகியவர்கள் எல்லா விதத்திலும் லட்சிய பாத்திரங்கள்'' என்று ராஜாஜி கூறினார்.

பொறுமையுடன் முகம் சுளித்துக் கொண்டிருந்த திருமகள், இப்போது தான் தன் பிணக்கு நீங்கி முதல் முறையாகப் புன்னகை பூக்கிறாள்!

'செங்கமலத்துக்குப் புதுப்பட்டியில் ஒரு வீடில்லை; நிலமில்லை; ஆட்டத்தால் கிடைத்த பணத்தை அவள் தன் மகனின் படிப்புக்குச் செலவு செய்கிறாள்.'—இந்த எண்ணம் வந்தவுடன் அவரிடம் இருந்த நோட்டுக்கள் அவனுக்கு உபயோகமற்ற குப்பைக் காகிதங்களாகத் தோற்றமளித்தன.

''இப்போதைக்கு எனக்குப் பணம் வேண்டாம். இந்தக் குறிப்பைக் கொஞ்சம் நீங்கள் தனியாகப் படித்துப் பாருங்கள். உங்களுக்கு இன்றைக்கு நேரம் இருக்கிறதா?'' என்று கேட்டான்.

''ஓ! எனக்கொன்றும் அவசர வேலை இல்லை'' என்றார் குமாரசாமி.

''சாயங்காலம் ஏழு ஏழரை மணிக்கு வருகிறேன். அதற்குள் நீங்கள் படித்து விட்டால், பிறகு இதைப் பற்றிப் பேசுவோம்'' என்றான் தணிகாசலம்.

''பணத்தையெடுத்துக்கொள்ளுங்கள்.''

''படித்த பிறகு கதை உங்களுக்குப் பிடித்திருந்தால் பணம் கொடுங்கள். காரணத்துடன்தான் சொல்லுகிறேன். அதைப் படித்துப் பார்த்தால் உங்களுக்கே விஷயம் தெரியும்.''

கதைச் சுருக்கத்தை அவரிடம் கொடுத்து விட்டு, அவர் அனுப்பிய காரில் வீட்டுக்கு வந்தான். தானாக வந்த பணத்தை உதறிவிட்டதுபோன்றதொரு ஏமாற்ற உணர்ச்சியும் ஏற்படாமல் இல்லை. இப்படியொரு தாராள மனம் அவருக்கு எப்படி வந்தது? அவருக்குப் பின்னால் இருந்த கூட்டுறவை நினைத்தான். நல்லவர்கள் பழக்கம் ஏற்பட்டிருப்பதால், கதையைப் படித்து விட்டு, மேற்கொண்டு செங்கமலத்துக்குத் தீங்கு செய்ய மாட்டார் என்ற அளவுக்கு அமைதியடைந்தான்.

அந்த அமைதி அவனிடம் நீடிக்கவில்லை. அவர் சொந்தக் கௌரவம் இதனால் பாதிக்கப்பட்டதென்று அவர் எடுத்துக் கொண்டால்? அவருடைய தன்மான உணர்ச்சி இதனால் புண்பட்டுப் போனால்? தமக்குப் புத்தி சொல்ல இவனுக்கென்ன தகுதி என்று சீறினால்?...

விளக்கு வைத்தவுடன் அவனை அழைத்துக் கொண்டு போவதற்காக அவரது கார் வந்து நின்றது. காரைக் கண்டவுடன் வேர்த்து விறுவிறுத்துக் கொட்டியது தணிகாசலத்துக்கு. காலையில் அவனுக்கு அவர் கார் அனுப்புவதாகச் சொல்லவில்லை. அவனும் அதை எதிர்பார்க்கவில்லை. 'பஸ்'ஸில் போவதற்காகக் கிளம்பிக் கொண்டிருந்த வேளை அது. சுமார் ஏழு மணி இருக்கும்.

குமாரசாமி தமது அலுவலகத்தில் அவனுக்காகக் காத்துக் கொண்டிருந்தார். 'வாருங்கள்' என்று அழைத்து விட்டு அவன் கண்களைக் கூர்ந்து நோக்கினார். அவர் கண்கள் சிவந்து போய்க் கோவைப்பழங்களாகியிருந்தன. அந்தப் பார்வையொன்றே அவன் அடிவயிற்றில் புளியைக் கரைத்தது.

அலுவல் அறையை விட்டு வெளியே அவனை அழைத்துக் கொண்டு வந்தார். டிரைவரை அங்கு தங்கச் சொல்லி

விட்டுக் காரில் ஏறிஉட்கார்ந்தார். 'முன்னால் என்பக்கத்தில் வந்து உட்காருங்கள்' என்று தணிகாசலத்திடம் அதட்டும் குரலில் கூறினர். தணிகாசலம் ஏறிக் கொண்டவுடன் கார் புறப்பட்டு வந்து திருவல்லிக்கேணி கடற்கரையோரமாக நின்றது. அவரையும் அவனையும் தவிர காரில் வேறு யாருமில்லை.

கடற்கரையில் காரை நிறுத்தியவர் சிகரெட்டைப் பற்ற வைத்து வெளியில் ஊதினர். கீழே இறங்கித் தன்னுடன் கடற்கரை மணலுக்குப் போவார் என்று எதிர்பார்த்தான் தணிகாசலம். தன்னிடம் ஏதாவது பேசுவார் என்றும் எதிர்பார்த்தான். இந்த இரண்டில் எதையும் செய்யவில்லை அவர். முதல் சிகரெட் முடிந்தவுடன் அடுத்த சிகரெட்டைப் பற்ற வைத்தார். ஏதோ ஒரு கடிகாரம் எட்டுமணி அடித்தது.



கடற்கரைக்கு வந்தவர்கள் கலைந்து திரும்பிக் கொண்டிருந்தார்கள்.

'கதையைப் படித்தீர்களா?' என்ற கேள்வி அவன் தொண்டையை விட்டு வெளியில் வரவில்லை. பத்து முறை அந்தக் கேள்வியைக் கேட்க முயன்று, பத்து முறையும் அவன் தோல்வியடைந்தான்.

திடீரென்று காரைக் கிளப்பிக் கொண்டு அடையாறு வழியாக ஏதோ ஒரு பாதையில் சென்றார் குமாரசாமி. சென்னைக்கு அவன் வந்து பல வருஷங்களாகியும் அது எந்தப் பாதை என்று தெரியவில்லை. நகரத்தின் எல்லையைத் தாண்டிக் காட்டுப் பாதைக்குள் அவர் காரை விரட்டிக் கொண்டு சென்றார். வேகத்தைக் கண்ட தணிகாசலத்தின் தலை சுற்றியது. எழுபது, எண்பது, தொண்ணூறு! அலைமோதும் கடலில் செல்லும் சிறு கப்பலைப் போல் கார் முன்னும் பின்னும் குலுங்கியது.

இரு புறங்களிலும் அடர்ந்த மரங்களைக் கிழித்துக் கொண்டு சென்றது கார். எந்த மரத்தில் மோதுவதற்காக அவர் குறி பார்த்துச் செல்கிறார் என்பது அவனுக்கு விளங்கவில்லை. வழியில் மனிதர்களையே காணோம். தணிகாசலம், 'இனி வீட்டுக்குத் திரும்பிப் போனால் அது மறுபிறவி' என்று எண்ணினன்.

'டக்' கென்று அவன் தலையில் மோதிவிட்டு ஒரு திருப்பத்தில் நின்றது கார். காரின் வெளிச்சத்தைத் தவிர வேறு விளக்குகள் அங்கு கிடையாது. கதவைத் திறந்து கொண்டு அவர் கீழே இறங்கினர். அவர் பின்னால் தணிகாசலமும் இறங்கினன். இருவரும் காருக்கு முன்னால் வந்து நின்றார்கள்.

வெறி பிடித்தவர் போல் குமாரசாமி தணிகாசலத்தின் தோள்களைப் பற்றிக் குலுக்கினர். தணிகாசலத்துக்குப் பாதி உயிர் முன்பே போய்விட்டது. துப்பறியும் கதைகளில் வருவதுபோல் அவர் எங்கிருந்தாவது துப்பாக்கியை எடுக்கப் போகிறாரோ என்று நினைத்தான்.

''இந்தக் கதையை எழுதி என்னிடமே கொடுக்க உங்களுக்கு எவ்வளவு நெஞ்சுத் துணிச்சல் இருக்க வேண்டும்?''

அவன் பதில் பேசவில்லை.

''இதற்காகவே உங்களை நூறுதரம் தூக்கில் போடலாமே!''

ஒரு தரம் தூக்கில் போட்டாலே அவர் நினைக்கும் காரியம் சுலபமாக நடந்துவிடும். அவர் பேசியதற்கு ஏற்றாற்போல் அந்தக் காட்டுப் பாதையில் நூற்றுக் கணக்கான மரங்கள் வேறு நின்று கொண்டிருந்தன. சுற்று முற்றும் பார்த்து விட்டு அவர் முகத்தைப் பார்த்தான் தணிகாசலம். அவருடைய உள்ளத்து உணர்ச்சிகளை இருளில் சரியாகக் கண்டுபிடிக்க முடியவில்லை.

''நீங்கள் இப்போது என்ன சொல்லுகிறீர்கள்?'' என்று கேட்டார் குமாரசாமி. அவர் கண்களில் கோபக் கனல் தெறித்தது; அவர் தமது கோபப் பார்வையிலேயே அவனைச் சுட்டுப் பொசுக்கி விடுவார்போல் தோன்றியது. இதுவரை அப்படிப்பட்ட கோபத்தை அவன் கண்டதில்லை.

'சொல்வதற்கு இனி என்ன இருக்கிறது? சொல்லவேண்டியதையெல்லாம் எழுத்தில் சொல்லி விட்டேனே!' என்று நினைத்துக் கொண்டு, 'காலையில் கண்ணியமாக நடந்து கொண்ட இந்தக் கதாநாயகர், இப்போது வில்லனாக மாறி விட்டாரே!' என்று எண்ணி அதிசயித்தான் தணிகாசலம்.

''தற்காப்புக்கு இப்பொழுது என்ன வழி?'' என்ற கேள்வி அப்பொழுது அவன் உள்ளத்தில் எழுந்தது. (தொடரும்)

# சாதாரணக் கார் 500 மைல் ரிக்கார்டை முறியடித்தது



# இந்த டயர் அபாயமற்ற சவாரிக்கு உகந்தது என நிரூபித்துள்ளது




கரோலினாவில் நடந்த ''சதர்ன் 500'' என்ற பந்தயத்தில், பயர்ஸ்டோன் டயர்கள் பொருத்தப் பட்ட 'ஸ்பீடி தாம்ஸன்' என்ற சாதாரணக் கார்கள், மணிக்கு 101.09 மைல்கள் ஓடி, 500 மைல் ரிக்கார்டை முறியடித்து, ஒரு புதிய ரிக்கார்டை பதிவு செய்தன. அதிவேகப் போட்டி களில் கேடில்லாமல் உழைப்பதற்கு உரிய திறனுள்ள இந்த டயர்களை உற்பத்தி செய்வதி லுள்ள தொழில் நுட்பம், உங்கள் காரில் பொருத்தப் பட்டுள்ள பயர்ஸ்டோன் டயர்களின் அதிக பாதுகாப்பு தன்மைக்கும், நம்பகத் தன்மைக்கும் உறுதியளிக்கிறது.

**Firestone**

**பயர்ஸ்டோன்**

நியூ டிலக்ஸ் சாம்பியன்

**ட்யூப் இல்லாதது அல்லது ட்யூப் உள்ளது**

**மன நிம்மதியுடன் சவாரி செய்வதற்கென்றே தயாரித்த டயர்**



# கோலாலம்பூரில் மாநில மகாநாடு

**ஜி. மனுவேல்**

மலாயா, சுதந்திரம் அடைந்த ஒரு சில மாதங்களில் உலக நாடுகள் அங்கம் வகிக்கும் ஐக்கிய நாடுகள் சபையில் சேர அனுமதி கோரியது. அச்சபையில் அங்கம் வகிக்கும் மற்ற நாடுகள், மலாயா மீது எதிர்ப்புக் குரலோ கசப்புக் குரலோ எழுப்பாமல் அக் கோரிக்கையை ஏக மனதாக அங்கீகரித்தன. எனவே மலாயா, ஐ. நா. சபையில் எண்பத்திரண்டாவது அங்கத்தினராகச் சேர்ந்து கொண்டது.

மலாயா, ஐக்கிய நாடுகள் சபையில் அனுபவமில்லாத புதிய அங்கத்தினராகச் சேர்ந்தும் கூட மேற்படி சபையின் சார்பில் 'எக்கபே' மகாநாட்டை, அதாவது ஆசிய-தூரக் கிழக்குப் பொருளாதாரக் கமிஷன் மகாநாட்டை மலாயாவிலே நடத்தி உலக நாடுகளைப் பிரமிக்கச் செய்து விட்டது.

மலாயா பெடரேஷனின் தலைநகரமான கோலாலம்பூரில் உள்ள சீனப் பிரமுகர் வீடொன்றைத் திருத்தியமைத்து, 'எக்கபே' மகாநாட்டு அதிகாரிகளுக்குத் தனித்தனி அறைகள், காரியாலயங்கள், மகாநாட்டு மண்டபம் எல்லாம் பிரமாதமாக நிர்மாணித்து விட்டார்கள்.

நிர்மாண வேலைக்கு முக்கியமான பல சாதனங்கள் ஜெர்மனி, ஜப்பான், அமெரிக்கா முதலிய நாடுகளிலிருந்து வந்து சேர்ந்தன. அதை நிர்மாணிக்க மொத்தம் 7,50,000 மலாயன் டாலர் அதாவது பதினொரு லட்சம் ரூபாய்க்கு மேல் செலவாயிற்று. இவ்வளவு பெருந்தொகை செலவு செய்து எழுப்பிய மண்டபம் மகாநாட்டுக்கு வந்த பிரதிநிதிகளை வசீகரிக்காமலிருக்க முடியுமா ?

மலாயா, சுதந்திரம் அடைந்த சில மாதங்களில், எக்கபே மகாநாட்டு நிர்வாகக் காரியதரிசி திரு. வி. வி. நரசிம்மன் கோலாலம்பூர் வந்தார். அவருக்கு அப்போது வெறும் காகிதத்தில் வரையப் பெற்ற மாளிகைதான் காட்டப் பெற்றது. எனினும், மலாயாவின் வளம், மக்களின் உற்சாக உணர்ச்சி எல்லாமாகச் சேர்ந்து மகாநாட்டை வெற்றிகரமாக நடத்தலாம் என்ற நன்னம்பிக்கையை உண்டாக்கின. ஆசிய-தூர கிழக்குப் பொருளாதாரக் கமிஷனின் தலைமைக் காரியாலயம் பாங்காக்கில் அல்லவா இருக்கிறது? மிகுந்த நம்பிக்கையுடன் திரும்பிச் சென்ற திரு. நரசிம்மன், மகாநாட்டுக்கான முஸ்தீபுகள் செய்ய, தமது சிப்பந்திகளுடனும் சகல தளவாடங்களுடனும் மலாயா வந்து சேர்ந்தார்.

கோலாலம்பூரில் நடைபெற்ற எக்கபே மகாநாட்டில் கலந்து கொள்ளப் பல நாடுகளிலிருந்தும் பிரதிநிதிகள் வந்தார்கள். அவர்களில் முக்கியமானவர்கள் நியூஸிலந்து பிரதமர் திரு வால்டர் நாஷ், ஆஸ்திரேலிய வெளி விவகார மந்திரி திரு கேஸி, இந்திய சர்க்கார் கைத்தொழில் மந்திரி திரு மனுபாய் - ஷா ஆகியோர். இருபத்துமூன்று நாடுகளிலிருந்து மொத்தம் இருநூறுக்கு அதிகமான பிரதிநிதிகள் இம்மகாநாட்டில் கலந்து கொண்டார்கள். ரஷ்யாவிலிருந்துதான் அதிகமான பிரதிநிதிகள், அதாவது பதினாறு பேர்கள் வந்தார்கள்.

ஐக்கிய நாட்டு சபையின் பொதுக் காரியதரிசி திரு டாக் ஹாமர்ஷெல்டு அவர்களின் வருகை, கடைசி நேரத்தில் தடைப்பட்டுப் போனதால் அவருக்குப் பதிலாக திரு டி-ஸெனிஸ், எக்கபே மகாநாட்டு நிர்வாகக் காரியதரிசி திரு நரசிம்மன் ஆகிய இருவரும் பிரதிநிதிகளை வரவேற்றார்கள்.

மலாயா பிரதம மந்திரி துங்கு அப்துல் ரஹ்மான் பதினைந்காவது அதிகாரபூர்வமான எக்கபே மகாநாட்டைத் திறந்து வைத்தார். மலாயாவின் துணைப் பிரதமரும், பாதுகாப்பு மந்திரியுமான டத்தோ அப்துல் ரஸாக், எக்கபே மகாநாட்டுக்கு அக்கிராசனராக ஏக மனதாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றார். மகாநாடு பத்து தினங்கள் வரையில் மிக மிக விமரிசையாக நடைபெற்றது. காரசாரமான விவாதங்களுக்குப் பஞ்சமில்லை. ஒவ்வொரு பிரதிநிதியும் அவரவர் நாட்டின் சாதனைகளையும், அபிவிருத்திகளையும் எடுத்துக் கூறினார்கள். பன்மொழி மொழிபெயர்ப்புச் சாதனங்கள் குறைவின்றி அமைக்கப் பெற்றிருந்தன.

மலாயாவுக்கு வந்த பிரதிநிதிகள் மகாநாட்டு அலுவல்களோடு நின்று விடவில்லை. மலாயா மக்கள், தொழிலகங்கள், ரப்பர்த் தோட்டங்கள், ஈயச் சுரங்கங்கள் முதலியவற்றைப் பார்த்தார்கள். சிலர், மலாயாவின் புராதன பட்டினங்களான பினாங்கு, மலாக்கா ஆகிய இடங்களுக்குச் சென்றார்கள். சரித்திரப் புகழ் பெற்ற மலாக்கா செயின்ட் பால்ஸ் குன்றிலுள்ள அதிசயச் சின்னங்களை யெல்லாம் கண்டு களித்தார்கள்.

அம்மகாநாட்டை ஒட்டி மாபெரும் சரித்திரக் கலைக் காட்சியும் நடந்தது. பதினாயிரக் கணக்கான மக்கள் அதைக் கண்டு களித்தனர். சரித்திரக் காட்சிகளில் வைக்கப்பட்டிருந்த பல ருசிகரமான காட்சிகளுடன் பாரதத்தின் தென் பிராந்திய சக்கரவர்த்தி ராஜேந்திர சோழனுக்கும், கடார மலாய்க்காரர்களுக்கும் 1025-ம் ஆண்டில் நடைபெற்ற யுத்தக் காட்சியும் இடம் பெற்றிருந்தது.







(1) மலாயாவிலே நடந்த 'எக்கபே' உலக மகாநாட்டை ஒட்டி நிகழ்ந்த கலைக் காட்சிக்கு மாட்சிமை தங்கிய மலாயா பேரரசரும் பேரரசியும் விஜயம் செய்து கௌரவித்தனர்.

(2) இந்திய கைத்தொழில் மந்திரி திரு மனுபாய் ஷாவுக்கு மலாயா பிரதமர் துங்கு அப்துல் ரஹ்மான் அவர்கள் விருந்தளித்து மரியாதை செய்தார்.

(3) இவர் தான் 'எக்கபே' மகாநாட்டின் வெற்றிக்குப் பாடுபட்டு உழைத்த காரியதரிசி திரு வி. வி. நரசிம்மன் அவர்கள்.

(4) மகாநாட்டில் கலந்து கொண்ட 'எக்கபே' பிரதிநிதிகளுக்கு மலாயா இந்தியப் பெண் மணிகள் நடன விருந்து அளித்து மகிழ்வித்தனர்.



# ஆம் எல்லோருக்கும் என்னைப் பிடிக்கும்...



# ரேடியோ ஸாப்ட்லைட் பல்புகள்

ரேடியோ லாம்ப் ஒர்க்ஸ் லிட.,
பம்பாய் • கல்கத்தா • டெல்லி • கான்பூர் • மதுரை • இந்தூர்.

## ஆஸ்த்மா,பிராங்கைட்டிஸ் ஜலதோஷத்தை நிறுத்துக

ஆஸ்த்மா,பிராங்கைட்டிஸ், ஜலதோஷத்தால் மூச்சுத் திணறல், இருமல், தும்மல் மூச்சடைப்பு உபாதைகளால் அவதிப்படும் பல்லாயிரக்கணக்கானவர்கள் இப்போது மெண்டாகோ (Mendaco) அருந்தி அற்புத நிவாரணம் அடைகிறார்கள். இந்த நவீன, விஞ்ஞான அமெரிக்க மருந்து இரத்தத்தின் வழியே சுவாசப் பைகள், சுவாசக் குழாய்கள், மூக்குக்குச் சென்று அங்கு கெட்டியாக அடர்ந்துள்ள சளியை இளக்கிக் கரைக்கிறது. பின்னர் நீங்கள் இருமல் தும்மலின்றிச் சுகமாகச் சுவாசித்துக் குழந்தைபோல் தூங்கலாம். கெமிஸ்டிடம் மெண்டாகோ (Mendaco) வாங்குக. திருப்தி இன்றேல் பணம்வாபஸ்.

## முகப் பருக்கள் நீங்கி விடுகிறது -3 நாளில் அதன் மூலகாரணம் கொல்லப்படுகிறது

நிக்ஸோடர்ம் (Nixoderm) முதல் முதலில் உபயோகிக்கத் தொடங்கியதுமே முகப்பருக்கள் எல்லாம் மாயமாய் மறையத் தொடங்குகின்றன. இன்றிரவே நிக்ஸோடர்ம் (Nixoderm) உபயோகியுங்கள். விரைவில் உங்கள் சருமம் மிருதுவாகவும், வழவழுப்பாகவும், மாசு மறுவின்றியும் ஆவதைக் காண்பீர்கள். நிக்ஸோடர்ம் (Nixoderm) சருமத்தின் மீது ஏற்படும் முகப்பருக்கள், பிளவைகள், தேமல்கள், சரப்பான், படை, கட்டிகள் இவைகளுக்குக் காரணமான கிருமிகளையும், பூச்சிகளையும் கொல்லும் ஒரு புதிய முறை. இன்றே உங்கள் கெமிஸ்டிடமிருந்து நிக்ஸோடர்ம் (Nixoderm) வாங்குங்கள். முகப்பருக்களை ஒழித்து உங்கள் சருமத்தை சுத்தமாகவும், மிருதுவாகவும், வழவழுப்பாகவும் செய்ய உத்தரவாதம். அன்றேல் வெற்றுப் பெட்டியை அனுப்பினால் பணம் வாபஸ்.

**Nixoderm**
நிக்ஸோடர்ம்
சரும உபாதைகளுக்கு

# செல்வமும் சுதந்திரமும்

க. சந்தானம்

## 7. பிழைப்பு சுதந்திரம்

எந்த ஜீவனுக்கும் இவ்வுலகில் பிழைக்கச் சுதந்திரமுண்டு. எவ்வளவோ அபாயங்கள் இருக்கலாம். ஆனால் மனிதனைத் தவிர இதர பிராணிகள் தமக்கு உணவு கிடைக்காமல், அதற்காகப் பாடுபட வேண்டும் என்ற நிர்ப்பந்தத்தில் அகப்பட்டுக் கொள்ளவில்லை. சஞ்சார சகாப்தத்தில் மனிதனுக்கும் இதனால் அதிக வருத்தமில்லை. ஆடு, மாடு மந்தைகள் சமூகத்துக்குப் பொதுவாக இருந்தன. தனி மனிதனோ, குடும்பமோ வேலையில்லாமல் பட்டினி கிடப்பதில்லை.

விவசாய சகாப்தத்தில் அனேகமாக எல்லோரும் தமது பரம்பரைத் தொழிலையே செய்து வந்தனர். குடும்பங்கள் ஒரே ஊரிலோ அக்கம் பக்கத்து ஊர்களிலோ நெடுங்காலம் வசித்து வந்தனர். தவிர, விவசாயத்திலும், குடிசைத் தொழில்களிலும் எந்தக் காலத்தில் எத்தனை பேர்கள் வேலை செய்யக்கூடுமென்ற நியமம் இல்லை. விதைத்தல், நாற்று நடுதல் அறுவடை முதலிய காலங்களில் எவ்வளவு பேர்கள் இருந்தாலும் கூடி வேலை செய்து வருமானத்தில் பங்கு எடுத்துக் கொள்ளுவார்கள். பெரும் குடும்பங்களாக இருந்ததால், அதன் அங்கத்தினர்களின் வருமானமும் பொதுவாக இருந்தது. சாதி வகுப்புக் கட்டுப்பாடுகளும் அந்தந்த வகுப்பாருக்குள்ள வேலையைப் பங்கிட்டு செய்து கொடுத்தன. ஆகலால், தனது குடும்பத் தொழிலைத் துறந்து வேறு புதிய தொழிலைத் தேடுவோரைத் தவிர மற்றவர்களுக்குத் தொழிலைப் பற்றியோ உணவைப் பற்றியோ கவலை யில்லை. வெள்ளத்தாலும், வறட்சியினாலும் மக்கள் பஞ்சத்தில்அடிபட்டுக் கஷ்டப்பட்டால் சமூகமனைத்தும் பொதுவாகத் துன்புறும். கூட்டமாக வெளியூர்களுக்கு வேலை தேடிப் போவார்கள். எத்தொழிலையும் செய்யாதவர்கூடப் பிச்சை எடுத்து எளிய ஜீவனம் செய்வது சுலபமாக இருந்தது. இன்றும் பாரதத்தில் லக்ஷக்கணக்கான பிச்சைக்காரர்கள் கிராமங்களில் அலைந்து திரிந்து வீட்டுக்கு ஒரு கைப்பிடி அரிசியோ, இதர தானியமோ பெற்றுப் பிழைக்கின்றனர்.

இயந்திர சகாப்தத்தில் இந்த நிலை அடியோடு மாறி விடுகிறது. ஒவ்வொரு இயந்திர சாலையிலும் குறிப்பிட்ட எண்ணிக்கையில் தான் தொழிலாளர்கள் வேலை செய்ய முடியும். ஒரு இயந்திரசாலையில் பல வருஷங்கள் பயின்றவர் வேறுவிதத் தொழிற்சாலையில் சேர்ந்து தொழில் செய்வது சுலபமல்ல. கீழ்த்தரத் தொழிலாளியாகத் தனது வாழ்வை அடியிலிருந்து தொடங்கவேண்டி வரும். பிச்சை கேட்பது குற்றமாகக் கருதப்படுகிறது. ஒரு குடும்பத்திலுள்ளவர்கள் பல ஊர்களில் வேலை செய்ய வேண்டியிருப்பதால் குடும்பக் கட்டுப்பாடு குலைந்து அவரவர் சம்பாதிப்பதைத் தம் மனைவி மக்களுக்கே செலவழிக்கின்றனர். ஆகலால் தொழில் கிடைப்பது பெரிய பாக்கியமாகவும், இது கிடைக்காமலிருந்தால் பேராபத்தாகவும் இருக்கிறது. தொழிலில்லாத்திண்டாட்டம் இயந்திரசகாப்தத்தின் முக்கிய தீமை. ஆகலால், வயது வந்த எல்லா ஆண்களுக்கும், பெண்களுக்கும் தொழில் உரிமை அதில் அடிப்படையானது. இயந்திர சகாப்தத்தின் ஆரம்பத்தில், இயந்திரசாலைகளில் வேலை கிடைக்கா விட்டால் கிராமத்துக்குப் போய் விவசாயமோ, கைத்தொழில் வேலையோ செய்யக் கூடும். ஆனால் அமெரிக்கா, பிரிட்டன் போன்ற இயந்திர சகாப்தத்தில் முதிர்ந்த நாடுகளில், இது சாத்தியமில்லை. குடிசைத் தொழில்கள் மறைந்து விட்டன. விவசாயமும் ஒரு இயந்திரத் தொழிலாக மாறி விட்டதால் அதிக தொழிலாளிகளுக்கு இடமில்லை. 1930-1933 வருஷங்களில் பெரும் வியாபார மந்தம் ஏற்பட்டு லக்ஷக்கணக்கான தொழிலாளிகள் வேலையில்லாமல் திண்டாடினர். அவர்களைக் கொண்டே ஹிட்லர் தனது ஏகேச்சாதிகாரத்தை நிலைநாட்டினன். யுத்த முழக்கம் அதிகரிக்கவே சைன்யத்திலும், யுத்த தளவாடங்கள் தயார் செய்வதிலும் ஏராளமான தொழிலாளிகளுக்கு வேலை கொடுக்கப்பட்டது. இப்பொழுது அமெரிக்க ஐக்கிய நாடு ஒன்றில் வருஷம் 20,000 கோடி ரூபாய் பாதுகாப்புக்காகச் செலவிடப் படுகிறது. பிரிட்டன், பிரான்ஸ் முதலிய நாடுகளிலும் இவ்விதம் சமூகத்தின் செல்வத்தில் ஒரு கணிசமான பாகம் செலவாகிறது.

இந்த வேலையில்லாத் திண்டாட்டம் இயந்திர சகாப்தத்தின் கோளாறல்ல, முதலாளித்துவத்தின் தீமை என்று பொதுவுடைமைவாதிகள் கூறுகின்றனர். ருஷியா, சைனு முதலிய பொதுவுடைமை நாடுகளில் எல்லோருக்கும் போதிய வேலை யிருக்கிறதென்கிறார்கள். இது ஓரளவு உண்மையே. எல்லாத் தொழில்களையும் சர்க்கார் தொழில்களாகச் செய்து மிகவும் பிற்போக்காக இருந்த விவசாய சமூகங்களை இயந்திர சகாப்தத்தில் தீவிரமாகப் புகுத்தும் முயற்சியில் எல்லாத் தொழிலாளிகளையும் பயன்படுத்தப் போதிய தேவை இருந்தது. ஆனால் அவர்களுக்குக் கூலி, வீடு இதர வசதிகளைப் பற்றி விசாரித்தால் இதுவரையில் அவை அடிமை சமூகங்களாகவே இருந்து வந்திருக்கின்றன என்று கூறலாம். கணக்கற்ற தொழிலாளர்களை அதிகாரிகளின் இஷ்டப்படி வெகு தூரம் அழைத்துச் சென்று, சுகாதாரம் சிறிதுமில்லாத பிரதேசங்களில் அவர்கள் பழகாத தொழில்களைச்

செய்வித்து' அவர்களைப் பலவந்தமாகப் பல கொடுமைகளுக்கும், அகால மரணத்துக்கும் உள்ளாக்கி யிருக்கின்றனர். தொழில் உரிமை தொழில் அடிமையாக மாற்றப்பட்டுவிட்டது.

ஆதலால், உயது வந்த எவருக்கும் நிச்சய மாகவும், நிரந்தரமாகவும் தொழில் கிடைக்க வேண்டும். ஆனால் அத்தொழிலில் தொழிலாளி இஷ்டப்பட்டு அமர வேண்டும், அவனுக்கு நல்ல ஊதியம் கிடைக்க வேண்டும். ஏதாவது சில காலங்களில் வேலையில்லா விட்டால் போதிய உதவி அளிக்கப்பட வேண்டுமென்று பொதுநலவாதிகள் கூறுகின்றனர். ஜனநாயக முறையில் பொது நல சமுதாயம் ஏற்பட்டால் இது சாத்தியப்படும் என்று வாதிக்கின்றனர்.

தொழில் உரிமையைப் போலவே, முதிய வயதிலும், நோய்வாய்ப்பட்ட பொழுதும் இதர ஆபத்துக்கள் நேர்ந்தபொழுதும் சர்க்கார் மூலமாக உதவியளிப்பதும் இயந்திர சமூகத்தின் முக்கிய கடமையாகும். விவசாய சகாப்தத்திற்போல் குடும்ப, வகுப்புக் கட்டுப் பாடுகளை நம்பி யிருக்க முடியாது.

விவசாய சகாப்தத்திலிருந்து இயந்திர சகாப்தத்தில் புகுந்து வரும் சமூகங்களின் இடைக்கால நிலைமை மிகவும் பரிதாபகரமானது. இயந்திரத் தொழிலில் அதிக ஊதியம் கிடைப்பதால் கிராம வாசிகள் நகரத்துக்கு மிதமிஞ்சிக் குடியேறுகிறார்கள். ஆனால் அங்கே வேலை கிடைப்பதில்லை. மிகவும் ஆபாசமான வீடுகளில் வசிக்க வேண்டி யிருக்கிறது. சுகாதார வசதிகள் செய்து கொடுப்பதற்கு நகரசபைகளுக்குப் போதிய வருவாயில்லை. மனத்தில் அதிருப்தியும், புரட்சி உணர்ச்சியும் வளர்கின்றன.

இதற்குப் பரிகாரமாக, நாம் இயந்திர சகாப்தத்தை எதிர்த்து, விவசாய சகாப் தத்திலேயே இருந்து விடலாம் என்று பல பெரியார்கள் போதிக்கின்றனர். காந்தியடிகளும் இதையே வற்புறுத்தி வந்தார். அவருக்குப் பின் விநோபாஜியும் இதையே பிரசாரம் செய்து வருகிறார். பூதான, கிராம தான இயக்கத்தின் மூலம் பொருளாதாரப் பிரச்னையைத் தீர்த்து விடலாம் என்று எண்ணுகிறார்.

நில உரிமைகள் விவசாய சகாப்தத்தில் முக்கியமானவை. ஆனால் பழைய முறைகளில் விவசாயம் அதிக வருமானம் தராது. புதிய முறைகளை உபயோகிக்கப் பூதானமும் கிராம தானமும் பயன்படமாட்டா. தானம் பண்ணப்பட்ட கிராமங்களைச் சர்க்கார் எடுத்துக்கொண்டு பெரும் சர்க்கார் அல்லது கூட்டுறவுப் பண்ணைகளாகச் செய்து விஞ்ஞான முறைகளைக் கையாண்டால் ஒருவேளை பிரயோசனப்படலாம். ஆனால் இது சர்வோதயக் கொள்கைகளுக்கு விரோதமாகும்.

இயந்திர சகாப்தத்தைச் சில அம்சங்களில் மட்டும் ஒப்புக் கொள்ளுவது சாத்தியமல்ல. அப்படிச் செய்தால், சமூகம் இரு வகுப்பாகப் பிளவுபட்டுப் பெரும் குழப்பத்துக்கும் புரட்சிக்கும் இடமுண்டாகும். இடைக்கால கஷ்டங்கள் எவ்வளவு இருந்தாலும் அவைகளைச் சமாளித்துக் கொண்டு, இயந்திர சகாப்தத்தை மனப்பூர்வமாக ஏற்றுக் கொண்டு, அதனை நமது லட்சிய முறைகளுக்கேற்ப மாற்றி உமைத்துக் கொள்ளுவதே புத்திசாலித்தனமாகும். ஜனநாயகத்தையும், அஹிம்சையையும் நாம் விடாமல் பின்பற்றினால், பொது உடைமை நாடுகளிலுள்ள கொடுமைகளைத் தவிர்க்கலாம். ஆனால், தலைவர்களிடத்திலும், மக்களிடத்திலும் தியாக புத்தியும், பொதுநல உணர்ச்சியும் பெருக வேண்டும். அடுத்த 25, 30 வருஷங்கள் பாரதத்தைப் போன்ற நாடுகளுக்குச் சோதனைக் காலம் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

## மே மாதச் சிறுகதைப் போட்டி

1. மாதந்தோறும் நடக்கும் இந்தச் சிறுகதைப் போட்டியில் எழுத்தாளர்கள் எல்லோரும் கலந்து கொள்ளலாம்.

2. எழுத்தாளர்கள் சொந்தமாகவே கதைகள் புனைந்து அனுப்ப வேண்டும். கதைகள் கல்கியில் ஆறு பக்கத்திலிருந்து பத்து பக்கம் வரையில் வெளியிடக் கூடியதாக இருக்கலாம்.

3. ஒவ்வொரு மாதமும் அந்தந்த மாதப் போட்டிக்கு வந்த கதைகளில் சிறந்ததற்கு நூறு ரூபாய் பரிசு வழங்கப்படும்.

4. மே மாதப் போட்டிக்கு மே 1-ந் தேதியிலிருந்து 31-ந்தேதி வரை கதைகள் எழுதி யனுப்பலாம். மே மாதப் போட்டிக்கு வந்த கதைகள் ஜூன் மாதம் முழுதும் பரிசிலனை செய்யப்படும். பரிசு பெற்ற கதை ஜூலை மாதத்தில் பிரசுரமாகும். அதேபோல் அந்தந்த மாதக் கதைகள் அடுத்த மாதத்தில் பரிசிலனை செய்யப்பட்டு, அதற்கடுத்த மாதத்தில் பிரசுரமாகும்.

5. கதைகளை நல்ல காகிதத்தில் இடையிடுகள் விட்டு ஒரே பக்கத்தில் எழுத வேண்டும். காகிதத்தின் மறு பக்கத்தில் எழுதக் கூடாது.

6. தேர்ந்தெடுக்கப்படாத கதைகளைத் திரும்பிப் பெற விரும்புவோர் அவற்றுடனேயே போதிய தபால் பில்லைகள் வைத்து அனுப்ப வேண்டும். தபால் பில்லைகள் வைத்து அனுப்பாதவற்றைத் திருப்பி யனுப்புவதற்கில்லை.

7. போட்டிக் கதை சம்பந்தமாக எந்தவிதக் கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்வதற்கில்லை.

8. தேர்ந்தெடுத்த கதைகளைத் திருத்துவதற்கும் குறைத்து வெளியிடுவதற்கும் ஆசிரியருக்குப் பூரண உரிமை உண்டு.

— ஆசிரியர், கல்கி

# ஏன் நம்பிக்கையை விடுகிறீர்கள்!

அது இயற்கை, நரை மயிர் உங்களுடைய தோற்றத்தைக்கெடுக்கிறது. ஆனல் நீங்கள் நம்பிக்கையை விட வேண்டாம். ஆயிரக்கணக்கான ஜனங்களைப் போல் நீங்களும் லோமா உபயோகித்து அமைதியுடனும் தகுதிவாய்ந்த தோற்றத்துடனும் இருங்கள்.




கருமையையும்
வனப்பையும் தருபவை



ஸோல் ஏஜெண்டுகள் :
எம். எம். கம்பாட்வாலா, அஹமதாபாத் 1
ஏஜெண்டுகள் :
லி. நரோத்தம் அண்டு கோ பம்பாய் 2 Tel : 30575

TAM.

சென்னை ஏஜண்டுகள் : ஜே பாபைபாய் & கம்பெனி, 260, எஸ்பிளனேட், மதராஸ்-1 ● இலங்கை ஏஜண்டுகள் : சிக்கும் கதீர் & கோ., 41 & 43, இரண்டாம் குறுக்குத் தெரு, கொழும்பு-11

# உயிரோட்டம்

மார்ச்சு மாதப் போட்டியில் நூறு ரூபாய்ப் பரிசு பெற்ற கதை

"சாவதற்கு வஞ்சமா?"

கான்ஸ்டபிள் கனகசபையின் மனித உணர்வு கொஞ்சம் அசைந்து கொடுத்தது.

தற்கொலை செய்துகொண்டு உயிரைவிட இருந்த அந்த மனிதனைப் பிடித்து வந்து, 'பணம் கொடுத்தால் விட்டு விடுகிறேன்' என்று எவ்வாறு கூறுவது? பணம் கொடுத்தாலும் ஒரு உயிர் உலகை விட்டுப் பிரிவதை எப்படி மனம் வந்து அனுமதிப்பது?

'வேண்டாம்! ஒருவனுடைய மரணம் நமக்குப் பிழைப்பாக வேண்டாம்!' என்று எண்ணியவாறு அருகிலிருந்த 'சாயா'க் கடையை நெருங்கினான் கனகசபை.

"என்னப்பா, முந்நூற்றிநாலு! இன்றைக்குச் சரியான டூட்டி போலிருக்கு!" என்று சாயாக் கடைக்குள் இருந்தவாறு குரல் கொடுத்தான் ஜெயில் வார்டன்.



"ஆமாமாம்! பெரிய டூட்டிதான்! காலையிலிருந்து 'சாயாத் தண்ணி'க்குக்கூட வழியைக் காணோம்!"

"முந்நூற்றிநான்கு" என்று பொறிக்கப்பட்ட செந்நிறத் தொப்பியைக் கழற்றிவிட்டு 'உஸ், உஸ்' என்று பெருமூச்சு விட்டவாறு வார்டன் அருகில் அமர்ந்தான் கனகசபை.

"ஐயாவுக்கு 'டபிள் ஸ்ட்ராங்' டீ போடப்பா!" என்று கத்திவிட்டு, "இந்த ஆசாமியை எங்கிருந்து பிடித்தாய்? எதற்காகப் பிடித்தாய்?" என்று வெளியில் நின்று கொண்டிருந்த கைதியைக் காண்பித்துக் கேட்டான் ஜெயில் வார்டன்.

"இது ஒரு தற்கொலைக் கேஸ். சாகிறது தான் சாகிறானே, அவன் வீட்டுக்குள்ளேயே 'எதையாவது' தின்று செத்துத் தொலைக்கக் கூடாது? பயலைப் பார்த்தால் பஞ்சத்தில் அடிபட்டவன் போல் தெரிகிறது. ஆனால் திமிர் என்னவோ அதிகம். ஒரு மைல் தூரம் என்னோடு நடந்து வந்திருக்கிறான். இன்னும் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. நெஞ்சழுத்தக்காரன்!"

'டீ'யை நன்றாக உறிஞ்சிக் கொண்டே பேசினான் கனகசபை. அந்த 'டீ'யும் வெய்யிலும் சேர்ந்து அவன் முகத்தில் வியர்வை முத்துக்களை உருவாக்கிக் கொண்டிருந்தன.

"எத்தனை தடவை கேட்டேன், 'ஏண்டா சாகப் போனாய்' என்று. வாயைத் திறக்க மாட்டேனென்கிறானே! எனக்கென்னவோ இந்த மாதிரி அழுத்தப் பேர்வழிகளைக் கண்டாலே தலையைத் திருகி விட வேண்டும் போலிருக்கிறது."

"சாகப் போனவனைப் பிடித்துக் கொண்டு வந்து நீ எதற்கு அவன் தலையைத் திருக வேண்டும்? அவனை விட்டு விடு; அவனாகச் செத்துப் போவான்!"

இதைக் கேட்டவுடன் இதுவரை மௌனமாக இருந்த அந்தக் கைதி 'கபக்' கென்று சிரித்தான்.

கான்ஸ்டபிள் கனகசபை முகத்தைச் சுளித்துக் கொண்டான். "சிரிப்பு வேறு என்ன கேடு?" என்று முணுமுணுத்தவாறு கடைசிச் சொட்டு 'டீ'யையும் அழுத்தமாகச் சுவைத்தான். பிறகு 'சிகரெட்டை'ப் பற்றவைத்து அனுபவித்துப் புகைவிடத் துவங்கினான்.

வார்டன் பேசினான்: "ஏனப்பா இப்படிச் சிரிக்கிறாய்? கோர்ட்டிலே உனக்குத் தண்டனை கொடுப்பார்கள். மூன்று மாதமோ, ஆறு மாதமோ, ஒரு வருஷமோ போடுவார்கள். தற்கொலை செய்து கொள்வது சட்ட விரோதம், தெரியுமா? உன்னைச் சாக விட மாட்டார்கள்!"

"எனக்கு என்னவோ வாழப் பிடிக்கவில்லை; நான் சாகிறேன். இது எப்படித் தப்பாகும்? செத்துப் போகக்கூடச் சுதந்திரம் இல்லையா, என்ன? நான் யாருக்கு என்ன தீங்கு செய்கிறேன்? நான் என்னையே கொன்றுவிடப் போகிறேன். இதனால் மற்றவர்களுக்கு என்ன தொல்லை?" என்று கேட்டான்.

"சட்டம் உன்னைச் சாகவிடாது, தம்பி! இந்த மாதிரியெல்லாம் முட்டாள்தனமாகப் பேசாதே. தண்டனையை அதிகமாக்கி விடுவார்கள். இரண்டு மூன்று வருஷங்கள் கூடப் போட்டாலும் போட்டு விடுவார்கள்."

"இரண்டு மூன்று வருஷங்களா? இரண்டு மூன்று நாட்களிலேயே நான் செத்துப் போய் விடுவேன்!" கைதியின் முகத்தில் காணப்



## வே. கோவிந்தராசன்

பட்ட வெறியிலும் தீவிரமான உறுதி தென்பட்டது.

கனகசபை இடைமறித்தான்: ''ஏனப்பா! மூன்று நாட்கள் எடுத்துக் கொள்கிறாய்? இன்றைக்கே வேண்டுமானாலும் சுருக்கைப் பிடித்துக் கொண்டு செத்துப் போ! ஆனால் எங்கள் கண்ணெதிரே எதையும் செய்யாதே. நாங்கள் உன்னைச் சாக விடமாட்டோம்.''

கனகசபைக்கு மறுபடியும் சபலம் தட்டியது. 'அஞ்சு, பத்து' வாங்கிக் கொண்டு அவனை விட்டு விடலாமா என்று எண்ணினான். ஆனால் அவனுடைய மனித உணர்வு மறுபடியும் தலை தூக்கியது. 'திருட்டுத்தனமாகச் சாராயம் காய்ச்சுவதற்குப் பணம் வாங்கலாம். ஆனால் திருட்டுத்தனமாகச் செத்துப் போவதற்குக் கூடவா பணம் வாங்குவது?'

''அது சரி, நீ எதற்காகச் சாக வேண்டுமென்கிறாய்?''

''.........''

''சும்மா சொல்லப்பா!''

''.........''

''சொல்ல மாட்டியோ!''

''.........''

கைதி மௌனமாகி விட்டான்.

'கான்ஸ்டபிள்' கனகசபையின் மீசை துடித்தது; கண் சிவந்தது; கை பரபரத்தது! அதற்காக அந்தக் கைதியின் தலையை அவன் திருகி எறிந்து விட முடியுமா, என்ன?

★

மூன்று 'போலீஸ் கச்சேரி'யின் 'முந்நூற்று நாலாகச் சட்டையும் தொப்பியும் போட்டுக் கொண்டு 'டொக், டொக்'கென்று நடக்கும் போது கனகசபையின் முகத்தில் 'போலீசு மவுசு' ஒளி விட்டுப் பிரகாசிக்கும். அப்போதெல்லாம் அவன் 'சிடு, சிடு' வென்று தான் இருப்பான். ஆனால் வீட்டுக்குள் வெறும் கனகசபையாக, துண்டும் திருநீறுமாக இருக்கும் போதோ அவனிடம் பெருத்த மாறுதல் காணப்படும். இது 'முந்நூற்றி நாலு'தானா என்று மலைக்கும்படி அடக்கமாகவும் பணிவாகவும் அவன் இருப்பான்.

போலீசு வேலையின் 'தெளிவு, சுளிவு'களெல்லாம் அவனுக்கு நன்றாகத் தெரியும். அது மட்டுமின்றி அவனே புதுசாக 'தெளிவு சுளிவுகளை உண்டாக்குவதும் உண்டு! ஆகவே அவன் அநேகமாகக் கவலையற்றே வாழ்ந்துவந்தான்.

மூன்று முச்சந்தியிலே மேடை மீது நின்று கொண்டு, கைகளை நீட்டி மடக்கி வருகிற வண்டிகளை நிற்க வைத்து, நிற்



ரும் வண்டிகளை ஓட வைத்துப் போக்குவரத்தைக் கட்டுப்படுத்தும் வேலை அவனுக்கு அடிக்கடி ஏற்படுவதுண்டு. எந்த வாகனமும் போவதோ, வருவதோ, நிற்பதோ அவன் கையசைவுகளைப் பொறுத்ததுதான். 'இடுதிப்' பென்று ஒரு லாரியை நிறுத்தி விடுவான். 'லோடு' அதிகம் அப்படி, இப்படி யென்று காரணங்கள் கூற ஆரம்பித்து விடுவான்.

இவ்வாறாக விளக்கற்ற வண்டிகளையும், கமை மிகுந்த வாகனங்களையும், ஏமாந்த பாதசாரிகளையும் நம்பிக் குறைவற்று வாழ்ந்து வந்த கனகசபைக்கு அந்த வாரம் என்னவோ பெருத்த சோதனைக் காலமாக இருந்தது. ஒரு கேசாவது கிடைக்க வேண்டுமே! அவன் கண்ணுக்குக் கண்ணாய் வளர்ந்து வந்த அவனுடைய அருமைக் குழந்தை படுத்த படுக்கையாகிவிட்ட இந்தச் சமயத்திலா இப்படி ஆக வேண்டும்? டாக்டர் மருந்து எழுதிக் கொடுத்தே இரண்டு நாட்களாகிவிட்டனவே!

போயும் போயும் இன்றைக்கு ஒரு தற்கொலைக் கேஸ்தானா கிடைக்க வேண்டும்?

தற்கொலை செய்து கொள்ளப் போகிறவனிடம் எனக்குப் பணம் கொடுத்தால் தான் 'உன்னைச் சாக விடுவேன்' என்று சொல்வதா?

கனகசபை பெருமூச்சு விட்டான். அவன் உள்ளம் அமைதியற்றுத் தவித்தது. இன்றைக்கும் மருந்து வாங்க முடியாவிட்டால் பிறகு என்ன செய்வது?

எண்ண அலைகள் அவனையும் மீறித் துள்ளித்திரிந்தன. தனக்குப் பணம் தந்து உதவக் கூடிய குற்றத்தைச் செய்யும் எவனாவது சிக்கக் கூடாதா என்று அவன் உள்ளம் துடித்தது. கஷ்டத்துக்கு உதவும் நல்ல பண்பு எல்லோரிடமிருந்தும் மறைந்து விட்டதுபோல் அவனுக்குத் தோன்றியது.



வே. கோவிந்தராசன்

அமைதியாக நடந்து வந்த அந்தக் கைதியின் நீங்காத மௌனம் கனகசபையின் கோபத்தைக் கிளறிவிட்டது. 'இவன் கிறுக்கன் போலிருக்கிறதே! சாகட்டும் என்று விடாமல் பிடித்துக் கொண்டு வந்தது முட்டாள்தனம்தான்' என்று எண்ணிய அவனுக்கு இப்போது அவனை விட்டு விட்டால் தான் என்ன என்றும் தோன்றியது.

''ஆமாம்! இவனை விட்டுவிட வேண்டியது தான்! விடுவதோ விடுகிறோம், முடிந்ததைப் பறித்துக் கொண்டு விடுவோம்!'' என்று தீர்மானித்துக் கொண்டான். உயிருக்காக மன்றாடிக் கொண்டிருந்த அவன் குழந்தையின் நினைவு அவனை அவ்வளவு வேகமாக ஆட்டி வைத்தது.

கைதியை நெருங்கி, ''ஏதாவது பணம் வைத்திருக்கிறாயா?'' என்று மெல்லக் கேட்டான் கனகசபை.

இதைச் சற்றும் எதிர்பாராததனாலேயோ என்னவோ, அந்தக் கைதி திகைப்படைந்து போய்நின்றான். அவனுடைய முகத்தில் சிந்தனை தேங்கி நின்றது.

''இனிமேல் இந்தமாதிரி தற்கொலை விவகாரத்தில் இறங்குவதில்லை என்று எழுதிக் கொடு. ரூபாய் பத்து தள்ளு! உன்னை விட்டு விடுகிறேன். போலீஸ் கச்சேரி, ஜெயில் இந்த மாதிரி ஒரு வம்புமின்றி வீடு போய்ச் சேரலாம். என்ன சொல்கிறாய்?''

அந்தக் கைதியிடம் அனுதாபப்படுவது அவசியமற்ற செயலாகத் தோன்றியது கனகசபைக்கு. 'இந்த உலகில் மற்றவர்களுக்காக அனுதாபப்படுவதைப் போன்ற முட்டாள் தனம் வேறொன்றுமில்லை' என்று எண்ணிக் கொண்டான். அவன் பேச்சில் கண்டிப்பு தொனித்தது.

''என்னப்பா சொல்லுகிறாய்? பணம் வைத்திருக்கிறாயா, 'டேசனு'க்கு வருகிறாயா?''

''.........''

''யாராவது தெரிந்தவர்கள் இருந்தால் வாங்கிக் கொடு. விட்டு விடுகிறேன். இல்லாவிட்டால் ஸ்டேஷனுக்கு நட!''

கைதி கையைப் பிசைந்தான். கனகசபையின் கவனமும் கைதியின் கையின்மேல் திரும்பியது. அந்தக் கையிலே மின்னிய மோதிரம் அவன் கண்ணைக் கவர்ந்தது.

''ஏது மோதிரம்? உன்னுடையது தானா?''

''ஆமாம்!''

அவன் திருடனல்ல என்பது கனகசபைக்குத் தெளிவாகத் தெரிந்தது. 'மோதிரம் கண்டிப்பாக அவனுடையதாகத்தான் இருக்க வேண்டும்.'

''அதைக் கழற்று. இனிமேல் இந்தமாதிரிதற்கொலை விவகாரமெல்லாம் நீ வைத்துக் கொள்ளாதே!''

கைதி பெருமூச்சு விட்டான். சிறிது நேரம் மோதிரத்தையே பார்த்துக் கொண்டிருந்து விட்டுப் பிறகு மெல்ல அதைக் கழற்றினான். கொடுக்க மனமின்றி அதைக் கனகசபையிடம் கொடுத்தான். உடனே அங்கிருந்து புறப்பட்டுத் திரும்பிப் பாராமல் 'விடு விடு' என்று வேகமாக நடந்தான்.

கனகசபையின் உள்ளத்தில் மகிழ்வு அலைகள் துள்ளின. இனி மருந்து வாங்குவதற்குத் தடையேது? குழந்தையின் உயிரைக் காப்பாற்றி விடலாமல்லவா?

★

தெரிந்த இடத்தில் மோதிரத்தை வைத்துப் பணம் பெற்றுக் கொண்ட பின், மருந்தும் கையுமாகப் பதைபதைக்கும் வெய்யிலில் வீடு போய்ச் சேர்ந்தான் கனகசபை. ஆனால், ஆவலோடு குழந்தையை நெருங்கிய அவன் கலவரமடைந்து போனான். குழந்தை ஜுர வேகத்தில் ஏதேதோ பிதற்றிக் கொண்டிருந்தாள். அவள் பாட்டி வேறு வாய் விட்டு அழத் துவங்கி விட்டாள்!

பொழுது சாய்வதற்குள் டாக்டர் பலமுறை வந்து போய் விட்டார். ஒன்றன்பின் ஒன்றாக ஊசிகள் மாறின. வித வித பாட்டில்கள் தோன்றின. டாக்டரும் எல்லாவித முயற்சிகளையும் செய்து பார்த்து விட்டு, தலையை அசைத்தவாறு போயே விட்டார்.

உலகத்தை விட்டுப் போகத் துடித்த ஓர் உயிரிடமிருந்து லஞ்சம் வாங்கிய கனகசபை மற்றொரு உயிர் உலகை விட்டுப் போய்விடா திருக்க என்ன செய்வதென்று அறியாது தத்தளித்தான். அந்த உயிரைக் காக்க யாருக்கும் எவ்வளவு லட்சம் கொடுப்பதாக இருந்தாலும் அவன் தயங்கியிருக்கமாட்டான். ஆனால் காலனும் ஒரு 'கான்ஸ்டபிள்' கனகசபையா, என்ன! குழந்தையின் உயிரசைவு கொஞ்சம் கொஞ்சமாக ஒடுங்கிக் கொண்டு வந்தது.



கனகசபையின் கண்கள் குளமாயின. உள்ளம் பதறியது. குழந்தையின் முகத்தை வருடுவதைத் தவிர அவனால் வேறொன்றும் செய்ய இயலவில்லை.

ஐந்து வருடங்களுக்கு முன்பு அவனுடைய மனைவி சாகுந் தருவாயில் கலங்கிய அவன் கண்கள் அதன் பிறகு இப்பொழுதுதான் கலங்கின. அவனுடைய முரட்டுக் குணத்துக்கும், 'சிடு, சிடு'ப்புக்கும் ஈடு கொடுத்து வாழ்ந்த அவன் மனைவி தன் சின்னஞ்சிறு குழந்தையை அவனுக்குப் பரிசாகத் தந்துவிட்டு மறைந்து போனாள். 'குழந்தையைப் பார்த்துக் கொள்ளுங்கள். உங்கள் முரட்டுக் குணத்தை அதனிடம் காண்பிக்க வேண்டாம்!' என்று கடைசியாக அவள் கூறிய சொற்கள் அவன் உள்ளத்தில் ஆழமாகப் பதிந்திருந்தன.

உலகைத் துறந்தவள் அவன் உள்ளத்தைத் திறந்துவிட்டிருந்தாள். அவனுடைய முரட்டுப் போக்கு நாளடைவில் வெகுவாகக் குறைந்தது. தினந்தோறும் தன் மனைவியின் படத்துக்குப் பூ அணிவித்து விளக்கேற்றி வைப்பதில் அவனுக்கு அலாதி நிம்மதி ஏற்பட்டது. அத்துடன் தன் அன்பு முழுமையும் தன் குழந்தையின் மீது பொழிந்து கவலையற்று வாழ்ந்து வந்தான். அந்த அருமைச் செல்வமும் அவனை விட்டு எங்கோ செல்வதென்றால்...

குழந்தையின் கைகளை வருடிக் கொண்டிருந்த அவன் யதேச்சையாக அதன் கையிலிருந்த மோதிரத்தைப் பார்த்தான். அவனுக்குச் 'சொரே' ரென்றது!

அந்த மோதிரத்தைத் தன் மனைவியின் நினைவுச் சின்னமாகக் கருதி வந்தான் அவன். அவள் மிக மிக விருப்பத்தோடு அதனைச் செய்து வைத்திருந்தாள். எத்தனையோ முறை எவ்வளவோ நெருக்கடிகள் ஏற்பட்டபோதும் அவன் அந்த மோதிரத்தை விற்க எண்ணியதே கிடையாது. அவ்வளவு மதிப்பு வைத்திருந்தான் அதன் மீது. அது போலவே அந்த ஏழையும் தன் மோதிரத்தை எவ்வாறு போற்றி வைத்திருந்தானோ! தற்கொலை செய்து கொள்ளப் போகும்பொழுதும் அதை அவன் தன் விரலில் அணிந்திருந்தானே! யாருடைய நினைவாக வைத்திருந்தானோ! அதைக் கழற்றிக் கொடுக்கும்போது அவன் உள்ளம் என்ன பாடுபட்டிருக்கும்! மரணம் உயிரைப் பறித்துச் செல்வது போலல்லவா கனகசபையும் மோதிரத்தைப் பறித்து வந்தான்? அந்த ஏழை இன்னும் உயிரோடு இருக்கிறானோ அல்லது உயிர்விடாமல் தவிக்கிறானோ?

கனகசபைக்கு வியர்த்துக் கொட்டியது. சுவரில் தொங்கிய தன் மனைவியின் படத்தை நோக்கினான். "லஞ்சம் வாங்கிக் கொண்டு ஓர் உயிர் உலகை விட்டுப் போகத் தாராளமாக அனுமதித்து விட்டீர்களே, இப்போது நம் கண்மணியின் உயிர் போய் விடாமல் தடுத்து வைக்க முடியுமா உங்களால்?" என்று கேட்டுவிட்டு அமைதியாகப் புன்னகை புரிந்தாள் அவள்.

அவன் முகத்தில் வெறி படர்ந்தது. தன் குழந்தையின் பிரிவைத் தடுப்பது தன் கையிலில்லை. ஆனால் அந்த ஏழையையாவது தற்கொலை செய்து கொள்ள வொட்டாமல் தடுத்து அவன் உயிரைக் காப்பாற்றி விடலாமல்லவா? தற்கொலைக்குச் சாதகமாக லஞ்சம் வாங்கிய பழியாவது நீங்குமல்லவா?

குழந்தையின் விரலிலிருந்து மோதிரத்தைக் கழற்றிக் கொண்டு 'விசுக்'கென எழுந்தான் கனகசபை. தொப்பியை எடுத்துத் தலையில் வைத்துக் கொண்டான். உடைகளைச் சரிப்படுத்தியவாறு வேகமாக வெளியே புறப்பட்டான்.

"இந்த நிலையில் எங்கே அப்பா போகிறாய்?" என்று பாட்டியிடமிருந்து வெளிப்பட்ட சொற்களையும் அவன் காதில் வாங்கிக் கொள்ளவில்லை.

தன் குழந்தையின் மோதிரத்தை அடகு வைத்து விட்டு, ஏழையின் மோதிரத்தை மீட்டுக் கொண்ட கனகசபை இருள் சூழும் அந்த வேளையிலே சூறாவளி போன்று சைக்கிளில் சுற்ற ஆரம்பித்தான். அனுபவசாலியான அவனுக்கே அந்த ஏழையின் தங்குமிடத்தை நிதானிப்பது அவ்வளவு எளிதாகத் தோன்றவில்லை.

மூன்று நகரத்தின் மூலை முடுக்குகளிலெல்லாம் நுழைந்து நுழைந்து சுற்றி வந்துவிட்டுக் கடைசியில் ஏதோ ஒரு குருட்டு நம்பிக்கையோடு ஊருக்கு வெளியே அமைந்திருந்த மாந்தோப்பை அடைந்தான். அவன் நம்பிக்கை வீண் போகவில்லை!

தோப்பில், ஒரு மரக்கருகில் தடுமாறியவாறு ஓர் உருவம் ஊர்ந்ததை அந்த இருளிலும் அவன் கண்கள் கண்டு விட்டன. 'அவனாகத்தான் இருக்கவேண்டும்' என்று எண்ணிப் புதர்களை ஒதுக்கியவாறு நுழைந்து அந்த மனிதனைக் 'கபக்'கென்று பிடித்து நிறுத்தினான்.



# கண்ணம்மா—என் மருமகள்

பள்ளிக்கூட விடுமுறை விட்டு என் மருமகள் கண்ணம்மா எங்கள் வீட்டுக்கு வந்ததுமுதல், வீடே அடையாளம் தெரியாமல் மாறி விட்டது. சதா ஓடாக உழைக்கும் சிரமம் இனி எனக்குக் கிடையாது. எல்லாக் காரியமும் இமைப் பொழுதில் நடந்துவிடுகிறது; காரணம், கண்ணம்மா பக்கத்திலிருக்கிறாள். நானும் அவளை வாயார வாழ்த்திக் கொண்டிருக்கிறேன்.

துணி துவைப்பதை எடுத்துக் கொள்ளலாமே—சாமான்யமான விஷயம் தான். ஆனால் சலவை செய்யும் சோப் சுத்தமுள்ளதாக இருக்க வேண்டும் என்று கண்ணம்மா சொன்னபோது மூக்கில் விரலை வைத்து அதிசயித்தேன். அவள் சொன்னாள்:

"சுத்தமான சோப் வெளுக்கும் அழகுக்கு எதுவுமே ஈடாகாது; அது கொள்ளை கொள்ளையாய் நுரை கொழிக்குமே—நுரை யென்றால், துணிகளையோ கைகளையோ பாதிக்காத சுகமான நுரை!"



சன்லைட் சோப்பை எடுத்துவந்து, எப்படி வெளுக்கிறது என்று செய்து காண்பித்தாள் அவள். இலேசாகத் தேய்த்தாள், அவ்வளவு தான். சட்டென்று கொழித்துக் கொண்ட அபரிமிதமான நுரையை நீங்கள் பார்க்க வேண்டுமே! அடுத்தபடி, அடித்துத் துவைப்பதற்கான மட்டையொன்றை நான் எடுத்து நீட்டியதும் அவள், "இது எதற்கு, அத்தை. சன்லைட் சலவை என்றால்



அடித்துத் துவைக்க வேண்டிய அவசியம் உங்களுக்கில்லை என்று அர்த்தம். சிறிது சோப்பினுல் இலேசாகத் தேய்த்து விட்டாலே போதும். உடனே கிளம்புகிற ஏராளமான நுரையில் தாமாகவே துணிகள் பளிச்சென்று வெளுத்துவிடும்'' என்ருள்.

துணிகள் யாவும் பளிச்சென்று, சுத்தமாக ஆகி விட்டதைப் பார்த்ததும், ஈரம் உலர்வதற்குள் அப்படியே உடுத்திக்கொண்டு விடலாமா என்ற பரபரப்பு எனக்கு. புகழ்ச்சிக்காகச் சொல்லவில்லை. சாமர்த்தியத்தில் எங்கள் கண்ணம்மாவுக்கு ஈடு கண்ணம்மாதான்! ஸன்லைட் அவ்வளவு பளிச்சென்று வெண்மையாக வெளுப்பதற்கு அவள் கூறும் காரணம், நூலிழைகளின் இண்டு இடுக்குகளில் பதுங்கியிருக்கும் எல்லா அழுக்குகளையும் அறவே அகற்றிவிடக்கூடிய சக்தி ஸன்லைட்டின் செழிப்பான நுரைக்கு உண்டு என்பதுதான்.



இதெல்லாம் சரிதான்; குடித்தனப் பொறுப்பைத் தாங்கும் எனக்குத் தோன்றிய சிறிய சம்சயம் ஒன்றை மட்டும் குறிப்பிட்டு வைத்தேன்: ''அது சரிதான். என் தங்கமே, ஆனுல் ஸன்லைட் விலை அதிகமாச்சே!''

நகைத்தவண்ணம் கண்ணம்மா சொன்னுள். ''போங்க அத்தை. நீங்களாக ஏதாவது கற்பனை செய்துகொண்டு... கண்கொட்டாமல் நான் வியந்த நிலையில், அவள் விவரித்தாள்: ஒரே ஒரு வில்லை ஸன்லைட் சோப் ஒரு மூட்டை துணிகளுக்கு பதில் சொல்லும். அத்தை. பார்க்கப் போனுல், ஸன்லைட் சோப்பால் சலவை செய்வது எவ்வளவோ சிக்கனம்!''

ஸன்லைட் சோப்பில் என்னை வசீகரித்த மற்றொரு அம்சம் அதன் வாசனை. தும்பைப் பூவுக்கு நறுமணமூட்டியது போல், சலவையான துணிகளைச் சுற்றிலும் தூய்மையின் ஜோதி வியாபித்திருக்கும். மேலும், சலவை செய்த கைகளுக்கு ஸன்லைட் நுரை மென்மையும் மழமழப்பும் அளிக்கும்.



புடவை, ரவிக்கை, துண்டு, துப்பட்டா, என் கணவரின் வேஷ்டி, சட்டை, குழந்தைகளின் துணிகள்—ஆக மொத்தம், சிறிதும் பெரிதுமாக வீட்டுத் துணிமணிகள் எல்லாவற்றிற்கும் உகந்த சலவை சோப் ஸன்லைட்டைத் தவிர வேறில்லை என்பதை எனக்கு நன்குணர்த்தியது கண்ணம்மாவின் வரவு. துணிகளை ஸன்லைட் பளிச்சென்று, சுத்தமாக வெளுத்துவிடுவதைப் புகழ்வதா, அல்லது ஒரு பெரிய துணிக் குவியலை ஒரே ஒரு ஸன்லைட் வில்லை வெளுத்துவிடும் ஆற்றலைப்போற்றுவதா என்ற வியப்பு எனக்கு. மொத்தத்தில் எங்களுக்குப் பணம் மிச்சமாவதோடு, உடுத்துவதற்கு சுத்தமான துணிகளும் கிடைக்கின்றன.




ஹிந்துஸ்தான் லீவர் லிமிடெட், பம்பாய்

S. 255B-50 TM

தற்கொலை செய்து கொள்ள முயற்சி செய்தானே அவனேதான்! ஆள் கிடைத்து விட்டான் என்ற நிம்மதியையும் மீறிக் கனகசபைக்குக் கோபம் பொங்கி யெழுந்தது. 'உயிரின் அருமையைப் பற்றித் தெரியாத முட்டாளாக இருக்கிருனே!' என்று எண்ணிக் கொண்டான்.

''ஏனப்பா, காலையிலே என்ன சொல்லி உன்னைப் போக விட்டேன்! இப்பொழுது இங்கே என்ன செய்கிருய்?''

''............''

''சரி, சரி புறப்படு. நீதான் பேசாத பேர் வழியாயிற்றே! இந்தா! உன்னுடைய மோதிரம். மற்றவர்கள் சொத்து எனக்கு எதற்கு?''

ஊர் முழுதும் சுற்றிய களைப்போடு, திகைத்துத் திண்டாடிக் கொண்டிருந்த அந்த ஆளையும் அழைத்துக் கொண்டு தளர்ந்த நடைபோட்டுப் 'போலீஸ் ஸ்டேஷ'னை அடைந்தான் கனகசபை.

அங்கிருந்த 'இன்ஸ்பெக்டரை'க் கண்டதும், ஒழுங்கும் கட்டுப்பாடும் 'பளிச்'சென்று தெறித்து விழும்படி விறைப்பாக ஒரு 'சல்யூட்' அடித்து விட்டு, ''காலையிலேயே எச்சரிக்கை செய்து விட்டேன், சார்! திரும்பவும் தற்கொலைக்கு முயற்சி செய்தான். பிடித்துக் கொண்டு வந்து விட்டேன். ஆளை வெளியில் விட்டால் போச்சு. உயிரை விட்டுவிட்டுத் தான் வேறு ஏதாவது வேலை இருந்தால் செய்வான் போலிருக்கு!'' என்ருன்.

இன்ஸ்பெக்டரின் முகம் மலர்ந்தது. ஒரு 'கேஸ்' கிடைத்த மகிழ்ச்சியோ என்னவோ! அவரே அந்த ஆளைச் சோதனை செய்து, அவன் பையிலிருந்து கிடைத்த சிறு காகிதத் துண்டைப் பிரித்து உரக்கப் படித்தார்.

''என்னுடைய சாவின் காரணத்தை ஆராய் வோருக்கு,

நான் தற்கொலைசெய்து கொண்டதைப் பற்றி நீங்கள் ஏன் அநாவசியமாகச் சிரமப்படுகிறீர்கள்? எனக்கு வாழ்க்கையில் வெறுப்பு ஏற்பட்டு விட்டது. ஆகவே என் வாழ்வைமுடித்துக்கொள்கிறேன். இது என்உரிமை!

நீங்கள் சட்டத்தைக் காட்டி இந்த உரிமையைப் பறிக்கப் பார்க்கலாம். ஆனல் அது உங்களால் முடியாது. உயிரின் இயக்கம் உங்களுடைய சட்டத்துக்கும் கட்டு திட்டங்களுக்கும் அப்பாற்பட்டது.

இப்படிக்கு,

**வாழவிரும்பாதவன்.''**



இன்ஸ்பெக்டரின் முகத்தில் புன்னகை படர்ந்தது.

''என்னப்பா வாழ விரும்பாதவனே! சட்டத்தினல் முடியாது என்று எழுதி வைத்திருக்கிருயே, இப்போது முடிந்து விட்டது. பார்த்தாயா?'' என்ருர்.

''சரி, இவன் கொஞ்சம் படித்த இறுக்கன் போலிருக்கிறது! இந்த ஆளை 'லாக் அப்'பில் வை'' என்ருர் இன்ஸ்பெக்டர்.

கனகசபை மணியைப் பார்த்தான். அவன் குழந்தையை விட்டு வந்து ஒரு மணி நேரம் ஆகியிருந்தது. குழந்தைக்கு இந்நேரம் என்ன நேர்ந்திருக்குமோ என்ற திகிலோடு அவசரம் அவசரமாக இன்ஸ்பெக்டரிடம் விடைபெற்றுக் கொண்டு வீட்டுக்கு விரைந்தான்.

ஆனல் நடுங்கும் உள்ளத்தோடு குழந்தையை அணுகிய கனகசபைக்குப் பெரியதோர் அதிசயம் காத்திருந்தது. ஸ்மரணையற்றுக் கிடந்தவாறு கலக்கமளித்த அவன் அன்புச் செல்வம் கண் விழித்துக் கொண்டிருந்தது! குழந்தை தெளிவாகப் பேசிச் சிரித்துக் கொண்டிருந்தது!

அருகிலிருந்த டாக்டரின் முகத்தில் வெற்றிப் புன்னகை மிளிர்ந்தது. குழந்தையைக் காப்பாற்றிய தம் சாதனையை எண்ணி அவரே வியந்து கொண்டார்!

''குழந்தை கண் திறந்து விட்டது!'' என்று மகிழ்ச்சி பொங்கக் கூறினுள் பாட்டி. குலதெய்வத்தை வேண்டிக் கொண்டதால் தான் குழந்தை பிழைத்தது என்ற பெருமிதம் அவளுக்கு!

கனகசபையின் உடலும் உள்ளமும் சிலிர்த்தன. வாஞ்சையோடு தன் குழந்தையை அணைத்துக் கொண்டான் அவன். தன்னைத் தவிக்க விட்டு விட்டு வாடி விடப் பார்த்த அந்த இளந்தளிர் பிழைத்து விட்ட மகிழ்ச்சியில் அவன் கண்கள் கண்ணீரைச் சொரிந்தன.

லஞ்சத்தைத் திருப்பிக் கொடுத்து விட்டு அந்தத் தற்கொலையைத் தடுத்து விட்டதால், தன் குழந்தையின் உயிரும் பிழைத்துக் கொண்டது என்ற எண்ணம் அவனுக்கு விவரிக்க இயலாத உணர்ச்சிகளை உண்டாக்கியது. தன் குழந்தையின் உயிரைக் கடவுள் புண்ணியத்தில் காப்பாற்றி விட்ட பெருமை அவன் முகத்திலும் பளிச்சிட்டது.

தொப்பியைத் துளைத்து உச்சியைத் தாக்கும் கொடுரவெய்யிலிலும் மூன்று முச்சந்தியின் மேடை மீது நின்று கொண்டிருந்தான் கனகசபை. வெப்பத்தில் வேகம் அவனுக்கு அளித்த வாட்டத்தில் அருகில் வந்த வார்டனைக்கூட அவன் கவனிக்கவில்லை.

''என்ன, முந்நூற்றி நாலு! நேற்று லாக் அப்' செய்தாயே, அந்த ஆள்செத்துப் போய் விட்டான்!'' என்ருன்.

அதைக் கேட்டுக் கனகசபைக்குத் தூக்கி வாரிப்போட்டது. 'சிறையில் அடைபட்டவன் செத்துப் போய் விட்டாளு?'

வார்டன் தொடர்ந்தான். ''இன்றைக்குக் காலையிலே பார்க்கும்போது ஆள் செத்துக் கிடந்தாளும்! ஏன் உயிர் போயிற்று என்று டாக்டர்களுக்குக் கூடப் புரியவில்லையாம்...!''

அவனைச் சிறைக்குள்ளே அடைத்துவைத்து, அவன் உயிர் உலகை விட்டு ஓடாதவாறு செய்து விட்டோம் என்று எண்ணியிருந்த கனகசபைக்கு இது பெரிய அதிர்ச்சியைத் தந்தது. தற்கொலையைத் தடுத்துத் தன் குழந்தையின் உயிரைக் காப்பாற்றி விட்டதாக இறுமாந்திருந்த அவனுக்கு இந்தச் செய்தி குழப்பத்தை ஏற்படுத்தியது.

திகைப்பில் மூழ்கிப் போன அவனுக்கு, 'பாம் பாம்' என்று மோட்டார்களிடமிருந்து எழும்பிய பெருத்த ஓலம் சுய உணர்வை அளித்தது. உடனே 'டக்'கென்று ஒரு கையை நீட்டினான்; ஒரு கையை மடக்கினான். ஓடி வந்த வாகனங்கள் நின்றன. நின்றவை ஓடின. சட்டத்தைத் தன் கைகளில் அடக்கி வைத்துக் கொண்டு அவைகளின் ஓட்டத்தை அவனால் இழுத்துப் பிடிக்க முடிந்தது.

ஒவ்வொரு நாளும் கோடிக்கணக்கான உயிர்கள் உலகை நோக்கி ஓடி வருகின்றன. கோடிக் கணக்கானவை உலகை விட்டு மறைந்து விடுகின்றன. எதைக் கொண்டு அவைகளின் ஓட்டத்தைக் கட்டுப் படுத்த முடியும் என்று மலைத்தான் கனகசபை.

''உயிரின் இயக்கம் உங்கள் சட்டத்துக்கும் கட்டுதிட்டங்களுக்கும் அப்பாற்பட்டது'' என்று அந்த ஏழை எழுதியிருந்த எழுத்துக்கள் கனகசபையின் கண்முன்னே சுழன்று சுழன்று வந்து கொண்டே இருந்தன.

# மேலும் மலிவானது!






**குடும்பம் முழுவதற்கும் ஒரே டால்க்**

## ப்ரோடெக்ஸ்

**சர்வ பிரயோக டாய்லட் பவுடர்**

ஜயன்ட்சைஸ் அழகிய
டப்புடன் கிடைக்கும்!

---



## Kassels

காஸல்ஸ் விசிறியின்கீழ்

# குளுமையும் நிம்மதியும்!





| | |
|---|---|
| மாட்ச்வெல் எலக்ட்ரிகல்ஸ் (இந்தியா) லிமிடெட்<br>தபால் பெட்டி 156, புது டில்லி | தொழிற்சாலைகள்: பூனா மற்றும் டில்லி<br>பூரண விற்பனை உரிமையாளர்கள்:<br>ரேடியோ லாம்ப் ஒர்க்ஸ் லிட்.<br>பம்பாய் - கல்கத்தா - டில்லி - மதராஸ்<br>கான்பூர் - இந்தூர் |

சென்னைக் கிளை: 330, தம்பு செட்டித் தெரு, சென்னை - 1




## 58. நேயர்கள் கடிதம் (2)

கடிதம் 693 ல் சென்னைவாசி ஒருவர் எழுதும் பாராட்டுக்களைச் சொல்லி முடியாது. இவர் சூட்டும் புகழ்மாலைகளைச் சுமக்கக் கூலியாட்கள்தான் போட வேணும். வைத்தியக் கட்டுரைகள் மூலமும், நேரில் கடிதங்களுக்கு எழுதிய பதில் மூலமும் இவர் பல்வேறு மருந்துகளைச் செய்து தமது குடும்பத்திலுள்ளோருக்கு உபயோகித்துப் பிணியைப் போக்கிக் கொண்டார். இதற்காகத்தான் இவ்வளவு புகழ்மாலைகள்.

அன்பரே! தங்கள் பாராட்டுதலுக்கு நன்றி. நம் முன்னோர்கள் சொன்னதையல்லாது சொந்தச் சரக்காக நான் எதையும் சொல்லவில்லை. இதில் எனக்கு என்ன பெருமையுண்டு? தங்கள் புகழ்ச்சிக்கு உரிய விஷயங்களைத் தெளிந்து தெரிவித்துள்ள நம் முன்னோருக்குத்தான் இப்புகழ் மாலை யாவும் சேரும்; எனக்கல்ல. மறுமுறையும் நன்றி.

கடிதம் 701ல் திருச்சி சகோதரி எழுதுகிறார். பெண்களுக்கு மட்டும் ஏற்படும் சில நோய்களைப் பற்றிக் கல்கியில் எழுத வேணுமென்று விரும்புகிறார்.

இது சாத்தியமில்லை. கல்கி வைத்தியப் பத்திரிகை அல்ல. விஷயமும் எழுதத் தகாதது. எழுதினால் பண்புக்குப் பங்கம் வரும். குறைகளுக்கு நேரில் எழுதும் கடிதங்கள் மூலமாகப் பதில் எழுதலாம். இதிலும்கூட ஓரளவு கூச்சம் ஏற்படத்தான் செய்கிறது.

கடிதம் 709ல் சென்னை வாசி ஒருவர் சில ருசிகரமான கேள்விகளைக் கேட்டிருக்கிறார். கடிதத்தில் கையெழுத்து கூடப் போடவில்லை. ஆகவே எழுதியவர் சகோதரியா சகோதரரா என்று கூடத் தெரியாது. விஷயங்களைப் பிரசுரித்தல் பண்பு ஆகாது. வீட்டின் விலாசத்தை மட்டும் எழுதியுள்ளார். ஆகவே அவ்விலாசப்படி நேரிடப் பதில் எழுதப்பட்டது. இப்படி ஒரு சங்கோசப் பிராணி!

கடிதம் 712ல் போபால் சகோதரி கால் விரல்களில் உண்டாகும் 'ஆணி'களுக்கு என்ன செய்யலாமென எழுதும்படி விரும்பியுள்ளார். அம்மாம் பச்சரிசியின் பாலை ஆணிகளின் மேல் தடவினால் போதும். புண்ணுக்காமல் மெதுவாக இந்த 'ஆணி'யை மிருதுவாக்கிக் காலக் கிரமத்தில் போக்கவும் உதவும். விஸ்தாரமாக இந்நோயைப் பற்றி ஒரு கட்டுரை எழுதப் படும். அம்மாம் பச்சரிசிக்கு வட மொழியில் தண்டுலீயகம் என்று பெயர்.

கடிதம் 715ல் துங்கபத்ரா அணை சகோதரர் தம் மகனுடைய அடுக்குத் தும்மலுக்கு அச்வகந்தாலேஹியமும் ஸாரஸாதி தைலமும் உபயோகித்துப் பலன் கண்டிருக்கிறாராம். அச்வகந்தா சூர்ணத்தைப் பாலில் கலந்து உட்கொள்ளச் சொன்ன யோசனையை நடைமுறையில் கொண்டு வந்து பலனைக் கண்டு சந்தோஷத்தைத் தெரிவித்துள்ளார். இதில் "சுக்கு" ஒன்று மட்டும் இல்லை என்றால், இது அஸல் "ஔவல்தான்" என்று எழுதியிருப்பது அரியதொரு விமர்சனம்.

கடிதம் 724ல் [ரா] சென்னை வாசி(?) யொருவர், வைத்தியக் கட்டுரைகளின் பயனைப் பற்றி வானளாவப் புகழ்ந்த பிறகு, "மேஹ வியாதி"யைப் பற்றி ஏன் எழுதவில்லை என்று கேட்டிருக்கிறார்.

முதலில் மேஹ வியாதி என்பது என்ன? இதை இவர் விளக்குவாரானால் உடனே எழுதத் தயாராகி விடுவேன். பொதுவாக, பாமர மக்கள் பல வியாதிகளைக் குறிக்கும் பொருளில் "மேஹ வியாதி" என்ற சொல்லை உபயோகிக்கின்றனர். 'குஷ்டம்' என்ற நோயை மேஹ வியாதி என்று சிலர் சொல்கின்றனர். மூத்திராசய சம்பந்தமான ரோகங்களை மேஹ வியாதி என்று சிலர் சொல்கின்றனர். சீலங் கெட்டதால் வரக் கூடிய சில ரோகங்களை மேகப் புண் என்றும் சீழ் மேஹம் என்றும் சொல்கின்றனர். இப்படியாகப் பல பொருள்களில் உபயோகிக்கப்படும் ஒரு சொல்லைக் கொண்டு என்ன வியாதி என்று எப்படி நிச்சயிப்பது?

கடிதம் 726ல் படகரையைச் சேர்ந்த கேரள நண்பர் சில ரஸமான கேள்விகளைக் கேட்டிருக்கிறார்.

1. சில வாரங்களுக்கு முன் கல்கியில் சிறு குறிஞ்ஜான் என்பதைப் பற்றி ஒரு குறிப்பு எழுதியிருந்தீர்கள். அப்பச்சிலை வாசகர் ஒருவரது பிணியைப் போக்கியதல்லாது, மூத்திரத்தின் இனிப்பையும் குறைத்ததாகத் தெரிவித்திருந்தீர்கள். இப்பச்சிலைக்கு வடமொழியில் என்ன பெயர்?

நான் சிறு குறிஞ்சானைப் பற்றி அவ்விதத் தகவல் கிடைத்ததாக எழுதவில்லை. வயிற்றுப் போக்கினால் சிரமப்பட்டுக் கொண்டிருந்தவருக்குக் கருவேலங்காய்த் தூளைச் சாப்பிடும்படி எழுதியிருந்தேன். அவர் மேற்படி மருந்தால் வயிற்றுப்போக்கு குணமானதோடு மூத்திரத்தின் சர்க்கரையும் மறைந்தது என்று தெரிவித்து, அந்தக் காய்க்கு மூத்திர சர்க்கரையைக் குறைக்கும் சக்தியும் இருக்கிறதா என்று கேட்டிருந்தார். இவ்விஷயமாக அக்

காய்களின் குணத்தை ஆராய்ச்சி செய்யுமாறு—ஆராய்ச்சித் துறையில் பல்லாண்டுகளாய்ப் பணியாற்றி வரும் ஒரு நண்பரை வேண்டிக் கொண்டேன். அவரும் ஆராய்ச்சி செய்து வருகிறார். தகவல் கிடைத்ததும் முதலில் கல்கியில்தான் தெரிவிப்பேன். இதற்கு பப்பூலம் என்று வடமொழியில் பெயர்.

2. 'நாக பலா' என்பதற்குத் தமிழ்ப் பெயர் என்ன? அது க்ஷயரோகத்துக்குப் பயன்படுவதா?

துத்தி என்று இதைச் சொல்வார்கள். இதன் வேர் வாதத்தைக் குறைக்கும்; பலம் புஷ்டி இவற்றை அதிகரிக்கச் செய்யும். இதன் விதைகள் வீர்ய விருத்தி செய்யும்......சிறுநீரின் அழற்சியைப் போக்கும். இதன் இலை மூல வியாதியில் உபயோகமாகிறது.

3. சரபுங்கன் மதுமேகத்தில் பலன் தருமா?

தெரியாது. எனக்குத் தெரிந்தவரையில் இதன் வேர், விஷங்களைப் போக்கவல்ல மருந்துகளில் ஒன்று என்பதுதான்.

கடிதம் 733ல் (மிருஸானவில்) இலங்கை நண்பர், கிட்டத்தட்ட ஒரு வருஷமாக இருந்த இருமலுக்குக் கைகண்ட வைத்தியத்தை விளக்குகிறார்.

தாங்கள் கடிதம் 580 ல் தெரிவித்திருந்தபடி பூனைக்காலியின் வேரை ஆட்டுப்பால் நாலு அவுன்ஸில் காய்ச்சி ஒரு மாசமாகக் குடித்து வருகிறேன். நல்ல பலன் இருக்கிறது. இருமல் போய் விட்டது என்ற நிலைக்கு வந்து விட்டேன்! என் நன்றி.

சிறுநீர் கழிக்கும் நேரத்தில் ஏற்படும் எரிச்சலுக்கும் கடுப்புக்கும் என்ன செய்யலாம் என்று கேட்கிறார்.

துத்தியின் விதையைப் பொடித்து மேற்சொன்ன வண்ணம் காய்ச்சும் பாலுடன் சேர்த்துக் காய்ச்சிக் குடிக்கலாம். அல்லது நெருஞ்சில் முள்—தண்ணீர் விட்டான் கிழங்கு இவற்றில் ஒன்றை அவ்விதம் உபயோகித்தாலும் பலன் இருக்கும்.

கடிதம் 735ல் உடுமலைப்பேட்டை சகோதரி வாதத்தினால் பீடிக்கப்பட்டிருக்கும் தம் கணவருக்குக் 'கல்கி' கட்டுரையில் கண்டபடி தத்தூராதி தைலம், சனிலாரம் தைலம், பிண்ட தைலம் இவற்றைத் தாமே தயாரித்துத் தாரை போடுவது ஒத்தடங் கொடுப்பது ஆகியவற்றைச் செய்து வருகிறார். துரிதத்தில் குணம் கிடைக்க இன்னும் என்ன செய்யலாமென்று கேட்கிறார்.

தோஷங்களுக்குப் பாகம் வந்தால் நோவு தானாகவே குறையும். சிவந்த நிறமுள்ள வீக்கம். தொட்டால் சூடு. எரிச்சலும் உண்டு. ஜுரமும் இருக்கிறது. ஆகவே இது ரத்தவாதம். இன்னொரு முறை 'கல்கி' கட்டுரையைக் கவனமாகப் படிக்கவும். உள்ளுக்குச் சீந்தில் கொடி கஷாயம் கொடுக்க வேணும். மேலுக்குத் தத்தூராதிலேபம் போட வேணும். திராக்ஷாதி கஷாயத்தால் இரண்டு மூன்று தரம் பேதியாகும்படியும் செய்யவேணும். விரைவில் குணமேற்படும்.

கடிதம் 765-ல் கொழும்பு சகோதரர் ஒருவர்—தமது 'ஆஸ்துமா'வைப் பற்றி விஸ்தாரமாக எழுதி—அதற்கான சிகிச்சையை விஸ்தாரமாகக் கல்கியின் மூலமே அறிய விரும்பியுள்ளார்.

ஆஹா! ஆகட்டும், ஐயா. அப்படியே ஆகட்டும்.

கடிதம் 799—ல் மல்லேச்வரம் சகோதரி எழுதுவது மிக மிக ஆச்சரியமாக இருக்கிறது.

'நாளையதினம் ஆபரேஷன் செய்ய வேணும்—செய்கிறேன். இல்லா விட்டால் கைக்கே ஆபத்து' என்று டாக்டர் சொன்ன விஷம் ஏறி, ஜுரமும் கண்ட நகச்சுற்றைத் தாமாகவே பிண்டதைலம் காய்ச்சி, தாரையாகவும் பிசுவாகவும் உபயோகித்து ஆபரேஷனைத் தவிர்த்து விட்டார் இச்சகோதரி. ஒருவாரத்துக்கு மேல் இரவு பகல் தூக்கமில்லாமல் அல்லலுற்றவர், தைலத்தை உபயோகிக்கத் தொடங்கிய தினமே இரவு நன்றாகத் தூங்க ஆரம்பித்தார். இதை இரண்டு மூன்று நாட்கள் உபயோகித்த பிறகு பச்சிலைக் கட்டு கட்டி மற்றும் இரண்டே நாட்களில் பரிபூர்ண குணம் அடைந்தார்.

இதைக் கண்டு அந்த டாக்டரே வியப்புற்றிருப்பார் என்று சொல்லவும் வேணுமா?

மக்கட் செல்வம் நிறைந்தவர் இச் சகோதரி. தம் குடும்பத்துக்குத் தேவையான வைத்திய வசதியைத் தாமே செய்துகொண்டு பரம சந்தோஷத்தையடைந்துள்ளார். தாம் தயாரித்துக் கையாளும் மருந்துகளின் பட்டியலை எழுதியுள்ளார். இன்னும் ஒன்றிரண்டு மருந்துகளைத் தயாரித்தாயிற்று. உபயோகிக்கச் சந்தர்ப்பம் வாய்க்கவில்லை என்று எழுதுகிறார். நீலி பிருங்காதித் தைலத்தைக் காய்ச்ச மருந்துகளைச் சேகரித்திருப்பதாயும் விரைவில் காய்ச்சி உபயோகித்துப் பலனைத் தெரிவிப்பதாயும் எழுதியுள்ளார். திடீரென்று ஏற்படும் காயங்கள்—கருக்கு போன்ற சிலவற்றுக்கு நாட்டு வைத்திய முறைப்படி தாமே செய்து கொள்ளக்கூடிய சில முறைகளைத் தெரிவிக்கும்படியும் எழுதிக் கேட்கிறார். இவற்றைத் தெரிவித்தாயிற்று.

இச்சகோதரியைப் போன்றவர் கிராமத்துக்கு ஒருவராவது இருப்பாரானால் என் லட்சியம் பூர்த்தியாகிக் கரை புரண்டு ஓடியதெனக் கருதுவேன்.

# ஒவ்வொரு வீட்டிற்கும் ஒரு விசிறி




உங்கள் இஷ்டப்படி
உபயோகிக் கலாம்

விலை ரூ. 70/-
எக்ஸைஸ் வரி ரூ. 5/-
உள்ளூர் வரி தனி

ஓரியண்ட் ஆல்-பர்பஸ் விசிறி பல வேலைகளைச் செய்யும் புதியதொரு பிரகாசமான கருத்தை அத்துடன் கொண்டு வருகிறது.

ஸீலிங் விசிறி, வால் - பிராக்கெட் விசிறி, டேபிள் விசிறி, ஏர் சர்க்கு லேட்டர் ஆகியவற்றின் அம்சங்கள் எல்லாம் ஒன்றில் சேர்ந்து நின்று விளங்கு கின்றன

நல்லவேகமான காற்றும் குறைந்த செலவும் உள்ள இந்த ஆல்-பர்பஸ் விசிறி, இதுவரை கண்டிராத வியாபகத் தன்மையில் சிறந்ததாகும், நம்பிக்கை யூட்டும் விசிறி இஃதொன்றே— "ஒவ்வொரு வீட் டிற்கும் ஒரு விசிறி."

**Orient**

ஓரியண்ட் ஆல்-பர்பஸ் விசிறிகள்
சொல்வதைக் காட்டிலும் சேவையில் மிக்கவை

ஓரியண்ட் ஜெனரல் இண்டஸ்ட்ரீஸ் லிட்.
6 கோர் பீபி லேன், கல்கத்தா-11

டிஸ்ட்ரிபியூட்டர்கள்:
ஹிந்துஸ்தான் டீலர்ஸ் லிட்., 4, ஸ்ட்ரிங்கர்ஸ் தெரு, சென்னை - போன்: 2658

# குமரி முத்து

## 7. கயல் கன்னி

கடலுக்குள் மூழ்கிய வீராங்கன் எவ்வித சிரமமுமின்றித் தரையில் இருப்பதைப் போலவே மூச்சுவிட்டான். அதைப்போலவே எதிரே உள்ள பொருள்கள் அனைத்தையும் கண்களால் தெளிவாகப் பார்த்தான். இதனால் அவனுக்கு ஏற்பட்ட ஆனந்தமும் ஆச்சரியமும் கொஞ்ச நஞ்சமில்லை. அவன் தங்கத் தீவுக் கிழவனின் மேல் கொண்டிருந்த பற்று இப்பொழுது பன்மடங்காக உயர்ந்தது. 'ஆகா! தங்கத் தீவுத் தாத்தா எப்பேர்ப்பட்ட மூலிகைகளைக் கண்டு பிடித்திருக்கிறார்!' என்று வியந்தவன் கிட்டத்தட்ட கடல் அடியை அடைந்து விட்டதை அறிந்தான்.

அப்பொழுது, சற்று நேரத்துக்கு முன் கடல் மட்டத்தில் பார்த்த மலை எதிரே தெரிந்தது. அதன் மேல் முன்பு பார்த்த மீன்கள் அத்தனையும் இருந்தன. அவற்றைத் தவிர அந்த மீன்களுக்கு நடு நாயகமாக ஒரு புதிய மீனும் தென்பட்டது.

அது மற்ற மீன்களைவிடப் பெரிதாக இருந்தது. முகம், மனித இனத்திலுள்ள பெண்ணின் முகம். பெண்களின் கைகளைப் போலவே இரண்டு கைகள். கைகளுக்குக் கீழே மட்டும்தான் மீன் அமைப்பு. அதன் மேல் இருந்த செதில்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு வைரத்தைப்போல் ஜொலித்தது.

அவன் அருகில் வநததைக் கவனித்துச் சில மீன்கள் 'ஓ'என்று ஒரு வித பயத்தோடு ஓசை செய்தன. உடனே நடுவில் இருந்த பெரிய மீன் வீராங்கனைக் கூர்ந்து நோக்கியது.

அடுத்த கணம் அந்தப் பெரிய மீனும் 'ஓ' என்று மயிர்க் கூச்சல் எடுக்கும்படி விரிட்டது. அந்த ஓசை மற்ற மீன்களின் ஓசையை விட மிகப் பெரியதாக இருந்தது. அது ஏன் அப்படிக் கத்தியது என்பதைச் சற்று நேரத்துக்கெல்லாம் வீராங்கன் தெரிந்து கொண்டான்.

அந்த ஓசை எழும்பிய சில வினாடிகளில் எங்கிருந்தோ சில பெரிய பெரிய முரட்டு மீன்கள் நீரைக் கிழித்துக் கொண்டு வந்து, வீராங்கனை அப்படி இப்படி அசைய முடியாதபடி சுற்றி வளைத்துக் கொண்டன.

வீராங்கன் அணு அளவு கூட அஞ்சவில்லை. இந்த மனித முகமும் கைகளும் கொண்ட மீன்களால் என்ன செய்து விட முடியும் என்று அவன் எண்ணினான். ஏனெனில் அந்த மீன்களின் உருவம் அவ்வளவு ஒன்றும் பெரிதாக இல்லை. 'பெரிய

சேத்தூர் கூத்தன்

பெரிய' மீன்கள் என்பவை கூட அவன் தோள்பட்டை உயரம்தான் இருந்தன. இதனால் அவன் பயம் கொள்ளவில்லை. அதற்குப் பதிலாக இவை என்ன செய்யப் போகின்றன என்பதை அறிய ஆவல் கொண்டான்.

அப்பொழுது "நீ எதற்காக இங்கு வந்தாய்?" என்ற கடுமையான குரல் அவனைத் தூக்கிவாரிப் போட்டது. அப்படிக் கேட்டது நடுவிலிருந்த பெரிய மீன்தான். அதன் கண்கள் இரத்தச் சிவப்பாக மாறி இருந்தன. முகத்தில் கடுமை தாண்டவமாடிக் கொண்டிருந்தது.

வீராங்கன் அதைப் பொருட்படுத்தாது, "ஏன் இங்கு வரக்கூடாது என்று சட்டமா?"



என்றான். அவன் குரலில் அலட்சியமும் ஏளனமும் தொனித்தன.

"உண்மைதான். என் ஆட்சிக்கு உட்பட்ட இந்தப் பகுதியில் அன்னியர்கள், அனுமதி இல்லாமல் பிரவேசிப்பது சட்டப்படி குற்றமாகும். இதற்குக் கடுமையான தண்டனை உண்டு. ஆனால் மன்னிப்பு கேட்டுக்கொண்டு, 'இனி இந்தப் பக்கம் வருவதில்லை' என்று உறுதி கூறினால் தண்டனை அளிக்காமல் உயிரோடு விட்டு விடுவேன்."

"அப்படியா சங்கதி! சரிதான். என்னை மன்னிப்பதற்கும் தண்டனை அளிப்பதற்கும் நீ யார்?" என்று வீராங்கன் பரிகாசத்தோடும் ஆத்திரத்தோடும் கேட்டான்.

அதற்கு, "நான்தான் இந்த மீன் கடலின் ராணி. என் பெயர் கயல் கன்னி. என் ஆணைக்கு உட்பட்டுக் குடிபடைகள் குதூகலமாக வாழ்கிறார்கள். அதைக் கெடுக்க எப்பொழுதாவது உன்னைப்போன்ற மனிதர்கள் சிலர் வந்து குடிபடைகளைத் துன்புறுத்தி வேட்டையாடிச்செல்கின்றனர். அதைத் தடுப்பதற்காக எங்களை வேட்டையாடும் மனிதர்களை நாங்கள் வேட்டையாடி இங்கே இருக்கும் திமிங்கலக் குகையில் போட்டு விடுவோம். ஆனால் உன்னை அவ்வாறு துன்பத்துக்குள்ளாக்க எனக்கு மனம் வரவில்லை. நீ இளம் பிள்ளையாக இருந்தாலும் அஞ்சா நெஞ்சம் கொண்டவனாக இருக்கிறாய். உன்னைப் போலவே எனக்கும் ஒரு மகன் இருந்தான். அவன் பல கலையிலும் வல்லவன். வீராதி வீரன். அவனுக்கு இணையாக இந்த ஈரேழு பதினாலு கடல்களிலும் கிடையாது. அப்படிப்பட்டவன் ஒரு அற்பக் காரியத்தில் ஈடுபட்டு மாண்டு விட்டான்......" என்றாள்.

இந்தக் கடைசி வாக்கியத்தைக் கூறிய பொழுது கயல் கன்னியின் முகத்தில் சோகம் படர்ந்தது. தொண்டை கர கரத்தது. வீராங்கன் இந்தச் சந்தர்ப்பத்தைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ள விரும்பி, "அப்படிப்பட்ட அற்பக் காரியம்தான் என்ன?" என்று கேட்டான்.

"இங்கிருந்து வெகு தூரத்தில் வெந்நீர்க் கடல் என்று ஒன்று இருக்கிறது. அதை அடுத்துக் குமரிக் கடல் என்று ஒரு கடல் இருக்கிறது......"

இப்படிக் கயல்கன்னி ஆரம்பித்த உடனேயே வீராங்கன் காதைக் கூர்மையாகத் தீட்டிக் கொண்டான்.

"......அந்தக் கடலில் கடுமையான நீர்ச்சுழல்களும், கொடிய கடல் விலங்குகளும், இருண்ட காடுகளும், அடர்ந்த பாசிப் புதர்களும், பெரியமலைகளும் அம்மலைகளில் பயங்கரக் குகைகளும் நிறைந்திருக்கின்றன. அப்படிப்பட்ட பயங்கரக் குகை ஒன்றில்தான் விலை மதிப்பற்ற ஒரு அற்புத முத்து இருக்கிறது. அந்த முத்தை எடுத்துவர எத்தனையோ மனிதர்களும் கடற் பிராணிகளும் முயன்று உயிரையும் இழந்திருக்கின்றார்கள். அப்படி உயிரை இழந்தவர்களில் என் மகனும் ஒருவன்..."

கயல் கன்னி சொல்லி முடித்து விட்டுத் தன் கண்களில் துளித்திருந்த கண்ணீரைத் தனது அழகிய கைகளினால் துடைத்துக் கொண்டாள்.

குமரிக் கடலைப் பற்றிக் கயல் கன்னி கூறியதும் வீராங்கனுக்கு அளவற்ற மகிழ்ச்சி ஏற்பட்டது. அவனுடைய மூளை சுறுசுறுப்பாக வேலை செய்தது. 'இந்த மீன் அரசியைக் கொண்டே குமரிக் கடலுக்குச் செல்லும் வழிமுறைகளையும் குமரி முத்தைப் பற்றிய விவரத்தையும் தெரிந்துகொள்ள வேண்டும்' என்று மனத்துக்குள்ளேயே முடிவு செய்துகொண்டான்.

பிறகு, "நீங்கள் சொல்வது ஆச்சரியமாய் இருக்கிறதே! வெந்நீர்க் கடலைத் தாண்டுவதென்பது முடிகிற காரியமா?" என்று கேட்டான்.

"முடியாதுதான். ஆனால் குமரிக் கடலுக்குச் செல்ல இங்கிருந்து ஒரு சுரங்க வழி இருக்கிறது. அது இயற்கையிலேயே அமைந்தது. அது இங்கிருந்து ஆரம்பித்து வெந்நீர்க் கடலை எல்லாம் தாண்டிக் குமரிக் கடலுக்குப் போய்ச் சேருகிறது. அது சேரும் இடம் முத்துக் குகைக்கு முன்னே உள்ள மற்றொரு குகையாகும். அந்தக் குகையில் 'காதுகன்' என்ற கொடிய மிருகம் ஒன்று வசித்து வருகிறது. அது

பயங்கரத் தோற்றமும் மிகுந்த பலமும் உடையது. இதுவரை அதை எவராலும் வெல்ல முடியவில்லை. சுரங்க வழியாகச் செல்பவர்களுக்கு இது ஒரு பெரிய ஆபத்தாகும். என் மகன் அதனுடைய பசிக்குத் தான் இரையானான்......''

கயல் கன்னி சொல்லி முடித்து விட்டு வீராங்கனைப் பற்றி விசாரித்தாள். வீராங்கனும் தன் வரலாற்றைச் சுருக்கமாகவும் விளக்கமாகவும் கூறித் தன் நோக்கத்தையும் விவரித்தான்.

கயல் கன்னி இவ்வளவையும் கேட்டு விட்டு, ''நீ ஊருக்குத் திரும்பிப் போவது தான் நல்லது. இந்தச் சுரங்கத்தின் வழியாகச் சென்றாலும் காதுகனோடு போரிட்டு வெற்றி பெறுவதென்பது முடியாத காரியம். தவிர, இந்தச் சுரங்கப் பாதையும் அபாயம் நிறைந்தது'' என்று கூறினாள்.

ஆனால் வீராங்கன் அதைக் காதில் வாங்கிக் கொள்ளாமல், ''நான் அவசியம் போய்த்தான் ஆக வேண்டும். நிச்சயம் வெற்றியோடு திரும்புவேன்'' என்றான். அவன் பேச்சில் உறுதி தொனித்தது.

கயல் கன்னி அதற்கு மறுப்பொன்றும் கூறாமல் சிறிது நேரம் சிந்தித்து விட்டு, பக்கத்தில் வீராங்கனைச் சூழ்ந்து நின்ற மீன்வீரர்களிடம் ஏதோ கூறினாள். உடனே அந்த மீன் வீரர்கள் வீராங்கனை விட்டுச் சிறிது தூரத்திலிருந்த ஒரு புதரை நோக்கி விரைந்து அதில் ஏதோ செய்தனர். அடுத்த கணம் 'கட கட' வென்ற ஒரு பேரோசை அந்தக் கடலே விண்டு போகும்படி எழுந்தது.



அதே சமயத்தில் பக்கத்திலிருந்த ஒரு பாறையில் நீண்ட பிளவு தோன்றியது. சிறிது நேரத்தில் பிளவு பெரியதாகி ஒருவர் புகுந்து போவதற்கு வசதியான ஒரு வழி உண்டாயிற்று. அது தான் சுரங்க வழி. அதற்குள்ளும் தண்ணீர் தேங்கி நின்றது. அந்த நீரும் கடல் நீரும் தனித்தனியாகவே தெரிந்தன. இரண்டும் ஒன்று சேரவில்லை. சுரங்க நீர் 'கன்னங்கரேல்' என்று ஒரு தனி நிறத்தைப் பெற்றிருந்தது.

வீராங்கன் அதை நோக்கிப் பாய்ந்து செல்லத் தயாரானான். கயல் கன்னி அவனுடைய வீரத்தைக் கண்டு வியந்தபடியே தன் கையில் கிடந்த சங்கு மோதிரம் ஒன்றைக் கழற்றினாள். பிறகு வீராங்கனைப் பார்த்து, ''தம்பி வீராங்கா! இது சக்தி வாய்ந்த மோதிரம். கடலில் முதன் முதலில் தோன்றிய வலம்புரிச் சங்கால் செய்யப்பட்டது. உனக்கு ஆபத்து ஏற்பட்டால் அப்பொழுது மட்டுமே இதை உபயோகித்துக் கொள். வெற்றியோடு திரும்பி வா'' என்று கூறி அவனிடம் மோதிரத்தைக் கொடுத்தாள்.

வீராங்கன் அதைப் பயபக்தியோடு வாங்கி இடது கை மோதிர விரலில் அணிந்து கொண்டு ஏதோ சொல்ல வாயைத் திறந்தான். ஆனால் வார்த்தைகள் வெளிவரவில்லை. அவன் தயக்கத்தைக் கவனித்து விட்ட கடல் கன்னி, ''என்ன சொல்ல வேண்டும்? எதுவாயிருந்தாலும் அச்சமின்றிச் சொல்'' என்றாள்.

வீராங்கன், ''பெரிதாக ஒன்றும் இல்லை. நான் கடல் மட்டத்தில் படகில் வந்து கொண்டிருக்கும் பொழுது உங்களைத் தவிர மற்றவர்களை ஒரு மலைமேல் பார்த்தேன். நான் பார்த்த கொஞ்ச நேரத்தில் அவர்கள் அத்தனை பேரும் மறைந்து போனார்கள். அவர்கள் மறைந்ததும் அந்த மலையும் நீருக்குள் மூழ்கிவிட்டதே, ஏன்?'' என்றான்.

''ஓ...அதுவா? அது உண்மையிலேயே கருங்கல் மலை அல்ல. ஒருவித கடற் பஞ்சினால் ஆன மலை. அது நாங்களே தயாரித்தது. வெய்யில் காய்வதற்காகத் தினமும் மேலே போவோம். அந்தப் பஞ்சுமலை கடல் மட்டத்தில் மிதக்கக் கூடியது. அப்பொழுது யாரேனும் எதிரிகள் வந்துவிட்டால் கண்ணிமைக்கும் நேரத்தில் அதில் இருக்கும் விசித்திரப் பொந்துகளில் மறைந்து பஞ்சு மலையையும் கீழே இழுத்துக்கொண்டு வந்து கட்டி விடுவோம்!''

சந்தேகம் நிவர்த்தியானதும் கயல் கன்னியிடமும் மற்றவர்களிடமும் விடைபெற்றுக் கொண்டு சுரங்கப் பாதையில் புகுந்து வெகு வேகத்தோடு நீந்தத் துவங்கினான். அவன் சுரங்கத்துக்குள் வந்ததும் சுரங்கப் பாதை கடகடவென்ற சத்தத்தோடு மறுபடியும் மூடிக் கொண்டது.

வீராங்கனுக்கு அந்த ஓசை இனம் புரியாத பீதியை அளித்தது. அதோடு சுரங்கத்தில் நிறைந்திருந்த அந்தகாரம் அவன் பீதியை அதிகமாக்கியது. (தொடரும்)

# பொங்கிவரும் பெருநில

அத்தியாயம் 13

## மலர்க் கரங்கள் நடுங்கின

கி. ராஜேந்திரன்

ராஜன் நர்ஸிங் ஹோமுக்குப் பின் பக்கத்தில் ஒரு பெரிய மாமரம் இருந்தது. சித்திரை மாதத்தில் அதில் ஏராளமான மாங்காய்கள் கொத்துக் கொத்தாகக் காய்த்துத் தொங்கின. அதைப் பார்த்தபிறகு யாரால்தான் சும்மா இருக்க முடியும்? அதிலும் நடராஜனும் மணியும் சிறுவர்கள். துருதுருப்பு மிகுந்தவர்கள். மணிக்கு வயது பதினைந்து; மற்றவனுக்குப் பதிமூன்று. ஒரு கருங்கல்லை எடுத்து வீசினான் மணி. மாங்காய் விழுகிறதா என்று ஆவலோடு அண்ணாந்து பார்த்தான் நடராஜன். மாங்காய் விழவில்லை. ஆனால் கல் திரும்பி வந்தது. அண்ணாந்து பார்த்து நின்று கொண்டிருந்த நடராஜன் நெற்றியில் விழுந்தது—காயம் பட்டது. குபுகுபு வென்று ரத்தம் பொங்கி வழிந்தது.

சற்றுத் தூரத்தில் நின்று இதைப் பார்த்துக் கொண்டிருந்த சிறுமி விமலா 'வீல்' என்று கத்தினாள். தலையைப் பிடித்துக்கொண்டு அடுத்த கணம் வீட்டை நோக்கி வேகமாக ஓடினாள். மாமாவிடம் நடராஜனுக்கு அடிபட்டுவிட்டது என்று அழுது கொண்டே சொன்னாள். தன் அருமை மகன் நெற்றியில் அடிபட்டு ரத்தம் வழிய நிற்பதைக் கண்டதும் டாக்டர் ராமலிங்கத்துக்கு முன்பு எப்போதும் அறிந்திராத கோபம் வந்தது.

"ஏனடா அவன்மீது கல்லை எறிந்தாய்?" என்று கோபமாகக் கத்தினார், மணிசேகரனைப் பார்த்து.

"அவன்மீது நான் கல்லை எறியவில்லை, மாமா! மாங்காய் மீதுதான் எறிந்தேன்" என்றான் மணி. அவனுடைய வழக்கமான கேலிப் பேச்சு அது.

ராமலிங்கத்துக்கு வேடிக்கையாக இல்லை. கோபம்தான் அதிகமாயிற்று. "பண்ணினதையும் பண்ணிவிட்டு, எதிர்த்து வேறு பேசுகிறாயா?" என்று கடுமையாக இரைந்தார் ராமலிங்கம்.

"எதிர்த்துப் பேசவில்லை, மாமா! உண்மையைச் சொன்னேன். நடராஜன் மீது நான் கல்லை எறியவில்லை. ஆகவே குற்றம் என்னுடையது இல்லை. கல்லினுடையதுதான் குற்றம்" என்றான் மணி.

"சீ கழுதை! வாயை மூடு! மேலே மேலே பேசிக்கொண்டே போகிறாயே?"

"கழுதை ஒருவேளை வாயை மூடலாம் மாமா; ஆனால் நான் மனிதன். மனிதன் வாயை மூடுவதற்குக் கடவுளால்தான் முடியும்!"

பளார் என்று அவன் கன்னத்தில் பலமாக அறைந்து விட்டார் ராமலிங்கம். "எப்போது பார்த்தாலும் விளையாட்டுப் பேச்சுதானா? அதற்கு ஒரு எல்லையே கிடையாதா?" என்று கத்தினார்.

இடது கன்னத்தை ஒரு கரத்தால் அழுத்திப் பிடித்துக் கொண்டான் மணி. வலது கரத்தை அவர் பக்கமாக நீட்டினான். அவனது கேலிப்பேச்சு எங்கேயோ போய் விட்டது. "மாமா! என்னை அடிக்க உங்களுக்கு உரிமை கிடையாது!" என்றான் தன்னுடைய ஆள் காட்டி விரலை ஆட்டியபடியே.

"ஏனடா உரிமையில்லை? பெற்றோர் இல்லாத பிள்ளையை எடுத்து எட்டு வருஷங்களாக வளர்த்து வருகிறேனே, அதனால் உரிமை கிடையாதா? ஏழு வயது முதல் என் வீட்டில் சாப்பிட்டு வருகிறாயே, அதனால் எனக்கு உரிமை கிடையாதா? அல்லது எஸ். எஸ். எல். ஸி. பாஸ் செய்யும் வரை படிக்க வைத்திருக்கிறேனே, அதனால் உன்னை அடிக்க உரிமை கிடையாதா?"

"மாமா! என்னை வளர்த்து வந்ததற்காக நன்றி செலுத்துகிறேன்; கடமைப் பட்டிருக்கிறேன். எந்த வகையிலேனும் நீங்கள் எனக்கு அளித்திருக்கும் உதவிகளை ஈடு செய்ய முயற்சி செய்வேன். ஆனால் குற்றமற்ற என்னை அடிக்க உங்களுக்கு உரிமை அளிக்க முடியாது. மீண்டும் அந்தத் தவறைச் செய்யாதீர்கள்!" என்று சொன்னான் மணிசேகரன்.

"எது சரி, எது தப்பு என்று எனக்கு நீ சொல்லித் தருகிறாயா?" என்று கேட்டுக் கொண்டே கண் சிவக்க மீண்டும் கையை ஓங்கினார் ராமலிங்கம். நடராஜன் சட்டென்று அவர் முன்னால்



போய் நின்றுகொண்டான். கண்களில் கண்ணீருடன் நெற்றியில் ரத்தத்துடன், "அப்பா! என்னுடைய காயத்துக்கு இன்னும் மருந்து போடவில்லையே?" என்று நிதானமாகக் கேட்டான்.

ராமலிங்கம் சுய உணர்வு பெற்றார். பச்சைக் குழந்தையைத் தூக்குவது போல் நடராஜனைத் தூக்கிக் கொண்டு நர்ஸிங் ஹோமுக்குள் சென்றார். காயத்தைக் கழுவி மருந்து வைத்துக் கட்டினார்.

"அப்பா" தப்பு என்னுடையதுதானே? மணியை எதற்காகக் கோபித்துக்கொள்கிறீர்கள்? வேண்டாம், அப்பா!" என்றான் நடராஜன் நாத்தழுதழுக்க.

"உன்மீது இருக்கும் அன்புதானடா காரணம்" என்றார் ராமலிங்கம்.

"அந்த அன்பை மணியிடமும் காட்டுங்கள், அப்பா. அவன் அனாதை!"

ராமலிங்கம் பிரமித்துப் போனார். 'சிறுவன் நடராஜனுக்குத் தெரிந்தது இவ்வளவு வயதாகியும் எனக்குத் தெரியாமல் போய் விட்டதே. 'அவன் அனாதை!' இரண்டே வார்த்தையில் தம் தவற்றை எடுத்துக் காட்டிவிட்டானே.'

உடனே ராமலிங்கம் மணியிடம் சென்று ஆறுதலாக இரண்டு வார்த்தைகள் சொல்லியிருக்கலாம். "என்னை மன்னித்து விடு" என்று கேட்க வேண்டியதில்லை! "உன்னை மன்னித்து விட்டேன்" என்று சொல்லியிருந்தாலும்

போதும்; அதையும் செய்யவில்லை. இனி அவனிடம் இப்படி நடந்து கொள்வதில்லை என்று மனத்துக்குள் சங்கல்பம் செய்து கொண்டாரே ஒழிய, அவனிடம் சென்று நடந்ததை மறந்துவிடு என்றோ அல்லது அவனுக்கு ஆறுதல் கூறும் முறையிலோ இரண்டு வார்த்தைகள் கூடப் பேசவில்லை. அன்று ராமலிங்கம் செய்த இரண்டாவது தவறு இது.

அன்று இரவு படுக்கப் போன மணிசேகரனைக் காலையில் காணவில்லை. மணியைக் கண்டுபிடிக்க என்னென்னவோ செய்து பார்த்தார் ராமலிங்கம்; பயனில்லை. விமலாவோ நடராஜனை எண்ணி, அவன் மண்டைக் கட்டைப் பார்த்து அழுத கண்ணும் சிந்திய மூக்குமாக இருந்தாள். மணிசேகரன் ஓடிப் போன துக்கத்துடன் இந்தத் துயரம் வேறு சேர்ந்து கொண்டது பொன்னம்



மாளுக்கு. விமலாவைச் சமாதானம் செய்யப் பொன்னம்மாள் எப்படியெல்லாமோ பிரயத்தனம் செய்தாள்; பிரயோசனமில்லை. மறுநாள் மாலை "எனக்கு வலிக்கவேயில்லை விமலா!" என்று நடராஜன் 'அ'வை மட்டும் மனத்துக்குள் சொல்லி, அசத்தியம் செய்த பிறகுதான் அவள் அழுகை ஓய்ந்தது.

அன்றைய நிகழ்ச்சிகள் ராமலிங்கத்தின் உள்ளத்தில் ஆறாத புண்ணை ஏற்படுத்தி விட்டன; பொன்னம்மாளின் மனத்தில் தீராத வேதனையை உண்டாக்கி விட்டன. பத்து வருஷங்களுக்குப் பின் இப்போது மணிசேகரன் திரும்பி வந்திருந்தான். ராமலிங்கத்தின் மனப்புண் ஆற ஆரம்பித்தது.

ராமலிங்கம் மணியிடம் பேசிக் கொண்டிருந்தது அரை குறையாகப் பொன்னம்மாள் காதில் விழுந்தது.

"யார் யாரை மன்னிக்க வேண்டும்?" என்று கேட்டுக் கொண்டே அவள் உள்ளே நுழைந்தாள். 'மணியை விமலா மன்னிக்கவே மாட்டாள் என்கிறேன்' என்று விஷயத்தை விளக்கிச் சொன்னார் ராமலிங்கம்.

"அதெல்லாம் ஒன்றும் இல்லை. விமலாவின் தலையை எதற்காக அனாவசியமாக உருட்டுகிறீர்கள்? மணிதான் மன்னிக்க முடியாத குற்றமாக என்ன செய்து விட்டான்? அந்தப் பழைய கதையையெல்லாம் இப்போது இழுக்க வேண்டாம்! வேறு ஏதாவது பேசுங்கள்" என்றாள் பொன்னம்மாள்.

"வேறு ஏதாவது பேசுவதற்கு எனக்கு இப்போது நேரமில்லை. நான் நர்ஸிங் ஹோமுக்குப் போகவேண்டும்" என்று சொல்லி எழுந்தார் ராமலிங்கம். போவதற்கு முன், "மணி! உன் பெட்டி படுக்கை ஒன்றையும் காணோமே? எங்கே?" என்று கேட்டார்.

"திருவல்லிக்கேணியில் ஒரு 'ரூம்' எடுத்துக் கொண்டிருக்கிறேன், மாமா."

தன்னைத் தம் வீட்டிலேயே இருக்கச் சொல்லி ராமலிங்கம் வற்புறுத்துவார் என்று ஒரு கணம் எதிர்பார்த்தான். அப்படிக் கேட்டால் அரை மனத்துடன் ஒப்புக் கொள்வதுபோல் ஒரு சிறு நாடகம் நடத்த வேண்டும் என்று திட்டமிட்டான். 'முடியாது' என்று நிச்சயமாகச் சொல்ல எண்ணி வந்திருந்தான் அவன். விமலாவைப் பார்த்ததும் அந்த எண்ணம் மாறிவிட்டது. ஆனால் ராமலிங்கம் அவனை ஏமாற்றிவிட்டார்.

"சரி! மாமியுடன் பேசிக் கொண்டிரு. சாப்பிட்டு விட்டு நிதானமாகப் போகலாம்" என்று சொல்லிவிட்டு அவர் அங்கிருந்து போய் விட்டார்.

'மணி தனியே சுதந்திரமாக இருக்க விரும்புவான். அவனுடைய குணம் அப்படி. அவனை இங்கு இருக்கச் சொல்லி வற்புறுத்த வேண்டாம்' என்று எண்ணிக் கொண்டார் ராமலிங்கம்.

அவர் போன பிறகு நீண்ட நேரம் மணியும் பொன்னம்மாளும் பேசிக் கொண்டிருந்தார்கள். தான் சென்று வந்த இடங்களைப் பற்றியெல்லாம் விவரமாக எடுத்துச் சொன்னான் மணி. அவனை முதன் முதலாகத் தான் சந்தித்ததை ஞாபகப் படுத்தினாள் பொன்னம்மாள். அவனுடைய தகப்பனார் ராமலிங்கத்திடம் வைத்தியத்துக்காக வந்தார். அவருக்கு க்ஷயரோகம் என்று தெரிந்து கொண்டு உடனே தமது செல்வாக்கை உபயோகித்து க்ஷயரோக ஆஸ்பத்திரியில் சேர்த்தார் ராமலிங்கம். தமது

ஒரே மகன் மணியை என்ன செய்வது என்று தெரியாமல் விழித்தார் அந்த மனிதர். கடைசியில் ராமலிங்கத்தி னிடமே அவனை வேலைக்கு அமர்த்தினார்.

ஏழு வயதுச் சிறுவனை வேலை வாங்கப் பொன்னம்மாளுக்கு மனமில்லை. அதற்கு மாருக அவனுக்கு அவள் பணிவிடை செய்தாள். நடராஜனைப் போலவே அவனையும் ஒரு மகனுகப்பாவித்து அன்பு செலுத்தினுள்; பள்ளிக்கு அனுப்பினுள்.

நோய்க்கும் மணியின் தகப்பனுருக்கும் இடையே நடந்த போராட்டத்தில் நோய் வெற்றி பெற்றது. மணியின் தகப்பனுர் சில மாதங்களுக்குள் மணியை இந்த உலகில் தனியே விட்டு விட்டு மறைந்து போய் விட்டார்.

''மாமி! அந்தப் பழைய கதையை யெல்லாம் எதற்காக இப்போது ஞாப கப்படுத்துகிறீர்கள்?'' என்று கேட் டான் மணிசேகரன்.

''சரியான கேள்விதான் மணி! என் னுடைய மனத்தை நீண்டநாட்களாகத் துளைத்துக் கொண்டிருந்த ஒரு சந்தே கத்தை நிவர்த்தி செய்து கொள்ள இதை ஞாபகப்படுத்தினேன்.''

''என்ன சந்தேகம் மாமி?''

''இவ்வளவு தூரம் என் சொந்த மக னைப் போல் உன்னை வளர்த்து வந்த என்னிடம் ஒரு வார்த்தை கூடச் சொல் லாமல் இரவோடு இரவாகப் புறப் பட்டுப்போக உனக்கு எப்படி மனம் வந்தது என்று கேட்கிறேன்? நீ சென் றதைப் பற்றியோ அதற்கான கார ணத்தைப் பற்றியோ சந்தேகமில்லை. அதற்கு உடன்பட்ட உன் மனத்தைப் பற்றிச் சந்தேகம். அப்படிப்பட்ட கல் மனமும் இருக்க முடியுமா மணி? அது வும் உன்மீது உயிரையே வைத்திருந்த என்னிடம்கூட உன்னுடைய மனம் இளகவில்லையே?''

''அதை நினைத்துப் பார்த்தால் எனக்கே ஆச்சரியமாகத்தான் இருக் கிறது. அன்று ஏதோ வைராக்கியத்தில் போய் விட்டேன். பிறக்கும் போதே தாயாரைச் சொர்க்கத்துக்கு அனுப்பி னேன். சில வருஷங்களுக்குள் தகப்பனு ரையும் பறி கொடுத்தேன். பின்னர் எடுத்து வளர்த்தவர்களையும் விட்டுப் பிரிந்து சென்றேன். இவ்வளவுக்கும் பிறகு வேடிக்கையாகச் சிரித்துப் பேசு கிறேன். உண்மையிலேயே நான் கல் நெஞ்சன்தான் மாமி!''

''போனது போகட்டும், மணி! இனி மேலாவது மாமாவையும் மாமியையும் திடுதிப்பென்று விட்டு விட்டுப் போய் விடாதே! உனக்குத் தனியாகத்தான் இருக்கவேண்டுமென்ருல் இரு. நாங்கள் ஆட்சேபிக்க வில்லை. ஆனுல் அடிக்கடி எங்களை 'வந்து பார். கவனித்துக் கொள்'' என்ருள் பொன்னம்மாள்.

* * *

மணிசேகரன் பொன்னம்மாள் சொன்னபடியே அடிக்கடி வந்து போய்க் கொண்டிருந்தான். அதற்கு உண்மை யான காரணம் விமலாதான். பொன் னம்மாளுடைய வேண்டுகோள் அதற்கு அனுகூலமாக இருந்தது! இடையே மாமா ராமலிங்கத்தினிடம் தனக்கு ஒரு வேலை தேடித் தருமாறு கேட்டான். ராமலிங்கம் ஒரு கடிதம் கொடுத்தார். ''டைரக்டர் சுகுமாரன் எனக்கு நண் பர். அவரை வேண்டுமானுல் போய்ப் பார்!'' என்று சொன்னுர்.

மற்ற இடங்களைப் போலவே சென்னை யிலும் சில நாட்கள் இருந்து விட்டுப் போய்விடலாம் என்றுதான் மணி வந் திருந்தான். விமலாவைப் பார்த்த பிறகு சென்னையை விட்டுப் புறப்பட அவனுக்கு மனமே வரவில்லை.

ஆனுல் விமலாவுக்கு மணியின் வருகை திருப்தி தரவில்லை. அவன் வந்தது பிடிக்க வில்லை என்று சொல்ல முடியா விட்டா லும், வராமலே இருந்திருக்கக் கூடாதா என்ற எண்ணம் ஏற்பட்டது. அவன் வந்த முதல்நாளே அத்தானை அலட்சி யப்படுத்தியதும், தன்னைக் கேலி செய் ததும், தன்னைப் பார்த்த பார்வையும் அவளுக்குப் பிடிக்கவில்லை. ஆனுல் நாளடைவில் விமலாவின் இந்த எண் ணம் அடியோடு மாறி விட்டது. மணி சேகரனின் குதூகலமான பேச்சும் மலர்ந்த முகமும் இனிய சுபாவமும் அவனைப்பற்றிய நல்லெண்ணத்தை அவ ளிடம் உண்டாக்கின. மாமாவும் மாமி யும் அவனிடம் காட்டும் அன்பைப் பார்த்தபிறகு விமலாவும் மணியிடம் சகஜமாகப் பேசிப் பழக ஆரம்பித்தாள்.

இதனுல் மணிசேகரனின் நிலை தர்ம சங்கடமாகப் போய்விட்டது. அவளிடம் நெருங்கிப் பழகும்போது அவன் உள்ளம் துடியாகத் துடித்தது. தன் காதலை அவ ளிடம் வெளிப்படுத்த முடியாமல் தவித் தான். எப்படிச் சொல்ல முடியும்? விம லாவுக்கும் நடராஜனுக்கும் இடையே இருந்த அன்பில் எப்படிக் குறுக்கிடுவது? நல்லதொரு சந்தர்ப்பத்துக்காகக் காத் திருந்தான் மணிசேகரன்.

ஒரு நாள், ''எனக்கு ஒரு உதவி செய் வீர்களா?'' என்று கேட்டாள் விமலா.

''காத்திருக்கிறேன்'' என்ருன் மணி.

விமலா புன்னகையுடன், ''கடிதம் எழுதிவைத்திருக்கிறேன். அதை அனுப்ப ஒரு உறை வேண்டும்'' என்ருள்.

''ஒரு உறை என்ன? ஒரு கட்டு உறை வாங்கி வருகிறேன்'' என்று சொல்லி

விட்டுப் போனான் மணிசேகரன். அரை மணி நேரம் கழித்து உறைகளுடன் திரும்பி வந்தான். அவற்றைக் கையில் வாங்கிய விமலா, குபீரென்று சிரித்தாள்.



ஒவ்வொரு உறையின் மீதும் நடராஜனுடைய லண்டன் விலாசம் எழுதப் பட்டிருந்தது. கடிதம் லண்டன் செல்வதற்குத் தேவையான தபால் தலைகள் ஒவ்வொன்றிலும் ஒட்டப்பட் டிருந்தன!

"ஏன் சிரிக்கிறாய், விமலா? அத்தனை கடிதங் களையும் அத்தானுக்குத் தானே எழுதப் போகிறாய்?" என்று கேட்டான் மணிசேகரன்.

"ஆமாம், அதை எப்படிக் கண்டு பிடித்தீர்கள்?"

"நடராஜனுடைய அதிர்ஷ் டத்தில் எனக்கு எப்போதுமே அசைக்க முடியாத நம்பிக்கை உண்டு விமலா!" என்றான் மணி.

விமலாவுக்கு ஒருகணம் அவன் சொன்னது அர்த்தமாகவில்லை. புரிந்து கொண்டதும் அவள் திடுக்கிட்டாள். இந்த மனிதர் ரொம்பப் பொல்லாதவராக இருக்கிறார். சிரித்துப் பேசிக் கொண்டே வாழைப் பழத்தில் ஊசி ஏற்றுவது போல் தகாத வார்த்தைகளைப் பேசுகிறார் என்று எண்ணினாள். மேலே பேசாமல் சட்டென்று திரும்பி வேகமாகச் சென்று தன் அலமாரியைத் திறந்தாள். அதில் ஒரு மூலையில் புடவை களுக்கு இடையே ஒளித்து வைத்திருந்த அத்தானுடைய புகைப் படத்தை

எடுத்து வைத்துக்கொண்டு சிறிது நேரம் கொஞ்சினாள்.

படத்தை மறுபடியும் ஒளித்து வைத்து விட்டு மற்றொரு பக்கத்தில் பத்திரமாக ஒரு நூலைப் போட்டு முடித்திருந்த காகிதக்



கட்டை எடுத்தாள். நடராஜன் எழுதியிருந்த கடிதங்கள் அவை. ஒவ்வொரு கடிதத்தையும் சுமார் நூறு முறையாவது படித்திருப்பாள் விமலா. இருந்தும் அவளுக்கு அலுக்கவில்லை. நூற்று ஒராவது முறையாக இப்போது நேரம் போவதே தெரியாமல் அவற்றை ஆர்வத்துடன் படிக்க ஆரம்பித்தாள்.

அதிலேயே லயித்துப் போயிருந்த அவள் மணிசேகரன் எதிரே வந்து நின்றதைக் கூடக் கவனிக்கவில்லை.

''என்ன படித்துக் கொண்டிருக்கிறாய்?'' என்று கேட்டான் மணிசேகரன்.

அவனை ஏறிட்டுப் பார்க்காமலேயே, ''கடிதங்கள்'' என்று ஒரே வார்த்தையில் அவன் கேள்விக்குப் பதில் சொன்னாள் விமலா.

''எப்படிப்பட்ட கடிதம்?''

''கடிதம் என்றால் கடிதம்தான். கடிதங்களில் இருபது வகையா இருக்கும்?''

''ஏன் இருக்காது? வியாபாரக் கடிதம், நண்பர்களின் கடிதம், காரியாலயங்களுக்கு வரும் கடிதம், காதல் கடிதம்... ஓ! கண்டு பிடித்து விட்டேன். இவை எல்லாம் காதல் கடிதங்கள்தானே?''

''இருக்கலாம். அதைப் பற்றி உங்களுக்கு என்ன?''

''எனக்கு என்னவா? எனக்கு வருத்தம்.''

''எதற்கு வருத்தப்பட வேண்டும்?''

"நானும் இவற்றைப் போல் என் காதலிக்குக் கடிதங்கள் எழுத முடியவில்லையே என்று வருத்தம்."

"அதற்கு வருத்தப்படுவானேன்? கடிதங்கள் எழுதுவதுதானே? யார் குறுக்கே நின்று தடுக்கிறார்கள்?"

"நான் எழுதத் தயார்தான் ஆனால், ஆனால்..." மணிசேகரன் தயங்கினான்.

"ஆனால் என்ன?" என்று கேட்டாள் விமலா வியப்போடு.

"ஆனால் நான் காதலிக்கும் அந்தப் பெண்ணுக்கு ஏற்கெனவே வேறொருவன் பல கடிதங்கள் எழுதியிருக்கிறான். அவற்றைப் படித்துப் பார்த்த பின்னர் என்னுடைய கடிதங்களை அவள் ஏற்றுக் கொள்வாளோ மாட்டாளோ என்று சந்தேகமாக இருக்கிறது" என்று சொன்னான் மணிசேகரன்.

விமலா துணுக்குற்றாள். ஏறக்குறைய இந்த மாதிரியான பதிலைத்தான் அவள் எதிர்பார்த்தாள். வேண்டுமென்றே தான் பேச்சை வளர்த்தி வந்தாள். உண்மையை நேரடியாக முதலிலேயே தெரிந்து கொண்டு விடுவது நல்லது என்று நம்பினாள்.

"உங்களை ஏற்றுக் கொள்ள விரும்பாத அந்தப்பெண் யாராக இருக்கும்?" என்று கேட்டாள் விமலா. அவள் இதயம் படபட வென்று வேகமாக அடித்துக் கொண்டது. மணிசேகரனின் பதிலை அவள் உள்ளம் ஆவலுடன் எதிர்நோக்கி யிருந்தது.

"விமலா! நான் என் வாழ்நாளில் எத்தனையோ தவறுகள் செய்திருக்கிறேன். தவறு செய்யாதவன் மனிதனாக இருக்க முடியாது. தெய்வப் பிறவியாகிவிடுவான். நான் மனிதன்தான். மனிதனுக்குள்ள குணாதிசயங்கள் எனக்கும் உண்டு. ஆகவே தவறே செய்ததில்லை என்று சொல்லிக் கொள்ளவில்லை. ஆனால் நான் செய்த தவறுகளிலெல்லாம் மிகப் பெரிய தவறு சிறு வயதிலே இந்த வீட்டை விட்டு வெளியேறியதுதான். அப்படி நான் போகாமல் இருந்திருந்தால் இன்று நான் பின்தங்கி யிருக்க மாட்டேன். நடராஜனுடன் போட்டியிட்டு வெற்றி பெற்றிருப்பேன். நிச்சயம்! ஆனால் இப்போது அவன் முந்திக் கொண்டான். நான் தூங்கிப் போன முயலாகி விட்டேன். அவனை இனியும் தோற்கடிக்க முடியுமா என்று சந்தேகமா யிருக்கிறது, விமலா!"

விமலாவின் உடல் சிலிர்த்தது. கடிதங்களைப் பற்றி யிருந்த அவள் மலர்க் கரங்கள் இலேசாக நடுங்கின.

## அத்தியாயம் 14

# காதல் என்னும் மாயை

**வீ**ட்டுக்குத் திரும்பினாள் மல்லிகா. கமலம் படுத்துவிட்டாள். ஆனால் தூங்கவில்லை. அறையின் மூலையில் அரிக்கன் விளக்கின் ஒளி சிறிதாக்கப்பட்டு 'மினுக் மினுக்' கென்று எரிந்து கொண்டிருந்தது. அம்மாவை இறுக்கிக் கட்டிக் கொண்டு சரஸ்வதி அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தாள்.

மல்லிகா உள்ளே நுழைந்ததும், "யாரது?" என்று கேட்டாள் கமலம்.

"நான்தான்."

"எங்கே அம்மா போயிருந்தாய்?"

"ஆற்றங்கரைக்கு."

"இந்த இருட்டில் தனியாகவா ஆற்றங்கரைக்குப் போனாய்? ஏதாவது பூச்சி பொட்டு இருக்குமே?"

மல்லிகா பதில் பேசவில்லை.

"அவரைப் பார்த்தாயா, மல்லிகா?"

"பார்த்தேன்."

"என்ன சொன்னார்?"

"ஊருக்குப் போய்விட்டு வருகிறேன் என்று கூறினார்."

இப்போது கமலம் மௌனமானாள். சிறிது நேரத்துக்குப் பிறகு "உங்கள் காதல் நாடகம் அதற்குள் முடிந்து விட்டதா?" என்று கேட்டாள்.

அந்தக் கேள்வியில் ஏளனமும் கலந்திருந்ததாக மல்லிகாவுக்குத் தோன்றியது. அவளுக்குத் துக்கம் தாள முடியாமல் போய் விட்டது. தலையணையில் முகத்தைப் புதைத்துக் கொண்டு உடல் குலுங்கக் குலுங்க அழுதாள்.

உலகமே தனக்கு எதிராகச் சதி செய்வது போல் தோன்றியது அவளுக்கு. நான் சந்தோஷமாக இருந்தால் இவர்களுக்குப் பிடிக்கவில்லை. நான் துக்கப்பட்டால்தான் இவர்கள் சிரிப்பார்கள்! ஏழு வருஷங்கள் நான் கஷ்டப்பட்டிருக்கிறேன்; உழைத்திருக்கிறேன். அப்போது உலகம் என்னைப் பார்த்து அனுதாபப்படவில்லை. சந்தோஷமாகச் சிரித்தது. இப்போது நான் சிறிது சந்தோஷமாக இருந்தால் அது உலகத்துக்குப் பிடிக்கவில்லை. ஊராருக்கு அதற்குள் பொறாமை. அதனால் என் நடத்தையில் சந்தேகப்படுவது போன்ற பாவனை! ஊராரைப் பற்றிச் சொல்வானேன்? என்னுடைய சொந்தத் தாய்க்கு

# ஆகாய வெளியின் எல்லையிலே

சர்வதேச பூகோள ஆராய்ச்சி வருடமானது, சென்ற ஜூலைமாதம் 1957-ல் வருஷம் ஆரம்பமாகியது—இது டிசம்பர் 1958 முடிய நீடித்திருக்கும்.

இது சரித்திரத்திலேயே மறக்கமுடியாத விஷயமாகும். முதன்முதலாக மனிதனுல் செய்யப்பட்ட செயற்கைச் சந்திரன் பூமியின் ஆகர்ஷண சக்திக்கு அப்பாற்பட்டதும் வெகுதூரமில்லாத அண்டை வெளிக்கு அனுப்பப்பட்டுள்ளது. அவ்விடத்திற்கு அப்பால் முடிவேயில்லாத வெளி ஆரம்பமாகிறது.

மேற்கூறிய வருடத்தின் அட்டவணையின் பிரகாரம் மேலும் மேலும் விஞ்ஞான கருவிகளால் நிரப்பப்பட்ட செயற்கைச் சந்திரன்களை அண்டை வெளிக்கு அப்பால் அனுப்பப்படும். இதனால் அநேக முக்கியமான விஷயங்களை ரேடியோவின் மூலம் பூமியின்மேல் இருக்கும் விஞ்ஞானிகளுக்கு தெரியப்படுத்தும்.

மற்றைய நாடுகளுடன், இந்தியாவும் இவ்வாராய்ச்சி வருடத்தில் கலந்துகொண்டுள்ளது. நைனிடாலிலுள்ள ஆராய்ச்சி நிலையம் செயற்கை சந்திரன்களிடமிருந்து வரும் விஷயங்களைபற்றி ஆராய்ச்சி செய்வதற்கு உபயோகப்படுத்தப்படும்.

இந்த ஆகாச வெளியைப்பற்றிய விஷயங்களை சேகரிக்கும் முயற்சியானது, மனிதனது அண்டை வெளியைக் கைப்பற்ற வேண்டும் என்னும் கனவை நிஜமாக்கக்கூடும்.

*துரிதமாக மாறிக்கொண்டிருக்கும் இவ்வுலகில் கூட, அன்றாட வாழ்க்கைக்கு ஒரு முக்கியமான உற்சாகத்தை அளிக்கும் சில பொருள்கள் உள்ளன—உதாரணமாக வில்ஸ் நேவிகட் சிகரெட்டுகள்—உயர்தர ரசிகர்களின் உற்றதுணை, முன்போல்......*




**வில்ஸ் எப்பொழுதும் உயர்ந்தவை**

MC/104

*Issued by The Imperial Tobacco Company of India Limited*

என்னிடம் நம்பிக்கையில்லை. என்னைப் பெற்ற அன்னைக்கு என் காதலைப் புரிந்து கொள்ளும் சக்தியில்லை! ஐயோ, கடவுளே! எதற்காக இப்படி எல்லாரும் சேர்ந்து கொண்டு என்னை வதைக்கிறார்கள்? எதற்கு இப்படி என்னைத் துன்புறுத்துகிறார்கள்? அவரவர்கள் தங்கள் வேலையைப் பார்த்துக் கொண்டு போகக் கூடாதா? நான் எப்படிப் போனால் இவர்களுக்கு என்ன?

கணக்கையா வந்து பேசிய பிறகு சேகரைப் பற்றி அவளுக்கு ஏற்பட்டிருந்த கவலைகளும் சந்தேகங்களும் இப்போது அடியோடு அகன்று விட்டன. சேகர் நாளைக்குப் போய் விடுவார். அதனால் என்ன? பெற்றோர்களின் சம்மதம் பெற்றுத் திரும்புவார். என் கரத்தைப் பற்றுவார் என்று உவகை அடைந்தது அவள் உள்ளம். ஆனால் அந்த உவகை பூரணத்துவம் பெற முடியாமல் கணக்கையாவும் கமலமும் தங்களுடைய கடுஞ்சொற்களால் செய்து விட்டார்கள். அவர்கள் மீது கோபமும் ஆத்திரமும் பொங்கி வந்தன மல்லிகாவுக்கு. அதை வெளிக்காட்ட முடியாததால் அவள் துக்கப்பட்டாள். தனிமையில் கண்ணீர் விட்டு அழுதாள்.



இப்படி அவள் கேவிக் கேவி அழுவதைக் கேட்டாள் கமலம். தன்னை அணைத்திருந்த சரஸ்வதியின் கரங்களை மெல்ல அகற்றி விட்டு எழுந்தாள். மல்லிகாவின் அருகில் வந்து படுத்தாள்.

"மல்லிகா! அழாதே அம்மா! உன்னை நான் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை என்று நினைக்கிறாயா? நீ சேகரிடம் கொண்டிருக்கும் காதல் எனக்குத் தெரியும். நான் சந்தேகப்படுவது உன்னையல்ல மல்லிகா. சேகரைப் பற்றித்தான் எனக்குச் சந்தேகம். முன் பின் தெரியாத மனிதர். திடுதிப்பென்று வந்தார். திடீரென்று புறப்பட்டுப் போகிறார். அவர் உன்னிடம் கொண்டிருக்கும் காதல் நிரந்தரமானது என்பது என்ன நிச்சயம்?"

"மறுபடியும் மறுபடியும் இப்படிப் பேசி என்னை எதற்குத் துன்புறுத்துகிறாய்? நீ இங்கு வரவில்லை என்று யார் அழுதார்கள்? உன் விரிப்பில் போய்ப் படுத்துக்கொள்" என்று தாயிடம் எரிந்து விழுந்தாள் மல்லிகா.

கமலம் எழுந்திருக்கவில்லை. "உனக்குப் பிடிக்கவில்லையானால் அதைப்பற்றிப் பேசவில்லை. நீ அழுவதை மட்டும் நிறுத்தி விடு!" என்றாள்.

சிறுமி சரஸ்வதியைவிட மங்கை மல்லிகாவுக்குத்தான் இப்போது தாயின் அரவணைப்பு அதிகமாகத் தேவைப்பட்டது. தாயின் வார்த்தைகள் மல்லிகாவுக்குப் பிடிக்கா விட்டாலும் தாயாரையே வெறுக்க முடியுமா? கமலத்தை இறுக அணைத்துக் கொண்டு கண்களை மூடிக் கொண்டாள். நாளைக் காலையில் அவர் சென்னைக்குப் புறப்படுவதற்கு முன் இன்னொரு முறை சந்தித்துப் பேச வேண்டும் என்று எண்ணிக் கொண்டாள்.

காதலின் உயர்வைப் பற்றி எவ்வளவு அழகாகச் சொல்லி விட்டார். அவரைப் போய் நான் சந்தேகப்பட்டேனே. கணக்கையாவும் அந்த சினிமாக்காரர்களும் சொன்னதை வைத்துக் கொண்டு அவரைப் பற்றித் தவறாக நினைத்து விட்டேனே. மற்றவர்களுக்கும் எனக்கும் என்ன வித்தியாசம்? நானே எங்களுடைய காதலைப் பற்றிச் சந்தேகப்பட்டால் ஊரார் ஏன் சந்தேகிக்க மாட்டார்கள்? இனி சந்தேகத்துக்கே இடம் தரக் கூடாது! எங்கள் காதல் தூய்மையானது! உண்மையானது! நிரந்தரமானது! இவ்வாறு எண்ணிக் கொண்டே தூங்கிப் போனாள் மல்லிகா.

"அசட்டுப் பெண்ணே! அவசரமும் பரபரப்பும் நிறைந்த உலகமடி இது! சற்றுக் கூர்ந்து பார். மாடு பூட்டி வண்டியில் செல்ல நேரமில்லை என்று பஸ்ஸில் விரைகிறார்கள். நடந்து செல்ல முடியாத அவசரம், சைக்கிளில் போகிறார்கள். ஏற்றம் இறைக்க முடியாத பரபரப்பு இயந்திரத்தின் மூலம் தண்ணீர் இறைக்கிறார்கள். எரு சேர்த்து வயலில் அடிக்கும் வரை காத்திராமல் ரசாயன உரத்தைத் தூவிப் பண்படுத்தி வருகிறார்கள். கிராமப்புறங்களிலேயே இந்த அவசரமானால் பட்டணங்களில் கேட்கவே வேண்டாம். அங்கு காலையில் எழுந்தது முதல் இரவில் படுக்கப்போகும் வரை ஒரே பரபரப்பும் அவசரமும் தானடி! அப்படிக் கிராமங்களிலும் சரி, பட்டணங்களிலும் சரி, எல்லாமே ஒரேயடியாக அவசரப்படும்போது காதல் மட்டும் ஏன் அவசரப்படக் கூடாது? அதுவும் அவசரப்படத்தான் செய்கிறது! காதல் ஆரம்பமாவதற்கு முன்னரே சில சமயங்களில் அவசரம் அவசரமாக முடிந்தும் விடுகிறதடி!

கமலமும் மல்லிகாவும் பேசிக்கொண்டிருந்த அதே சமயத்தில் தலையாரி வீரப்பனுடைய மனைவி அவனைக் கேள்வி மேல் கேள்வி கேட்டுக் குடைந்து கொண்டிருந்தாள். ''என்ன நடந்தது மச்சான்? சொல்லுங்களேன்?'' என்று கேட்டாள். வில்லுப் பாட்டு கேட்டுக் கொண்டிருந்த போது அவள் வீரப்பனுடைய பதற்றத்தைக் கவனித்திருந்தாள்.

''கணக்கையா யாரிடமும் சொல்ல வேண்டாம்னு சொல்லியிருக்காங்க. தெரியுமா? நான் சொல்ல மாட்டேன்.''

''அவர் கிடக்கிறாரு! யார்கிட்டே சொல்லிப்புடறே? உன் பெண்சாதிகிட்டத்தானே? சும்மா சொல்லு, மச்சான்!'' என்று குழைந்தாள் அவள்.

வீரப்பனுக்கும் தன்னுடைய மனச் சுமையை யாரிடமாவது பகிர்ந்து கொள்ள வேண்டும் என்று தோன்றியது. சொல்லி விட்டான் அவன்.

''அதெப்படி மச்சான் நீங்க சும்மா திரும்பினீங்க? நான் மட்டும் ஆம்பிள்ளையாக இருந்தா அவனை வாழைத்தண்டு சீவுகிற கணக்கா சீவி இருப்பேன்!''

''ஏ புள்ளே! வேண்டாம்! என் கோபத்தைக் கிளப்பாதே! வெளியாளாச் சேன்னு பார்த்தேன்!''

''வெளியாளானால் என்ன? உள்ளூராளானால் என்ன? கல்யாணம் ஆகாத பெண் பிள்ளையைத் தொடறவன் மனுசனா? அரிவாளை எடுக்காட்டாலும் உங்க கழியையாவது நாலு தரம் சுழற்றி அவன் மண்டையிலே போட்டிருக்க வேணும்?''

''புள்ளே! மேலே பேசாதே. என் மார்பு துடிக்குது! தோள் தினவெடுக்குது! வேண்டாம்!''

''தோள் தினவெடுக்க இவ்வளவு பேச்சு தேவைப்படுதா?''

''நாளைக்குப் பாரு புள்ளே! கணக்கையா எக்கேடானு கெட்டுப் போகிறாருன்னு அவனைச் சந்தியிலே இழுத்து நாலு வைக்கடறேன்.''

மறுநாள் அதி காலையில் ஆற்றங்கரையில் குளிக்க வந்தவர்களும் தண்ணீர் மொள்ள வந்தவர்களும் இதைப் பற்றியே பேசினார்கள். வாமனவதாரமாக இருந்த வீரப்பனுடைய சொற்கள் அரைமணி நேரத்துக்குள் விச்வரூபம் எடுத்துப் பயங்கரமாகக் கிராம மக்கள் ஒவ்வொருவர் காதிலும் ஒலித்துக் கொண்டிருந்தன. அந்த வழியாக நடந்து சென்ற மல்லிகாவைச் சந்தேகக்கண்களோடு செண்பகபுர வாசிகள் ஒவ்வொருவரும் பார்த்தார்கள்.

ஊருக்குப் புறப்படுவதற்காகக் காரில் ஏறிக் கொண்டிருந்தான் சேகர். அவன் காரில் ஏறுவதைப் பார்த்ததும் மல்லிகா ஓடோடி வந்தாள். அவளைப் பார்க்காமலே போய்விட வேண்டும் என்று எண்ணிய அவன் ஏமாந்தான். அவளைத் தனியே அழைத்துச் சென்றான்.

''நான் அழவில்லை. உங்களைச் சந்தேகிக்கவும் இல்லை. ஆனால் நேற்று நீங்கள் கடைசியாகக் கோபித்துக் கொண்டு என்னை அனுப்பி விட்டீர்கள். அதுதான் எனக்குப் பாரமாக இருக்கிறது'' என்றாள் மல்லிகா.

''நேற்று கோபித்துக் கொள்ள வேண்டியது அவசியமாக இருந்தது. அதனால் கோபித்துக் கொண்டேன். இனிமேல் உன்னை ஒருநாளும் கோபித்துக் கொள்ளவே மாட்டேன். எங்கே சந்தோஷமாகச் சிரித்துக் கொண்டே, 'போய் வாருங்கள்' என்று சொல்லி, விடை கொடு பார்க்கலாம்.''



''போய் வாருங்கள்'' என்றாள் மல்லிகா ஏக்கத்தோடு. சேகர் திரும்பினான். அவனை வழிமறித்துக் கொண்டு கிராமத்து மக்கள் குழுமியிருந்ததைக் கண்டு திடுக்கிட்டு நின்றான்.

தமிழ் நாட்டின் பண்பாடு மிக உயர்ந்தது. உயர்ந்த பண்பாடாக இருப்பதாலேயே அதைக் கடைப் பிடிப்பதும் மிகக் கடினமாகவும் இருக்கிறது. நகர்ப்புறங்களில் அந்தப் பண்பாடு அநேகமாக மறைந்து கொண்டு வருகிறது. மேல் நாட்டு நாகரிகம் புகுந்து கொண்டு தமிழ்ப் பண்பாட்டை ஒதுக்கி வருகிறது. ஆனால் கிராமப் புறங்களில் அந்தப் பண்பாடு அப்படியே நிலைத்து வருகிறது. அதனைப் போற்றிப் பாதுகாத்து வருகிறார்கள்.

அந்தப் பண்பாட்டுக்குச் சிறிதளவு தீங்கு நேர்ந்து விட்டாலும் அவர்கள் மனம் பொறுப்பதில்லை. உள்ளம் குமுறிச் சீறி எழுகிறார்கள்.

செண்பகபுரம் மக்களும் அப்படித்தான் சீறி எழுந்தார்கள். அவர்களுக்குத் தலைமை தாங்கிக் கிராமத் தலையாரி வீரப்பன் கம்பீரமாக நின்றான்!

''ஏலே! எங்கிட்டுலே கிளம்பிட்டே?'' என்றான் வீரப்பன்.

சேகருக்கு ரொம்பக் கோபம் வந்தது. தன்னை வழிமறித்து நிற்க இவர்களுக்கு என்ன துணிச்சல்? ''டேய்! என்ன 'ஏலே' போட்டு மிரட்டறே? வழியை விடுடா! நேரமாகிறது.''

''என்ன அவசரங்க? எங்கிட்டுப் போறப்போலே? கொஞ்சம் சொல்லி விட்டுப் போங்க.''

வீரப்பன் சண்டை போடுவது என்று வந்திருக்கிறான் என்று சேகருக்குத் தெரிந்து போயிற்று. ஊருக்குப் புறப் படும் சமயத்தில் சண்டை போட்டு வம்பு வளர்க்க அவன் தயாராக இல்லை. அவனுடைய சகாக்கள் அவனுக்காகக் காத்திருப்பார்கள். எப்படியாவது இங் கிருந்து புறப்பட்டுப் போனால் போதும் என்று எண்ணினான்.

''சென்னைக்குப் போகிறேன். வழியை விடு'' என்று சாந்தமாகவே அவனுக் குப் பதில் சொன்னான்.

''ஓ! பட்டணத்து சூரனா நீ! லே! பட்டணத்து சூரனுச்சே என்னவேணு மானாலும் செய்யலாம் என்கிற எண் ணமா? இம்புட்டுத் தைரியம் எங்கிட் டிருந்துடா வந்தது, உனக்கு?''

சேகருக்குக் கோபத்தை அடக்க முடிய வில்லை. ''என்னைக் கேள்வி கேட்க நீ யாரடா? வழியை விடுடா'' என்று இரைந்தான்.

சிரித்தான் வீரப்பன். ''பட்டணத் துக் குதிரை துள்ளுது! வேண்டாம்லே! என் கோபத்தை அதிகமாக்காதே! இந்தப் பெண்ணு மேலே கையை வச் சியா? அப்படிப் பெண்களிடம் நடந்து கொள்வதுதான் பட்டணத்து வழக் கமா? பதில் சொல்லுலே!''

பாய்ந்து சென்றான் சேகர். வீரப்ப னுடைய கன்னத்தில் 'பளார் பளார்' என்று நாலு அறை வைத்தான். ''அது சொல்லுமடா பதில்! அல்பப் பயலே!''

கிராம மக்கள் நிதானமாக முன்னேறி னார்கள். வீரப்பன் தன் இரு கைகளையும் அகல நீட்டி அவர்களை நிறுத்தினான். ''நானே கவனிச்சுக்கிறேன். நீங்களெல் லாம் சிரமப்படாதீங்க'' என்றான்.

''என்னடா கவனிச்சுக்கிறே? கழியை எறிஞ்சுட்டு வாடா! பட்டணத்து ஆளானுபயந்துடுவான்னு நினைச்சையா? எத்தனை பல்லு இருக்குன்னு எண் ணிக்கோ!'' என்றான் சேகர் சட்டைக் கையை மடித்து விட்டுக் கொண்டே.

மல்லிகா அவனுக்கு முன்னால் போய் நின்று கொண்டாள். யுத்தத்துக்குத் தயாராக நீட்டியிருந்த அவனுடைய கரத்தைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டே, ''வேண்டாம்! வேண்டாம்! தயவுசெய்து சண்டை போடாதீர்கள்'' என்று கெஞ்சினாள்.

கிராம மக்கள் நடுவில் விசாலமான இடம் விட்டு விலகிக் கொண்டார்கள். இதற்குள் ஏதோ கூட்டம் கூடியிருப் பதைப் பார்த்துவிட்டு வேகமாக நடந்து வந்தார் கணக்குப் பிள்ளை சச்சிதானந் தம். வீரப்பனும் சேகரும் யுத்தத்துக்குத் தயாராக நிற்பதைக் கண்டு பிரமித்து நின்றார்! இவ்வளவு விரைவாகக் காரி யங்கள் நடந்து போகும் என்று அவர் எதிர்பார்க்கவில்லை.

சேகர் திமிறி மல்லிகாவின் பிடிகளி லிருந்து விலகிக் கொண்டான். வீரப்பன் கழியைத் தூக்கிப் போட்டான். இரு வரும் கைகலந்தார்கள்.

கணக்குப்பிள்ளை திடீரென்று தம் உணர்வு பெற்றார். ''வீரப்பா!'' என்று அதிகாரக் குரலில் அழைத்தார். வீரப்பன் காதில் அது ஏறவில்லை. சேகரை இரண்டாவது முறையாகக் கீழே தள்ளிப் பின்னர் தூக்கி நிறுத்திக் கொண்டிருந்தான் அவன். சேகர் தட்டுத் தடுமாறி நின்றதுதான் தாமதம் மறுபடி யும் அவன் கன்னத்தில் ஓங்கி ஒரு குத்து விழுந்தது. 'மடேர்' என்று விழுந்தான் சேகர். அவன் கன்னத்தில் ரத்தம் வழிந்து கொண்டிருந்தது. அந்தக் காட்சியைக் காணச் சகியாமல் மல்லிகா தன் கண்களை இறுக மூடிக் கொண் டாள். மறுபடியும் சேகரைத் தூக்கி நிறுத்தினான் வீரப்பன்.

சச்சிதானந்தத்துக்கு எங்கிருந்துதான் அவ்வளவு பலம் வந்ததோ தெரிய வில்லை. வீரப்பன் முன்னால் போய் நின்று கொண்டார். ''கீழே விழுந்த வனைத் தூக்கி நிற்க வைத்து அடிக்கி றயா? கோழைப் பயலே!'' என்று சொல்லிக் கொண்டே வீரப்பனைத் தம் கையில் இருந்த தடியினால் தாக்கினார்.

மல்லிகா விம்மிக் கொண்டே சேக ரிடம் ஓடிச் சென்று அவனை அணைத்துக் கொண்டாள். ரத்தம் வழியும் அவன் கன்னங்களை வருடிக் கொண்டே அவன் மார்பைத் தன் கண்ணீரால் நனைத்தாள்.

குனிந்து அவளை நோக்கினான் சேகர். அவன் முகத்தில் அவமானமும் வெறுப் பும் ஏமாற்றமும் வெட்கமும் போட்டி யிட்டுக் கொண்டு பிரதிபலித்தன. மல்லிகாவின் தோள்களைப் பற்றி ஒரு தள்ளு தள்ளினான். திரும்பி வேகமாக நடக்க ஆரம்பித்தான். அவனுக்காகத் தயாராகக் காத்திருந்த காரில் ஏறிக் கொண்டான். மணிக்கு அறுபது மைல் வேகத்தில் கார் பறந்தது.

கீழே தள்ளப்பட்ட மல்லிகா எழுந் திருக்கவே இல்லை. மண்ணோடு மண்ணாக விழுந்து கிடந்து விம்மினாள். **(தொடரும்)**

இன்று வரும் என்று நீங்கள் எப்பொழுதாகிலும் நம்பாத நாள் இதோ வந்துவிட்டது. இன்றே உங்கள் தனயனின் மெட்ரிகுலேஷன் பரீட்சை நாள்.

அவன் பெரியவனாக வளருவான். நீங்களும் உங்கள உத்தியோகத்திலிருந்து ஓய்வெடுத்துக் கொள்ளுவீர்கள். ஓய்விற்குப்பின் உங்கள் வருமானம் குறைந்துவிடும். அதை ஈடுசெய்ய ஏதாவது சேமித்து வைத்திருக்கிறீர்களா? இல்லை என்றால் செய்து கொள்ளுங்கள்.

அநேகர் ஒரு "என்டௌமென்ட் பாலிஸி" மூலம் அந்திய காலத்திற்கு பாதுகாப்புத் தேடிக்கொண்டுள்ளார்கள். இது ஒரு நீண்டகாலத்திட்டம். உதாரணமாக உங்கள் 30 வது வயதில் ரூ. 5000 க்கு "இன்ஷ்யூர்" செய்துக்கொண்டால் 25 வருட பாலிஸிமீது ஒரு மாதத் தவணைக்கு ரூ. 15 தான் கட்டவேண்டும்.

இப்படியாக நீங்கள் ஓய்வெடுத்துக்கொள்ளும் தருணத்தில், அதாவது 55 வது வயதில் ரூ. 5000க்குக் குறையாமல் உங்களுடைய உதவிக்குக் கிடைக்கும். அதற்கு முன்பு நீங்கள் இறந்துவிட நேர்ந்தால் முழுத்தொகையும் உங்கள் வாரிசுக்கு உடன் கொடுக்கப்படும்.

ஆகையால் கூடியமட்டும் பணத்தை சேமித்து வையுங்கள் ரூ. 5 ஆனாலும் சரி 50 ஆனாலும் சரி ஒரு "என்டௌமென்ட் பாலிஸி" உங்களுடைய தள்ளாத வயதில் பெரிய உதவி அளிக்கும்.

# உண்மையான முதல் பரீட்சை





**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா**

சென்ட்ரல் ஆபீஸ் "ஜீவன்கேந்திரா" ஜம்ஷெட்ஜி டாடா ரோடு, பம்பாய்-1.



# வேலுத்தம்பியின் உடைவாள்

என். சம்பந்தம்

அன்று விடுமுறையாகையால் என் அறையைச் சுத்தப்படுத்துவதில் ஈடுபட்டிருந்தேன். ஒரு மாதமாகவே அறையைச் சுத்தம் செய்ய வேண்டுமென்பதைப் பலவித காரணங்களால் தள்ளிப் போட்டுக் கொண்டு வந்து விட்டேன். அறை தும்பும் தூசியுமாக அடைந்து போய்க் கிடந்தது. அன்று எனக்கு இருந்த ஒரிரு வேலைகளையும் தள்ளி வைத்து விட்டு அந்தக் காரியத்தில் மும்முரமாக உட்கார்ந்தேன். பழைய பத்திரிகைகளைத் தூசி தட்டி வைக்கும் பொழுது அதில் சென்ற ஆண்டு வெளிவந்திருந்த சுதந்திர நூற்றாண்டு மலர் என்னைப் பெரிதும் கவர்ந்தது. கீழ்வரும் செய்தியை ஆவலுடன் படித்தேன்.

"...பத்தொன்பதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் பிரிட்டிஷ்காரரை எதிர்த்துப் போராடிய தளவாய் வேலுத்தம்பியின் உடைவாள் ராஷ்டிரபதியிடம் சமர்ப்பிக்கப்பட்டது. கிளிமானூர் ராஜ பரம்பரையைச் சேர்ந்த ராஜா ரவிவர்மா தாங்கள் காத்துவந்த உடைவாளை ராஷ்டிரபதியிடம் தந்தார். வேலுத்தம்பி தமது அந்திம காலத்தில் இந்த உடைவாள் எக்காரணத்தை முன்னிட்டும் பிரிட்டிஷ்காரர் கையில் சிக்கக் கூடாதென்று கிளிமானூர் ராஜாவிடம் ஒப்படைத்துச் சென்றார். வார்டு கிச்சனர் இவ்வாள் மீது ஒரு கண் வைத்திருந்தார். அவருக்கும் எட்டாமல் வேலுத் தம்பியின் உடைவாளைக் காப்பாற்றி இப்பொழுது தகுதி வாய்ந்தவர் வசம் ஒப்படைப்பதாக ராஜா ரவிவர்மா கூறினார்..."

என் சிந்தனை எங்கோ சிறகடித்தது. பற்பல நினைவுகள் என் உள்ளத்தில் அலைமோதின. பத்தொன்பதாம் நூற்றாண்டின் ஆரம்பத்துக்கு நானும் ஓடினேன்......

மார்கழி மாதத்துக் குளிர் உடலை ஒடுக்கிக் கொண்டிருந்தது. ஜில்லென்று வீசிய குளிர் காற்று உடலையும் ஊடுருவி இரத்தத்தையும் உறையச் செய்தது! வெண் புகை போன்று கவிந்திருந்த மூடுபனி சூரியனின் தளிர்க் கரங்களை விழுங்கிவிட்டிருந்தது. ஆள் நடமாட்டம் கண்ணுக்குத் தெரிந்தும் தெரியாமலும் புலப்படும் காலை வேளை. இன்னும் சரியாக விடியவில்லை. அந்தக் கொட்டும் பனியில் ...

விரைவாக ஓடி வரும் ஒற்றைக் குதிரையின் காலடியோசை கேட்டது! பனியை உண்ட நொய் மணற் பரப்பில் கால்களைப் புதைய விட்ட வண்ணம் குதிரை வேகமாக ஓடி வந்து கொண்டிருந்தது. அதன் மீது அமர்ந்திருந்த திடகாத்திரமான மனிதன் சரிந்து நெருங்கியிருந்த தென்னை மரங்களிடையே குதிரையை வெகு சாமர்த்திய



மாகச் செலுத்திக் கொண்டிருந்தான். குதிரையும் பழக்கப்பட்டதைப் போல் வளைந்து நெளிந்து ஓடிக் கொண்டிருந்தது. குதிரையைச் செலுத்திக் கொண்டிருந்த மனிதனைச் சேர்த்து அணைத்தபடி யாரோ ஒருவன் பின்னால் உட்கார்ந்திருந்தான். அவன் தலை தொங்கி மடிந்திருந்தது!

தூரத்தில் சிறிய புள்ளியாகத் தெரிந்த குடிசை சிறிது பொழுதில் பெரிதாக விரிந்து நெருங்கியது. குடிசை நெருங்கியதும் குதிரையின் லகானை இழுத்துப் பிடித்தான் அம்மனிதன்! இழுத்துப் பிடித்த வேகத்தில் முன்னங் கால்களைத் தரையில் அழுத்திப் பின்னங்கால்கள் சறுக்கிய வண்ணம் தன்னைச் சமாளித்துக் கொண்டு குதிரை நின்றது. அவன் அவசரம் அவசரமாகக் காலினாலேயே குடிசையின் கதவை எட்டி உதைத்தான்.

''யாரது?......'' உள்ளிருந்து பெண்ணின் அதிகாரமான குரல் கேட்டது. அவளுடைய குரலில்தான் எவ்வளவு வலிமை?

''நான்தான் ரங்கப்பன் ...''

''நீங்களா!...'' என்று கேட்டவண்ணம் அவள் கதவைத் திறந்தாள். கதவைத் திறந்தவள் ரங்கப்பனைத் தழுவியபடி கிடந்த வேலுத்தம்பியைக் கண்டதும் திடுக்கிட்டாள்! ஒரு நிமிடம் அவள்உடலில் அசைவே யில்லை. நெஞ்சு படபடவென்று அடித்துக் கொள்ள இமைகளை முழுவதும் விரித்துத் தன் எதிரிலிருந்த காட்சி உண்மைதானா என்று பார்த்தாள்! அவள் கண்கள் அவளை ஏமாற்றவில்லை! வேலுத் தம்பிதான் உணர்ச்சியற்று ரங்கப்பனை அணைத்தபடி கிடந்தான்.

''எஜமானுக்கு என்ன ஆச்சு?'' என்று நெஞ்சில் கைவைத்தபடி கேட்டாள்.

''அதெல்லாம் பிறகு விவரமாகச் சொல்லுகிறேன். குடிசையில் யார் இருக்கிறது?''

''யாருமில்லை .....''

''மலையப்பன் இன்னும் வரவில்லையா?...''

''வந்து எங்கோ போயிருக்கிறது!''

''சரி! எஜமானைத் தாங்கிக் கொள்!'' என்று கூறியபடி குதிரையிலிருந்து வேலுத் தம்பியை இறக்கினான். அவள் குடிசைக் கதவைப் பரக்கத் திறந்துவைத்துவிட்டு மூலையில் சுருட்டி வைத்திருந்த பாயை விரித்துப் போட்டாள். அவன் ஜாக்கிரதையாக வேலுத் தம்பியைப் படுக்கையில் கிடத்தினான். வேலுத் தம்பியின் உடலில் அசைவே காணவில்லை.




''ஜக்கு! ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்...ஒரு நொடியில் வைத்தியரை அழைத்துக் கொண்டு வருகிறேன்.''

மறுபடியும் அவன் குதிரை தெற்கு நோக்கிப் பறந்தது! ஜக்கம்மா கவலையே உருவாக வேலுத்தம்பியின் அருகில் வந்து உட்கார்ந்தாள். அவன் மார்பில் பாய்ந்திருந்த கத்தியின் அடையாளம் அவள் கண்களை உறுத்தியது! உடலை இறுகியிருந்த சட்டை முழுவதிலும் பெருகிப் பாய்ந்திருந்த இரத்தம் உறைந்திருந்தது. அவள் ஆழ்ந்த பெருமூச்சு ஒன்றை விட்டாள்!

''மூட்டாள்கள்!...'' என்று தாவி விழுந்தான் லார்டு கிச்சனர். உப்பிப் பருத்திருந்த அவன் முகம் உதிரத்தைக் கொட்டுவது போன்று சிவந்தது. ஏற்கனவே மதுவெறியால் சிவந்திருந்த அவன் கண்கள் கோபத்தால் இரத்தச் சிவப்பாயின! கையிலிருந்த

மதுவை எதிரில் நின்று கொண்டிருந்தவர்கள் மேல் வீசினன்.

''துப்பாக்கியால் கூட்டும் எப்படியோ அவன் தப்பி விட்டான்!''

''துப்பாக்கியால் சுட்டும் தப்பி விட்டான்! இதைச் சொல்ல உங்களுக்கு வெட்கமாக இல்லை? சே!......'' என்றான் வார்டு கிச்சனர் ஆத்திரத்துடன்.

''வேலுத் தம்பியைச் சூழ்ந்துகொண்டவுடன் எங்கிருந்தோ வந்து ரங்கப்பன் அவனைத் தன் குதிரையில் தூக்கிப் போட்டுக்கொண்டு போவான் என்று எங்களுக்கு எப்படித் தெரியும்? நாங்களும் அவனைத் துரத்திப் பார்த்தோம். எங்கள் பார்வையிலிருந்து அவன் எப்படியோ மறைந்து விட்டான்!'' என்றான் வெக்ஸ்.

''அவன் உங்களைவிடப் புத்திசாலி..... அதோடு பெரிய வீரனும்கூட! துப்பாக்கியோடு அலையும் உங்களால் வெறுங் கைக்கு



விலங்கிடுவதற்கு முடியவில்லை யென்றால் நீங்கள் முட்டாள்கள் தானே?.......''

''மன்னிக்க வேண்டும், மை லார்டு! ரங்கப்பனைப் பிடிப்பதைவிட நாங்கள் வேலுத் தம்பியின் உடைவாளைக் கவர்ந்து வரத்தான் முயன்றோம். அதனால் தான் இந்தத் தோல்வி ஏற்பட்டது!'' என்றான் ரே.

வார்டு கிச்சனரின் கண்கள் ஆசையால் விரிந்தன!

''வேலுத் தம்பியின் உடைவாள்!...அதைத் தொட்டவர் வீரர்களாகி விடுவார்களாமே?'' என்று கேட்டான் வியப்புடன்.





''ஆமாம்! அதன் ஒளியை நான் ஒரேயொரு முறை பார்த்திருக்கிறேன். உறையிலிருந்து அது வெளிப்படும்பொழுது மேகத்திடையே தோன்றும் மின்னலைப்போலவே கண்களைப் பறிக்கிறது! அதன் உறைமீது இழைத்திருக்கும் வைரங்களும், வைடூர்யங்களும் ஒளியில் மின்னும்பொழுது நமக்கு வேலுத் தம்பியே கண்ணுக்குப் புலப்படுவதில்லை. அதைப் பயன்படுத்திக் கொண்டுதான் வேலுத் தம்பியும் இதுவரை தப்பி வந்திருக்கிறான்.''

''போதும்!...என் ஆசையை அதிகமாக்காதீர்கள்!'' என்று கத்தினன் வார்டு கிச்சனர்.

அவனுடைய கண்களில் அந்த வாளைப் பற்றிய கனவே நிரம்பி யிருந்தது! கைகளைப் பின்புறம் கட்டியபடி அவன் உலாவினன்.

''வேலுத்தம்பி பிழைத்து எழுவானா?'' என்று சந்தேகத்தோடு கேட்டான் கிச்சனர்.

''பிழைப்பது கஷ்டம்தான்! குத்துவாள் மார்பில் ஆழப் பதிந்து அவன் பிரக்ஞையற்று விழுந்து கிடப்பதை என் கண்ணாலேயே பார்த்தேன்'' என்றான் ரே.

''அந்த வீர வாளை நான் எப்படியும் அடைந்தே தீரவேண்டும்'' என்றான் கிச்சனர், அடங்காத ஆவலுடன். அவன் குரலில் ஒலித்த உறுதியை ஆமோதிப்பவர்கள் போன்று ரேயும், வெக்ஸும் பலமாகத் தலையாட்டினர்.

வேலுத்தம்பி புரண்டு படுத்தான். அவன் முகத்தில் அணையப்போகும் விளக்கின் சுடர் தட்டியது! உடலிலிருந்து வெளியேறின பெருவாரியான இரத்தம் அவன் உடலை வெளுக்கச் செய்திருந்தது. ஜக்கம்மாவும், ரங்கப்பனும் அவன் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவன் இமைகள் சற்றுத் தளர்ந்து கரு விழிகளைப் புலப்படுத்தின. விழிகள் இரண்டும் சுற்றிலும் அலைந்து ரங்கப்பனிடமும், ஜக்கம்மாவிடமும் நிலைத்தன.

''ரங்கப்பா!'' வேலுத்தம்பியின் குரல் சன்னமாக ஒலித்தது.

''எஜமான்! என்ன காரியம் செய்துவிட்டீர்கள்? உங்களை நம்பியிருக்கும் எங்களையெல்லாம் மறந்துவிட்டுத் தற்கொலைக்குத் துணிந்து விட்டீர்களே!'' என்றான் ரங்கப்பன் துக்கத்துடன்.

வேலுத்தம்பி வறண்ட புன்னகையை உதிர்த்தான்! வறண்டு வெடித்திருந்த உதடுகளை நாவால் ஈரமாக்கிக் கொண்டான்.

''பறங்கியர் கையில் குண்டு அடிபட்டு மரணமடைவதை விடப் பலரின் இதயத்தின் ஆழத்தை அளந்து பார்த்த என் குத்துவாளுக்கே இரையாவது எவ்வளவோ மேலல்லவா?'' பொறுக்க முடியாத வலியிலும் உறுதியுடன் பேசினான் அவன்.

''தனியாகப் போகாதீர்கள் எஜமான் என்று நான் எத்தனையோ முறை சொல்லியும் நீங்கள் கேட்காமல் இத்தகைய ஆபத்தை விலைக்கு வாங்கி விட்டீர்களே!'' என்றான் ரங்கப்பன் உள்ளக் குமுறலுடன்.

''விதி விளையாடி விட்டது, ரங்கப்பா! பறங்கியர் சிப்பாய்கள் பதுங்கி யிருக்கும் கோவில் என்பதை அறியாமலே களைப்பான குதிரையை விட்டு இறங்கி விட்டேன். இறங்கிய பின்புதான் விஷயம் தெரிந்தது. தப்புவதற்கு வழியே தெரியவில்லை. சமயத்தில் குத்துவாள்தான் உதவி புரிந்தது. ரங்கப்பா! இனி நான் பிழைக்க மாட்டேன்!'' என்றான் வேலுத்தம்பி மார்பை அழுத்திப் பிடித்த வண்ணம்.

''அப்படியெல்லாம் சொல்லாதீர்கள், எஜமான்! நீங்கள் நிச்சயம் பிழைத்துக் கொள்வீர்கள். காயத்துக்குப் பச்சிலை வைத்து வைத்தியர் கட்டியிருக்கிறார். இன்னும் ஒருபொழுது கழிந்தால் உங்கள் உயிருக்கு ஒரு ஆபத்தும் கிடையாதாம்!''

''எதற்கு ரங்கப்பா வீண் மனக்கோட்டை கட்டுகிறாய்? என்னுடைய நிலைமை எனக்கு நன்றாகத் தெரிகிறது. அது போகட்டும்! மலையப்பன் வந்தானா?''

''சற்று முந்தித் தான் வந்தான்!''

''இளிமாலூர் ஜமீன்தார் என்ன சொன்னாராம்?'' என்று கேட்டான்.

''வருகிற பௌர்ணமிக்கு உப்பங்கழிக்கு அடுத்திருக்கிற ராஜாளித் தோப்பில் உங்களைச் சந்திக்கச் சொன்னாராம்.''

''வேறு ஒன்றும் சொல்லவில்லையா?''

''எல்லாவற்றையும் அன்று பேசிக் கொள்ளலாமென்று சொல்லி விட்டாராம்!''

வேலுத்தம்பி ஆழ்ந்த பெருமூச்சுவிட்டான்! அவன் கண்கள் மூடிக் கொண்டன. அவன் ஏதோ நினைவில் மூழ்கினான்! அவன் முகத்தில் சிந்தனை தளிர்த்திருந்தது.

''ரங்கப்பா!'' என்றான் வேலுத்தம்பி திடீரென்று.

''என்ன, எஜமான்......''

''மிக முக்கியமான பணியை உன்னிடம் ஒப்படைக்க விரும்புகிறேன். ஆங்கிலேயர்கள் இந்த நாட்டிலிருந்து தொலைந்தால்தான் நம் தாய்த்திருநாடு முன்னேறும். அவர்களை ஒழித்துக்கட்டவே இளிமாலூர் ஜமீன்தாரிடம் சிறிது படையைக் கேட்டிருந்தேன். அவரும் தர ஒப்பினார். அதற்குள் எனக்கு இத்தகைய நிலை ஏற்பட்டு விட்டது'' என்று நிறுத்தினான் வேலுத்தம்பி. அவ்வளவு நீண்டநேரம் பேசியது அவனுடைய விலாவை மேலும், மேலும் பயங்கரமாக அசையச் செய்தது.

''எஜமான்! நீங்கள் ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள். மற்றதைப் பிறகு பேசிக் கொள்ளலாம்......''

''இன்னும் சிறிது நேரம் சென்றால் என்னால் பேசவே முடியாது! என்னுடைய உடைவாளை உன்னிடம் ஒப்படைக்கிறேன். நீ எப்படியாவது இளிமாலூர் ஜமீன்தாரிடம் அதை ஒப்படைத்துவிடு. அவர் சுத்த வீரர். அவர் நிச்சயம் வெள்ளைப் பறங்கியரை எதிர்த்துப் போரிடுவார்.''

ரங்கப்பனின் முகத்தில் வியப்பு குமிழியிட்டது! வேலுத்தம்பியின் வாளைக் கையால் தொடும் பாக்கியம் அவனுக்கா! அவன் உள்ளமே அதை நம்ப மறுத்தது. வேலுத்தம்பியே அதைச் சொல்லிய பிறகு நம்பாமல் இருக்க முடியுமா?

''அந்த வாள் சேர அரச பரம்பரைக்குரியது. என் தந்தை சேர வம்சாவளியினர். தற்செயலாகப் பூஜை அறையில் ருத்திரன் சிலைக்குக் கீழ் இந்த வாள் இருந்ததைக் கண்டார். அதுமுதல் தம் கண்ணைப்போல் இதைப் பாதுகாத்து வந்தார். அவர் இறந்த பின்பு வாள் என் கைக்கு வந்தது. பறங்கியர்கள் இந்த நாட்டைக் கொள்ளையடிக்க முயன்றபொழுது இந்த வாளை யெடுத்துத்தான் அவர்களை ஒழிப்பதென்று சபதம் எடுத்துக் கொண்டேன். ஆனால்......என் எண்ணம் நிறைவேறவில்லை!''

ரங்கப்பன் அவன் சொல்லுவதையே கேட்டுக் கொண்டிருந்தான். ஜக்கம்மாவின் முகத்தில் ஆச்சரியம் பரவி நின்றது!

''பறங்கியர் கவர்னர் வார்டு லிச்சனர் இந்த வாளின்மீது ஒரு கண் வைத்திருக்கிறான். எப்படியாவது அதை என்னிடமிருந்து பறித்துப் போக முயலுகிறான். அதனால்தான் உன்னை எச்சரிக்கிறேன்! வாளைப் பத்திரமாகக் இளிமாலூர் ஜமீன்தாரிடம் சேர்த்துவிடு. அதைத்தான் நான் உன்னிடம் அந்திமக் காலத்தில் வேண்டுகிறேன்.''

ரங்கப்பனின் உடல் புல்லரித்தது! அவன் கண்களில் கண்ணீர் இரண்டு கன்னத்தில் வழிந்தது. வேலுத்தம்பியின் அருகில் மண்டியிட்டு உட்கார்ந்தான்.

''எஜமான்! கட்டளையிட வேண்டிய என்னிடமா நீங்கள் வேண்டுவது? கட்டளையிடுங்கள்!......உங்கள் விருப்பப்படியே செய்து முடிக்கிறேன்'' என்றான் தழுதழுத்த குரலில்.

''ரங்கப்பா! உன்னைப் பற்றி எனக்கு நன்றாகத் தெரியும். எதையும் செய்து முடிக்கக் கூடிய ஆற்றல் உனக்கு உண்டு. இந்தா, வாள்! ஜக்கு, நீயும் அவனுக்குத் துணையாக இரு!'' என்றான் வேலுத் தம்பி.

வாள் கைமாறியது. பயபக்தியுடன் வாளை வாங்கிக் கண்களில் ஒற்றிக் கொண்டான் ரங்கப்பன். அதற்காகவே காத்திருந்தது போல வேலுத்தம்பியின் உயிரும் பிரிந்தது!

மலையப்பனின் உள்ளம் குமுறிப் புகைந்தது. நேற்றுவரை அவளைத் திருமணம் செய்து கொள்ளுகிறேன் என்றவள் இன்று



தலைவலியா?

பெரியவர்களுக்கு ஒரு வில்லை

**ஸாரிடான்**

சாப்பிட்டால் போதும்




* நிவாரணமளிக்கிறது
* விச்ராந்தியளிக்கிறது
* புத்துணர்ச்சியூட்டுகிறது

12 நயா பைசா

குழந்தைகளுக்கு
½–½ வில்லை போதும்

ரோச் டிஸ்டிரிப்யூட்டர்கள்:
வோல்டாஸ் லிமிடெட்



VT. 6290



**DOLORES HART**
Co-starring in Hal Wallis' production.
**"WILD IS THE WIND"**

# MAX FACTOR
HOLLYWOOD

## Color-fast LIPSTICK

*stays on*
*stays brilliant . . .*
*stays color-fast*

The only lipstick that actually softens the lips—YET STAYS ON LONGER.



Eight tantalizing new shades

Available at all Leading Cosmetic & General Stores

*Rs. 9.00, 5.75, refill 3.75.*

Sole Agents in India:
**ORIENT COSMETIC PRIVATE LIMITED**
MADRAS • BOMBAY • CALCUTTA

Aiyars LS 8

முடியாதென்றால் அவனுக்கு எப்படி இருக்கும்? இவ்வளவுக்கும் காரணம் அந்த ரங்கப்பன்தான்! அவன் மேலுள்ள ஆசையால் தான் ஜக்கம்மா அவனை மணக்க மறுத்திருக்க வேண்டும். பின் வேறு காரணம் என்னவாக இருக்க முடியும்?

ஜக்கம்மா மலையப்பனுக்கு முறைப் பெண். சிறு வயதிலிருந்தே இருவரும் சேர்ந்து வளர்க்கப்பட்டவர்கள். மலையப்பன் தன் உயிரையே அவள்மீது வைத்திருந்தான். வேலுத்தம்பியின் இரகசிய இயக்கத்தில் அவனை நம்பிக்கையானவன் என்று சொல்லிச் சேர்த்தவனும் அவன்தான்! முதலில் அவன்மீது அவநம்பிக்கை கொண்ட வேலுத்தம்பி நாளடைவில் அவனை முழுவதும் நம்பினான். வேலுத்தம்பியின் இரண்டு கண்களாக மலையப்பனும் ரங்கப்பனுமே விளங்கினார்கள்.

அவன் எழுந்து அருவிக் கரையை நோக்கி நடந்தான்! அவன் உள்ளத்தைப் போலவே நடையும் தளர்ந்திருந்தது. ஏதோ யோசித்த வண்ணம் அவன் நடந்தான். வேலுத்தம்பி இறந்ததிலிருந்தே ரங்கப்பனும், ஜக்கம்மாவும் அடிக்கடி சந்தித்துப் பேசுவதை அவன் அறியாதவனல்ல. அருவிக்கரையில் ஜக்கம்மா உட்கார்ந்திருந்தாள்.

''ஜக்கு!......''

அவள் திரும்பிப் பார்த்தாள்! மலையப்பன் சிரித்தவண்ணம் நின்றிருந்தான். அவன் கண்களில் மிளிர்ந்த ஏளனத்துக்கும் கீழ் ஏதோ ஒன்று புதைந்திருந்தது. க்ஷண நேரம் தோன்றி மறையும் ஆத்திரமல்ல அது! என்றென்றும் வளர்ந்து நிற்கும் குரோதம்தான் அது என்று தெரிந்தது!

''ரங்கப்பனுக்காகக் காத்திருக்கிறாயா?'' அவன் கேட்ட அந்தக் கேள்வியிலும் அதே ஏளனம் பளிச்சிட்டது.

''ஆமாம்!'' என்றாள் அவள் வெடுக்கென்று. அவன் கலகலவென்று சிரித்தான்.

''ஏன் கொள்ளிவாய்ப் பிசாசுமாதிரி சிரிக்கிறே?'' என்று கேட்டாள் ஆத்திரத்துடன்.

''பெண்கள் மனம் எவ்வளவு சீக்கிரத்தில் மாறி விடுகிறதென்பதை நினைக்கும்பொழுது சிரிக்காமல் நான் என்ன செய்வது?''

''என்னைப்பற்றி நீ சொல்வது எனக்கும் தெரிந்துதானிருக்கிறது. நீ நினைப்பதைப் போல நானொன்றும் மனம் மாறிவிடவில்லை.''

''ஜக்கு! '' அதற்குள் தூரத்தில் ரங்கப்பனின் குரல் கேட்டது!

''இதோ வந்துவிட்டேன்!'' என்று அவனை நோக்கி ஓடினாள். மலையப்பன் ஆத்திரத்தால் பற்களை நறநறவென்று கடித்துக் கொண்டான். அவன் கண்முன் ரேவும், வெக்ஸும் தோன்றினார்கள். அவன் எங்கோ அவசரம் அவசரமாக நடந்தான்.

''ரங்கப்பன் தனியாக வருவானா? அல்லது ஆட்களுடன் வருவானா?''

''தனியாகத்தான் வருவான்!'' என்றான் மலையப்பன். அவன் கண்கள் தோப்பின் மர நிழலிலேயே சுழன்று கொண்டிருந்தன. அசையும் ஒவ்வொரு பொருளையும் அவன் சந்தேகத்துடன் கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்தான்.

''அப்படியானால் நாம் மூவரே போதும்!'' என்றான் துப்பாக்கி பிடித்திருந்த வெக்ஸ்.



''நம்ப வீட்டு வானரங்களை வந்து பாருங்கள்! ஏதோ 'ஹனுமான்' சினிமா பார்த்து விட்டு வந்து 'ராம்' என்று கல்லின்மேல் எழுதிக் கிணற்றில் போட்டுண்டு இருக்கிறாங்க!''

''இன்னும் நாலைந்து பேர்கள் நமக்குத் துணையாக இருந்தால் நல்லதல்லவா?'' என்று கேட்டான் ரே. அவனுக்கு எப்பொழுதுமே ரங்கப்பனிடம் பயம் அதிகம்.

''வேண்டாம்! ஆட்கள் அதிகமானால் வீண் ஆரவாரம்தான் அதிகமாகும். ஆள் நடமாட்டம் அதிகமானால் ரங்கப்பன் நம் கையில் சிக்கவே மாட்டான். சரி, சரி!... அவன் வரும் நேரமாகி விட்டது.''

அந்த இடத்தில் மறுபடியும் பூர்ண அமைதி நிலவியது! குதிரையின் காலடிச் சத்தம் கேட்டது! மூவரும் மர நிழலில் நன்றாக ஒளிந்து கொண்டிருந்தார்கள். ஒவ்வொருவருடைய கையும் துப்பாக்கியை அழுத்திப் பிடித்தது. ரங்கப்பன்தான் குதிரையில் வந்து கொண்டிருந்தான். மலையப்பனின் கழுகுக் கண்கள் அதை ஒரு நொடியில் தெரிந்துகொண்டன.

''ஜாக்கிரதை!... கொஞ்சம் தவறினால் கூடத் தப்பிவிடுவான். பிறகு ரங்கப்பனைப் பிடிக்கவே முடியாது'' என்று மெதுவாகச் சொன்னான் மலையப்பன்.

குதிரை அவர்களை நெருங்கிக் கொண்டிருந்தது. ஒவ்வொருவரும் ரங்கப்பனைக் குறி பார்த்தார்கள். அவர்களை நோக்கி வந்து கொண்டிருந்த குதிரை சடக்கென்று திரும்பி வந்த வழியே ஓடியது. மர நிழலில் பதுங்கியிருந்த அவர்களை ரங்கப்பன் எப்படியோ பார்த்து விட்டான்.

''டுமீல்!'' வெக்ஸின் குறி தவறி விட்டது. குதிரை நிற்காமல் ஓடியது. மூவரும் துரத்திக் கொண்டு ஓடினார்கள்.

''டுமீல்!.. டுமீல்!...டுமீல்!'' ரேயின் துப்பாக்கி மும்முறை அதிர்ந்தது. அந்த முறை குறி தவறவில்லை.

''ஐயோ!'' என்ற அலறல். அதைத் தொடர்ந்து ரங்கப்பனின் முனகல் கேட்டது.

''ரங்கப்பா! நீ எப்படியாவது வைத்தியரிடம் போ. நான் எப்படியும் வாளை உரியவரிடம் சேர்த்து விட்டுத் திரும்புகிறேன்'' என்று அந்தச் சந்தடியையும் கிழித்துக் கொண்டு ஒரு கம்பீரமான குரல் கேட்டது. அடுத்த நிமிடம் கடற்கரையோரமாகக் கிழக்குநோக்கி ஒரு குதிரை ஓடிக் கொண்டிருப்பது நிலவொளியில் தெரிந்தது.

''வெக்ஸ்! நீ ரங்கப்பனைப் பார்த்துக் கொள். நாங்கள் எப்படியும் வாளுடன் திரும்புகிறோம். மலையப்பா... சீக்கிரம் கிளம்பு!'' என்றான் ரே.

கொசு: என்ன ஈயாரே! கோணத்துக்குப் போவதாகச் சொன்னவர் கும்பகோணத்துக்குக் கிளம்பி விட்டீரே!



ஈயார்: கோணத்தில் உணவில் விஷம் கலந்து இருக்காம். ஆனால் கும்பகோணம் தான் ஈக்களுக்குச் சிறந்த வாசஸ்தலமாக இருக்காம்! அதான் அங்கே போகிறேன்.

ரே ஆத்திரத்துடன் குதிரையின் விலாவை எட்டி உதைத்தான். குதிரை முன்னங்கால் களைத் தூக்கிக் கொண்டு கனைத்தது. ரேயும், மலையப்பனும் முன்னால் சென்ற குதிரையைப் பின்தொடர்ந்தார்கள்.

வெக்ஸ் துப்பாக்கியை இடையில் செருகிக் கொண்டு ரங்கப்பனிடம் வந்து குனிந்து பார்த்தான். அந்தச் சமயத்தை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்த ரங்கப்பன் கையில் தயாராக வைத்திருந்த குத்து வாளால் அவனை ஓங்கிக் குத்தினான். வெக்ஸ் பயங்கரமாகச் சத்தமிட்ட வண்ணம் தரையில் சாய்ந்தான். அவனிடமிருந்த துப்பாக்கியைப் பறித்துக் கொண்டு ரங்கப்பன் தட்டுத் தடுமாறிக் குதிரையின்மீது ஏறி உட்கார்ந்தான். குண்டு பாய்ந்த தோள்பட்டை துண்டித்து விழுவதுபோல் வலித்தது. ஒரு கையால் லகானைப் பிடித்தான். குதிரை ராஜாளித் தோப்பை நோக்கி ஓடியது.

துப்பாக்கிக் குண்டுக்கு எட்டாத தொலைவிலேயே முன்னால் சென்று கொண்டிருந்த குதிரை போய்க் கொண்டிருந்தது. ரே ஆத்திரத்தால் துடித்தான்! அவன் உள்ளம் நீக்கனலைப் போன்று எரிந்தது! வாரினாலேயே குதிரையைச் சுழற்றி அடித்தான். தன்னால் முடிந்தவரை குதிரையும் பாய்ந்து சென்றது. மலையப்பன் ஒன்றுமே வாய் திறக்கவில்லை! முன்னால் சென்று கொண்டிருந்தவனுடைய திறமையை அவன் வியந்து கொண்டிருந்தான். வேலுத்தம்பியின் ஆட்களுக்கே அத்தகைய பயிற்சி உண்டு. அவனுடைய வஞ்சம் தீர்ந்துவிட்டது. அவன் வரையில் போட்டியாக இருந்த ரங்கப்பன் தொலைந்தான்! இனி ஜக்கம்மா அவனுக்குத்தானே? அதுவே அவன் மனத்துக்குப் பூரண திருப்தியைக் கொடுத்தது. ஒப்புக்கு அவனும் ரேயுடன் தொடர்ந்து போய்க் கொண்டிருந்தான்.

''டுமீல்!...''

ரேயின் துப்பாக்கி அனலைக் கக்கியது! மலையப்பன் நிமிர்ந்து பார்த்தான். துப்பாக்கிக் குண்டு எட்டும் தூரத்திலேயே முன்னால் சென்று கொண்டிருந்த குதிரை போய்க் கொண்டிருந்தது. நிலவொளியில் அதன் கால்கள் நொண்டுவது அவனுக்குத் தெரிந்தது.

''டுமீல்!...''

குதிரை சற்று நெளிந்து கொடுத்தது. வயிற்றை உராய்ந்தபடி குண்டு பாய்ந்தோடியது. மர நிழலில் குதிரை ஒளியும் பொழுதெல்லாம் ஆத்திரத்தால் ரே பற்களைக் கடித்துக் கொண்டான்.

''மலையப்பா நீயும் சுடு!'' என்றான் ரே.

மலையப்பன் குறி பார்த்தான். அவன் கை ஏனோ நடுங்கியது! அதற்குள் ரே முந்திக் கொண்டான். ரேயின் துப்பாக்கிக் குண்டு முன்னால் சென்று கொண்டிருந்தவனின் முதுகைத் துளைத்துச் சென்றது.

''ஐயோ, மச்சான்!'' என்ற குரல் கேட்டு மலையப்பன் திடுக்கிட்டான். குதிரையிலிருந்து இறங்கி ஓடினான். ஜக்கம்மா இரத்த வெள்ளத்தில் புரண்டு கொண்டிருந்தாள்.

''ஜக்கு! நீயா?'' என்று அலறினான் மலையப்பன். அவன் அலறல் காற்றோடு கரைந்து எங்கோ மோதியது.

''நான்தான்!'' என்றாள் அவள் முகத்தைச் சுளித்த வண்ணம். அவன் தலையை அவன் தன் மடிமீது வைத்துக்கொள்ள முயன்றான்.

''நீயா ஆண் வேஷத்தில் வந்தது? இந்தப் பாவிக்கு அது தெரியாமல் போயிற்றே! அநியாயமாக உன்னைக் குண்டுக்குப் பலிகொடுத்து விட்டேனே!'' என்று கதறினான் அவன்.

''உன் வினை உன்னையே சுடுகிறது!'' என்றாள் அவள் முனகலுடன்.

''வாளை முதலில் என்னிடம் கொடு!'' என்று கை நீட்டினான் ரே. அவன் முகத்தில் கொடுமை நிறைந்திருந்தது.

அந்த வலியிலும் அவள் வாய்விட்டுச் சிரித்தாள்! ரேயின் முகம் கோபத்தால் சிவந்தது.

''வீணாக என் ஆத்திரத்தைக் கிளப்பாதே! இன்னும் சற்று நேரத்தில் போகும் உயிரை இப்பொழுதே குடித்து விடுவேன்'' என்றவாறு மலையப்பனை முறைத்துப் பார்த்தான். அவன் விரல்கள் துப்பாக்கிக் குதிரையின் மீது நிலைத்தன.

''வாளா? என்னிடமா? எந்த வாள்?'' என்றாள், அவள் ஆச்சரியமுறுபவள் போன்று.

''அப்படியானால் வேலுத்தம்பியின் வாள் உன்னிடம் இல்லையா?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டான் ரே.

''இல்லை! அது ரங்கப்பனிடம்தானிருந்தது. அவர் இந்நேரம் உரியவரிடம் சேர்த்திருப்பார். அவரிடமிருந்து உங்களைப் பிரிக்கவே அந்தச் சூழ்ச்சி செய்தேன்.''

''சே!'' என்று திமிர்ந்தான் ரே.

அதே சமயத்தில் துப்பாக்கி அதிர்ந்தது! ரே துள்ளித் தரையில் விழுந்தான். கையிலிருக்கும் துப்பாக்கி நழுவிக் குதிரையிலிருந்து கீழே விழுந்தான் ரங்கப்பன்.

''ஜக்கு!'' என்ற குரல் கேட்டு அவள் கனக்கும் தன் கண்ணிமைகளைத் திறந்து பார்த்தாள். அவள் முகத்தில் ஆச்சரியம் படர்ந்தது.

''வாளை ஜமீன்தாரிடம் சேர்த்து விட்டீர்களா?'' கடைசியாக அந்தக் கேள்வியைத்தான் ரங்கப்பனிடம் கேட்டாள்.

''உம்!'' என்ற வார்த்தை அவனுடைய வாயிலிருந்து வெளிவருவதற்கு முன்னமே அவளுடைய உயிர் பிரிந்தது. இருவர் முகத்திலும் கடமையை நிறைவேற்றி விட்ட திருப்தி நிலவியது. இருவரையும் அருகருகே கிடத்தி விட்டு 'ஹோ' வென்று அலறிக் கொண்டிருந்தான் மலையப்பன்.

எல்லோருக்கும் தெரியும்—

ஒவ்வொரு
**ப்ரூக் பாண்ட்**
பாக்கெட் டிலிருந்தும்
உங்களுக்கு அதிகப்படியான,
ருசியான தேயிலே
கிடைக்கிறது

...மேலும்
தோட்டத்திலிருந்து
கடைகளுக்கு துரிதமாக
அனுப்பப்படுவதாலேயே
**ப்ரூக் பாண்ட் தேயிலே**
புத்தம் புதியதாக
இருக்கிறது

...மேலும்
ஒவ்வொரு நாளும்
5 கோடி கோப்பை
களுக்கு அதிகமாகவே
**ப்ரூக் பாண்ட் தேயிலே**
அருந்தப்படுகிறது




**ஆகையால்தான் மற்றெந்தத்
தேயிலேயையும் விட
அதிகப்படியான
ஜனங்கள்**

# ப்ரூக் பாண்ட் தேயிலேயையே

**அருந்துகிறார்கள் !**



# தாயும் பிள்ளையும்

ஜயலக்ஷ்மி

சுவர்க் கடியாரத்தில் மணி பதினொன்று அடித்தது. சாப்பாட்டை முடித்துக் கொண்டு சாய்வு நாற்காலியில் வந்து உட்கார்ந்துகொண்டேன். ஞாயிற்றுக் கிழமையை வீணாக்கலாமா? ஒரு தூக்கம் போடலாமே என்று தோன்றியது. தூக்கத்தை வரவழைக்க ஏதாவது புத்தகம் இருக்கிறதா என்று பக்கத்திலிருந்த மேஜையின்மீது கையைப் போட்டுத் துழாவினேன். கையில் அகப்பட்டது நேற்று மாலை வந்த ஒரு கடிதம்தான். ஒரு முறை படித்ததுதான். மறுபடியும் படிக்கலாமா, வேண்டாமா என்று எண்ணினேன்.

உள்ளே குழந்தைகள் பண்ணுகிற விஷமம் அமர்க்களப்பட்டது. அதன்நடுவே என் மனைவி கமலத்தின் குரலும் கேட்டது. "ஏண்டா, வாசு! நாசமாப் போகிறவனே! ஏண்டா சதா அவளை அழவிட்டுக் கொண்டே யிருக்கிறாய்? விடுமுறை நாள் வந்தால் நீ படுத்துகிறபாடு பொறுக்க முடியவில்லையே! சோறு தான் கொட்டிக் கொண்டாயிற்றே! எங்கேயாவது தொலையேன்" என்று கத்தினாள் கமலம்.

"முடியாது, போ!" என்று பதிலுக்குக் கத்தினான் வாசு.

வாசு கொஞ்சம் முரடன். குழந்தையிலிருந்தே ரொம்பவும் விஷமம் செய்வான். சின்னவள் விஜயாவை அழவிட்டு வேடிக்கை பார்ப்பதில் அவனுக்கு ஒரு குஷி.

"டேய், வாசு!" என்று ஒரு சத்தம் போட்டேன் நான். பெட்டிப் பாம்பாக என் எதிரில் வந்து நின்றான் வாசு.

"நடேச மாமா வீட்டுக்குப் போய் ராஜுவுடன் விளையாடி விட்டு வாயேண்டா, கொஞ்ச நேரம்!" என்றேன் நயமாக.

"சரி அப்பா!" என்று கூறி வாசு பம்பரமும்கையுமாகவெளியேறினான். நான் மறுபடியும் என் கையிலிருந்த கடிதத்தின் மேல் பார்வையைச் செலுத்தினேன். என்னமோ தோன்றியது, இன்னொரு தடவை தான் கடிதத்தைப் படித்துப் பார்த்தால் என்னவென்று.

"இங்கே, வா, விஜயா. பக்கத்தில் வந்து படுத்துக்கோ. தட்டுகிறேன். சமர்த்தாகத் தூங்கு. வா!" என்று கமலம் கூறிக்கொண்டிருந்தது காதில் விழுந்தது. கண்கள் கடிதத்தில் சென்றன, என்னையும் மீறி.

"சிரஞ்சீவி ராமச்சந்திரனுக்கு, ஆசீர்வாதம்.

உனக்கு நான் இவ்வளவு காலமாக ஒரு கடிதம்கூட எழுதியதில்லை. இப்பொழுதுதான் எழுதுகிறேன்.

ஆறு வருஷங்களுக்கு மேல் ஆகிவிட்டன, உன்னையும் உனது மனைவி, குழந்தைகளையும் பார்த்து. என்னமோ வேலை கிடைத்தது என்று போனாய். போய் ஒரு கடிதம்கூட நீயும் போடவில்லை. இங்கேயிருந்தும் யாரும் உனக்குப் போடவில்லை.

இங்கே ஜயராமனுக்கு நீ போன பிறகு மூன்று குழந்தைகள் பிறந்து விட்டார்கள். பாவம், அவன் சம்சாரியாகி விட்டான். வருகிறவரும்படி அவன் குடும்பத்துக்கே போதவில்லை. நான் வேறு அவனுக்குப் பாரமாக இருக்கிறேன். வயதான காலத்தில் என்னாலும் அதிகமாகக் கஷ்டப்பட முடியவில்லை. என்னமோ, அப்பா! நீ இப்போது கொஞ்சம் நல்ல நிலைமையில் இருப்பதாகத் தெரிகிறது. நான் இனிமேல் அதிகநாள் உயிரோடு இருக்கமாட்டேன். மூத்தவனான உன்னிடமே இனிமேல் இருக்கலாம் என்று எனக்குத் தோன்றுகிறது. உனக்கும் இது நியாயமாகத் தோன்றினால், நீ வந்து என்னை அழைத்துக்கொண்டு போ. எனக்குத் தனியாக ரயிலில் வரத் தள்ளாது.

கடைசியாக ஒரு வார்த்தை. ஜயராமன் உடம்பு சரியில்லாமல் இரண்டு மாதங்கள் படுத்து எழுந்தான். போன மாதம் சம்பளம் இல்லாமல் லீவில் இருந்தான். அவனுக்கு இப்போது டாக்டர், மருந்து, வீட்டுச் செலவு

என்று ரொம்பக் கஷ்டம். உன்னிடம் இரு நூறு ரூபாய் இருக்குமா? அண்ணனும் தம்பியும் ஒருவருக் கொருவர் ஒத்தாசை செய்து கொண்டால்தானே உண்டு! உங்களுக்குத் தான் வேறு யார் இருக்கிறார்கள்?

ஆசீர்வாதம்
**உன் அம்மா பாக்கியம்**

கடிதமே எழுதாத அம்மா கடிதம் எழுதியிருக்கிறாள். அதுவும் தன்னை வந்து அழைத்துக்கொண்டு போகும்படி. போய் அழைத்து வந்துவிட வேண்டியதுதான் நியாயம். ஆனால் தாயும் பிள்ளையுமானாலும் வாயும் வயிறும் வேறுதானே? அப்படித்தானே அன்று அவள் என்னிடம் நடந்து கொண்டாள்? 'இல்லானை இல்லாளும் வேண்டாள். ஈன்றெடுத்த தாயும் வேண்டாள்.........' என்பதுதான் எவ்வளவு உண்மை? ஏனோ என் மனம் இப்படியெல்லாம் எண்ணிக் குழம்பியது.

பாசத்தையும் மிஞ்சிவிடும் வறுமை. அதன் மூலமாக முளைத்தெழும்பும் கொடுஞ் சொற்கள்! அப்பப்பா! அதற்குத் தான் எவ்வளவு சக்தி! சிந்தனைப் புறா சிறகடித்துப் பறந்தது.

* * *



அப்பொழுது என் தாயார் நான், என் தம்பி ஜயராமன் எல்லோரும் ஒரே குடும்பமாக இருந்தோம். எனக்கு மூத்தவள் பத்மாவும் இளையவன் வாசுவுமாக இரண்டு குழந்தைகள் இருந்தார்கள். ஜயராமனுக்குக் கலியாணம் நடந்து இரண்டு வருஷங்களே ஆகியிருந்தன.

எங்கள் இருவருக்குமே கம்பெனி உத்தியோகம்தான். இருந்தாலும் நாங்கள் அப்படியொன்றும் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கவில்லை. அப்படியே இருந்திருக்கலாம். ஆனால் அப்படி இருக்க எங்களை விதி விடவில்லை. அமைதியாக இருந்து வந்த எங்கள் குடும்பக் தடாகத்தைக் குழப்பிவிட நோய் வடிவில் விதி என்னைப் பிடித்தது.

என்னமோ சாதாரண ஜுரம் என்று எண்ணினேன். அது ஒரு டாக்டருக்குமே புரியாத மாய ஜுரமாக வந்து என்னை மூன்று மாதங்கள் படுக்கையில் தள்ளி விட்டது. டாக்டர் பீஸும் மருந்துமாகப் பணம் தண்ணீராகச் செலவழிந்தது. அதற்கு பாங்கியிலிருந்த சொற்பத் தொகை போதவில்லை. மனைவியின் உடம்பிலிருந்த நகைகளை யெல்லாம் விற்க வேண்டி வந்தது. கமலமும் தயங்காமல் கழற்றிக் கழற்றி விற்றாள். அவளுடைய நகைகளும் தீர்ந்தன. அதற்காகவே வந்தது போல் ஒரு மாதிரியாக என்னுடைய வியாதியும் தீர்ந்தது.

கம்பெனி உத்தியோகம்தானே? இரண்டு மாதங்கள் சம்பளத்துடன் லீவு கிடைத்தது. மூன்றும் மாதம் சம்பளம் இல்லாமல் லீவு கிடைத்தது. நான்காம் மாதம் உடம்பைத் தேற்றிக் கொள்வதற்காக லீவு கேட்டபோது வேலையே போய் விட்டது. 'ஓய்வும் வேண்டாம், ஒரு மண்ணும் வேண்டாம்' என்று வேலைக்குப் போய்விடத்தான் நான் எண்ணினேன். ஆனால் அதற்கு என் உடல் நிலையும் இடமளிக்க மறுத்தது. கமலமும் 'வேலை போனால் இன்னொரு வேலை தேடிக் கொள்ளலாம். நீங்களே போய் விட்டால் என் கதி?' என்று கண்ணீர் விட்டு அழுது என்னை வீட்டிலேயே மடக்கிப் போட்டு விட்டாள்.

ஒரு மாதம் இப்படியும் அப்படியுமாகத் தள்ளிய பிறகு என் உடம்பும் கொஞ்சம் தேறியது. வீட்டிலிருந்தபடியே வேறு வேலை தேட ஆரம்பித்தேன். வேலை கிடைக்கிற வழியாக இல்லை.

தம்பி ஜயராமன் ஒருவனுக்கு வந்து கொண்டிருந்த வருவாயில் நாங்கள் எல்லோரும் காலட்சேபம் செய்வதென்பது ரொம்பவும் சிரமமாகவே இருந்தது.

'இல்லாதவன் பொல்லாதவன்' என்பதற்கேற்ப ஜயராமனின் குணத்திலும் பேச்சிலும் கூட மாறுதல் ஏற்பட்டது. சாதாரணமாகப் பேசுவதைக் கூட வெகுவாகக் குறைத்துக் கொண்டான் அவன். வீட்டில் ஏச்சும் பேச்சும் அதிகமாயின.

"உன் பிள்ளைக்கு இன்னும் உட்கார்ந்து சாப்பிடுகிற ஆசை தீர்ந்தபாடில்லையா? கொடுத்து வைத்தவன்தான் ராமு" என்று ஜயராமன் அம்மாவிடம் அடிக்கடி சொல்வதும், அதற்கு அம்மா, "நான் என்னப்பா செய்யட்டும்? வேறு வேலை தேடிக் கொள்ள வேண்டும் என்கிற எண்ணம் அவனுக்கு அல்லவா ஏற்பட வேண்டும்......?" என்று ஒரே பல்லவியாகப் பதில் சொல்லி வருவதும் என் காதில் விழுந்து கொண்டுதானிருந்தன.

நான் வேண்டுமென்று வேறு வேலை தேடிக் கொள்ளாமல் இருப்பதாக அம்மா நினைத்ததுதான் எனக்கு அளவற்ற வேதனையைக் கொடுத்தது. நான் தினமும் இரண்டொரு இடங்களுக்காவது விண்ணப்பம் போடுகிறேன் என்கிற விஷயம் ஜயராமனுக்குத் தெரியாத விஷயமல்ல. அப்படியிருந்தும் அவன் பேசிய பேச்சு என் இதயத்தை வாள் கொண்டு அறுத்தது.

ஒருநாள் என் பெண் பத்மாவுக்குத் திடீரென்று ஜலதோஷமாக இருந்தது. அவள் தன் பாட்டியிடம், "பாட்டி! முன்னே ஒரு நாள் என்னை டாக்டர் வீட்டுக்குத் தூக்கிண்டு போனமாதிரி இப்பவும் தூக்கிண்டு போறியா?" என்று கேட்டாள்.

அதற்கு அம்மா, "வர வரச் சோறு கிடைப்பதேதான் மருந்தாக இருக்கிறதே! மருந்துக்கு எங்கே போக...?" என்றாள். இதைச் செவியுற்ற என் மனம் வெகுவாக வருந்தியது. குழந்தையிடம் பேசக் கூடிய பேச்சா இது?

இத்துடன் நிற்கவில்லை அம்மா. கமலத்திடம், "ஏண்டி! நீயும் அவனுடன் பேசிப் பொழுதைப் போக்குகிறாயே! ஜயராமனுக்குக்

சம்பளம் ஐந்நூறு? ஆயிரமா? குழந்தைகளை அழைத்துக் கொண்டு போய்க் கொஞ்ச நாளைக்குப் பிறந்தகத்திலாவது இருந்து விட்டு வருகிறதுதானே?'' என்றும் கூறிவிட்டாள்.

கமலத்துக்குத் தாயார் கிடையாது. இளைய தாயார் கமலத்தைக் கொஞ்ச நாட்களுக்குக் கூட வைத்து ஆதரிக்கக் கூடியவளல்ல என்பது அம்மாவுக்குத் தெரியாத விஷயமல்ல. அப்படி இருந்தும் அம்மா ஏன் இப்படிப் பேச வேண்டும்?

எனக்கு ரோசம் தாங்கவில்லை. என்ன செய்வது? வேலை கிடைக்கிற வழியாக இல்லையே. வர வர விண்ணப்பம் எழுதிப் போடக்கூடத் தபால் செலவுக்கு ஜயராமனின் கையை எதிர்பார்க்க வேண்டி வந்தது. நான் சாகாமல் செத்துக் கொண்டிருந்தேன்.

இந்த நிலையில் கமலம் மூன்றாவதாகக் கருத்தரித்தாள். இதை நானோ கமலமோ விரும்பவில்லை. ஆனால் விதியின் விருப்பத்துக்கு நாங்கள் என்ன செய்ய முடியும்?

''கணவன் ஆயிரம் ஆயிரமாகச் சம்பாதிக்கிறான். இரண்டு குழந்தைகள் எப்படிப் போதும்? மூன்றாவதும் வேண்டியதுதான். வேலை பார்க்கத் துப்பில்லாதவனுக்குப் பெண்டாட்டி வேறு, பிள்ளை வேறு. வெட்கமாகத் தானில்லையே...'' என்று அம்மா எனக்கும் கமலத்துக்கும் கேட்கும்படியாக ஒருநாள் கூறி விட்டாள்.

அதற்கு மறுநாள்.

கமலம் என்னிடம் வந்தாள். ஐந்து பத்து ரூபாய் நோட்டுக்களைக் கொடுத்து விட்டு, ''உங்கள் அம்மாவிடம் உங்களுக்குச் சென்னையில் வேலை கிடைத்திருப்பதாகச் சொல்லி விட்டு உடனே கிளம்புங்கள்'' என்று கூறினாள்.

''ஏது கமலம் பணம்?'' என்று கேட்டேன் நான்.

''அதைப் பற்றி உங்களுக்கு என்ன? நான் சொன்னபடி செய்யுங்கள்'' என்றாள் அவள்.

எனக்குத் தெரிந்து விட்டது, அவள் கழுத்திலிருந்த அந்தக் கடைசி நகையும் கைநழுவிப் போய் விட்டது என்று. வேறு வழியின்றிப் பேசாமல் அவள் சொன்னபடியே செய்தேன். குழந்தைகளுடன் நானும் கமலமும் சென்னைக்குக் கிளம்பி விட்டோம்.

''அப்பாடி! இப்பத்தான் புத்தி வந்ததாக்கும்!'' என்று வண்டியேறும் போதுகூட அம்மா பேசியது என் நெஞ்சைக் குத்தியது.

சென்னைக்கு வந்து கமலத்தின் சிநேகிதி ஒருத்தியின் வீட்டில் தங்கினோம். நான் வேலைக்காக வேட்டையைத் துவங்குவதற்குள்ளாகவே கமலம் பாட்டு டியூஷன் ஐந்தாறு ஏற்படுத்திக் கொண்டாள். தன்னுடைய அப்போதைய நிலைமையையே அடிப்படையாக வைத்து ஒரு சிறுகதையை எழுதிய கமலம் அதை ஒரு வாரப் பத்திரிகைக்கு அனுப்பி வைத்தாள். காலம் நல்லதுபோலும்! நாங்கள் கொஞ்சமும் எதிர்பாராத வகையில் அந்தப் பத்திரிகை கமலத்தின் கதையைப் பிரசுரித்ததுடன் முப்பது ரூபாய் சன்மானமும் அனுப்பிவைத்தது. பதினைந்து ரூபாய்க்கு ஒரு அறையை வாடகைக்கு அமர்த்திக் கொண்டோம். புதுக் குடும்பம் ஆரம்பமாயிற்று. முதல் மூன்று மாதங்கள் கமலத்தின் வருவாயினால் தான் குடும்பம் நடந்தது. நான்காம் மாதம் நூற்றிருபது ரூபாய் சம்பளத்தில் எனக்கும் ஒரு வேலை கிடைத்தது. அதில் அமர்ந்தபடியே வேறு ஒரு நல்ல வேலையைத் தேடிக் கொண்டிருந்தேன் நான்.

இதற்கிடையில் கமலம் ஒரு ஆண் குழந்தையைப் பிரசவித்தாள் தர்ம ஆஸ்பத்திரியொன்றில். மணி பிறந்த வேளை எங்களுக்கு அதிர்ஷ்டகாலம் ஆரம்பமாயிற்று. எனக்கு முந்நூறு ரூபாய் சம்பளத்தில் வேறு ஒரு நல்ல வேலை கிடைத்தது. வருவாய்க்குத் தக்கபடி எங்களுடைய சௌகர்யங்களையும் பெருக்கிக் கொண்டோம். ஐம்பது ரூபாய் வாடகைக்கு வேறு வீட்டில் குடிபுகுந்தோம். குழந்தைகள் பள்ளியில் சேர்ந்தார்கள். இதெல்லாம் பழைய கதைகள்.

புதிதாக நடந்ததுதான் அம்மாவிடமிருந்து நேற்று வந்த கடிதம்.

அம்மாவை அழைத்துக் கொண்டு வந்து என்னுடன் வைத்துக்கொள்ள வேண்டுமென்கிற ஆசை எனக்கும் இருக்கத்தான் செய்தது. இருந்தாலும் அவள் பேசிய பேச்சுக்களையெல்லாம் எண்ணிப் பார்க்கும்போது அவள்மேல் ஆத்திரம் ஏற்படத்தானே செய்கிறது? அப்பொழுது அவளுக்கு என்னைவிட ஜயராமன் தானே உயர்வாகப் பட்டான்? என்றைக்குமே நான் வேலை பார்க்கமாட்டேன் என்பது போலல்லவா அவள் நினைத்தாள் முடியாது. அம்மாவை நான் இங்கே அழைத்துக் கொண்டுவர முடியாது. அங்கேயே தரித்திரப்பட்டுக்கொண்டு இருக்கட்டும் என்று தீர்மானித்தேன் நான்.

''மணி இரண்டாகிறது. டிபன் சாப்பிட வரக்காணோமே இந்தப் பிள்ளை வாக! வெய்யிலில் எங்கே அலைகிறதோ, தெரியவில்லையே...'' என்று சொல்லிக் கொண்டே கமலம் என் அருகில் வந்து நின்றாள்.

''கொஞ்ச நேரத்துக்கு முந்தி அவனை எங்கேயாவது போய்த் தொலை என்று சொன்னாய். இப்போது பிரமாதமாக உருகுகிறாயே?'' என்றேன் கேலியாக.

''என்னமோ அப்போ இருந்த சிரமம் சொன்னேன். வெய்யிலில் குழந்தையை எங்கே அனுப்பி யிருக்கிறீர்கள்?''

''நடேசன் வீட்டுக்குப் போய் விளையாடேண்டா என்று சொல்லி அனுப்பினேன்.''

''ரொம்ப நன்றாக இருக்கிறது, போங்கள். நடேசன் தம்பிக்குப் பெரியம்மை அல்லவா கண்டிருக்கிறது. அங்கே குழந்தையை அனுப்புவார்களோ!'' என்று பதறினாள் கமலம், பெற்றவளுக்குரிய துடிப்புடன்.

இதற்குள், ''அம்மா! இன்று என்ன டிபன்?'' என்று கேட்டுக்கொண்டே வந்து விட்டான் வாக.

''உள்ளே பஜ்ஜி வைத்திருக்கிறேன். போய்ச் சாப்பிடு'' என்று மகனுக்கு உத்தரவிட்ட கமலம், என்னைப் பார்த்து ''இன்றிரவு ரயிலுக்குக் கிளம்புகிறீர்களா?'' என்று கேட்டாள்.

''எங்கே?'' என்றேன் நான் குழப்பத்துடன்.

''எங்கேயா? உங்கம்மாவை அழைத்துக் கொண்டுவரத்தான்'' என்று கூறினாள் அவள்.

''நீதான் பேசுகிறாயா?'' என்று கேட்டேன் அவளை ஆச்சர்யத்துடன் பார்த்தவாறு.

# நான்கு மருந்துகள் சேர்ந்துள்ள

# 'அனஸின்'

## தலைவலி, ஜலதோஷம், ஜுரம் மற்றும் தசைவலிகளுக்கு

# *சிறந்தது*

ஞாபகத்தில் வையுங்கள்! ஒரே மருந்து கலந்துள்ள எந்தவலி நிவாரண மருந்தும், டாக்டரின் குறிப்பிற்கு ஒப்பான, விஞ்ஞான முறையில் தயாரித்துள்ள நான்கு மருந்துகளின் கலவையான 'அனஸினைப்' போல் துரிதமாயும்.. அபாயமின்றியும் நிச்சயமாயும் குணமளிக்க இயலாது. லட்சோபலட்சம் ஜனங்கள் 'அனஸின்' தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி மற்றும் தசைவலிகளிலிருந்து துரிதமாயும் பூரண நிவாரணமளிப்பதிலும் சிறந்தது என்பதை அறிவார்கள். எப்பொழுதும் வீட்டில் 'அனஸின்' வைத்திருங்கள்.






GEOFFREY MANNERS & CO. PRIVATE LTD. REGISTERED USER.

K. 68 (R) TAM.

# எக்லா

## தென் இந்தியா விரும்பும் டால்க்!

*தெம்பூட்ட, மணமளிக்க தனிப்பட்ட தயாரிப்பு*



இந்த பரத நாட்டியக்காரியைப் போல், நீங்களும் தென்னாட்டின் அதி உஷ்ண நிலையிலும்கூட குளு மையும் இதமும் பெறலாம்... மனோரம்மிய மணம் பெற்ற எக்லா டால்க் உபயோகித்தால். குளுமை யான நுண்ணிய சுகந்தத்திற்கு இந்த ஒப்புயர்வற்ற டால்க்கை அடிக்கடி தாராளமாக உபயோகியுங்கள்

மெல்லிய எக்லா ஒரு லட்சிய முகப்பவுட ரும் கூட




காால்கேட்
# எக்லா
டால்க் பவுடர்

EC 12A

---

# வைடோமால்ட்

திரண்ட விடமின் சத்துக்களடங்கியது




விடமின்-ஏ

விடமின்-பி-1

விடமின்-ஸி

விடமின்-டி

நல்ல ருசியுள்ள, புஷ்டிதரக்கூடிய மால்ட் எக்ஸ்ட்ராக்ட் அடிப்படையில் மேற்கண்ட அத்யாவசியமான விடமின் சத்துக்கள் அடங்கியது. போஷாக்குக் குறைவானவர்கள், நோயினின்றும் தேறுபவர்கள், கர்ப்பிணிகள் மற்றும் பாலூட்டும் தாய்மார்களுக்கும் மிக உகந்தது என சிபார்சு செய்யப் படுகிறது.

*தயாரிப்பாளர்:*

**தி மைசூர் இண்டஸ்ட்ரியல் & டெஸ்டிங் லாபரேடரி லிட்.**

மல்லேஸ்வரம், பெங்களூர் - 3.

விற்பனை டிப்போக்கள்: 35/37, தம்புச் செட்டித் தெரு, சென்னை-1.

71/4, ஆர்க்காட் ஸ்ரீனிவாஸாசார் தெரு, பெங்களூர்-2.

விற்பனை ஏஜெண்டுகள்: மெஸர்ஸ். கர்னாடக் & டெக்கான் ஏஜன்ஸீஸ், ஹூப்ளி.

மெஸர்ஸ். டெக்கான் ட்ரக் ஏஜன்ஸி, ஹைதராபாத் (டெக்கான்)

மெஸர்ஸ். கனரா மெடிக்கல் ஏஜன்ஸீஸ், அஹம்மதாபாத்.

MIT 2 4 TM



''பாங்கிலிருந்து உங்கள் தம்பிக்கு இருநூறு ரூபாய் எடுத்து வைத்திருக்கிறேன்'' என்றாள் அவள் வெகு சகஜமான குரலில்.

''அம்மா பேசிய பேச்சுக்களை யெல்லாம் நீ மறந்துவிட்டாய். ஆனால் நான் மறக்கவில்லை'' என்று ஆத்திரத்துடன் கத்தினேன்.

''நன்றாக இருக்கிறது, நீங்கள் பேசுகிற பேச்சு. என்னமோ அப்போது இருந்த சமய சந்தர்ப்பம் அப்படி. நான் கூடத்தான் காலையில் வாசுவை வாயில் வந்தபடி திட்டினேன். இப்போது கொஞ்ச நேரம் அவனைக் காணவில்லை என்றால் மனம் கேட்கிறதா? இதை யெல்லாம் மனத்தில் வைத்துக் கொள்ளலாமா? அடிக்கிற கை அணைக்கவும்தான் செய்யும். எலியைக் கவ்வுகிற வாயால் தானே பூனை தன் குட்டியையும் தூக்கிச் செல்லுகிறது. ஆயிரம் இருந்தாலும் பெற்றவள் தெய்வத்துக்குச் சமானம். அவர் எழுதாமலேயே செய்திருக்க வேண்டிய காரியம் இது. எழுதின பிறகும் பேசாமல் இருப்பார்களா? நீங்கள் புறப்பட ஏற்பாடு செய்யுங்கள். நான் சீக்கிரம் சமையலை முடித்து விடுகிறேன். சாப்பிட்டு விட்டே போகலாம்'' என்றாள் கமலம்.




நான் வாயடைத்து உட்கார்ந்திருந்தேன். எனக்காக இல்லாவிட்டாலும் கமலத்துக்காகவாவது அம்மாவை அழைத்துக் கொண்டு வந்துதாகுக வேண்டும். வேறு வழியில்லை.

கமலத்தின் கட்டளைப்படி அன்றிரவே பணத்துடன் புறப்பட்டு விட்டேன். அம்மா இளைத்துத் துரும்பாகத்தான் இருந்தாள். தம்பி ஜயராமனும் அப்படியே. உடல் நலமில்லாமல் இருந்தவனல்லவா? நான் பணத்துடன் போயிருக்கும் விஷயம் அவனுக்கு முன்னதாகவே தெரிந்து விட்டதோ என்னமோ, அவன் என்னிடம் வெகு அன்பாக நடந்து கொண்டான். நான் மட்டும் பழைய வைகளை மறக்கவில்லை. காரியமே கண்ணாக, பணத்தை அவனிடம் கொடுத்து விட்டு உடனே அன்றிரவே அம்மாவை அழைத்துக் கொண்டு கிளம்பி விட்டேன்.

ரயிலில் வந்து கொண்டிருக்கையில் அம்மா அடிக்கடி கண்ணைக் கசக்கிக் கொண்டேயிருந்தாள். எனக்கு என்னமோ அது வேதனையாக இருந்தது. ''ஏம்மா! ஆசை மகனை விட்டுப் பிரிந்து வருவது சிரமமாக இருக்கிறதா? அப்படியானால் அங்கேயே இருந்து விடுவது தானே?'' என்று சிறிது குத்தலாகக் கேட்டேன். நான் என்ன செய்யட்டும்? உள்ளத்தின் எதிரொலி உதட்டின் மூலம் வெளிவரத்தானே செய்யும்?

''இன்னும் நீ என் மீது கோபமாகத்தான் இருக்கிறாயா, ராமு?'' என்று ஏக்கம் பொங்கப் பரிதாபமாக வினவினாள் என்னைப் பெற்றவள்.

நான் அதற்குப் பதில் எதுவும் சொல்லாமல், ''ம்...'' என்று வெறுப்புடன் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டேன்.

''நான் உன் மீது குற்றம் சொல்ல மாட்டேன். உனக்கும் உன் மனைவிக்கும் என் மீது வருத்தம் இருப்பது சகஜம் தானே?'' என்றாள் அவள்.

''அம்மா, நீ கூட அப்படி நினைக்கிறாயா?'' என்று ஆச்சர்யத்துடன் கேட்டேன் நான்.

''உன்னிடம் ஒரு பெரிய ரகசியத்தைச் சொல்லப் போகிறேன், ராமு! இப்போது நம் குடும்பத்தில் நீ ஒருவன் தான் அதை இதுவரையில் அறியாதவன்...'' என்று கூறி ஒருமாதிரியாகப் பார்த்தாள்.

''ரகசியமா?'' திகைத்தேன் நான்.

''ஆமாம். எங்கள் கலியாணம் முடிந்த மறு வாரமே உன் தகப்பனார் என்னைத் தம்முடன் அழைத்துக் கொண்டு பம்பாய்க்குக் கிளம்பிவிட்டார். நான் எவ்வளவோ மனக் கோட்டைகள் கட்டிக்கொண்டு புதுக் குடித்தனம் ஆரம்பித்தேன். அப்பொழுதுதான் எனக்கு ஒரு உண்மை தெரியவந்தது. உன் தகப்பனாருக்கு எனக்கு முன்னமேயே இன்னொரு மனைவி யிருக்கிறாள் என்கிற சமாசாரம் தான் அது. அழகில் சிறந்த அவள் பெயர் பத்மாவாம். பெற்றோர்களின் தொந்தரவுக்காகத்தான் அவர் என்னை மணந்து கொண்டாராம். வேற்று ஜாதிப் பெண்ணான பத்மாவை அவர் ரிஜிஸ்தர் விவாகம் செய்து கொண்டிருந்தார், தம் பெற்றோர்களுக்குக் கூடத் தெரியாமல். இதில் ஒரு சௌகர்யம் என்னவென்றால் உன் தந்தை என்னையும் பத்மாவையும் தனித்தனி வீட்டிலேயே வைத்திருந்தார். என்னிடம் அவர் கடமைக்காக வாழ்ந்தார். அவளிடம் காதலுக்காக வாழ்ந்தார். கடமையோ, காதலோ! மிருகங்கள் கூடத்தான் தாய்மைப் பேறு அடைந்து இனவிருத்தி செய்கின்றன. நானும் உன்னைப் பெற்றுத் தாய் என்கிற ஸ்தானம் அடைந்தேன். ஒருநாள் அவள் பெற்ற பாலகனை எடுத்துக் கொண்டு என்னிடம் வந்தார் உன் தந்தை. 'பாக்கியம்! இது இனிமேல் உன் குழந்தை. யார் கேட்டாலும் அப்படித்தான் சொல்லிக் கொள்ள வேண்டும். இதற்காகவே தான் என்னைச் சென்னைக்கு மாற்றிக் கொண்டு விட்டேன். பத்மாவை நான் என் உயிரிலும் மேலாக

நேசித்தேன். அவள் பெற்ற செல்வமான இந்தக் குழந்தையை ராமுவை விட அதிகமாக அன்பு காட்டி வளர்க்க வேண்டும். உன் மனத்தில் எங்கேயாவது ஒரு மூலையில் துளிக் கல்மிஷம் தோன்றியதாக எனக்குப் பட்டு விட்டால் கூட நீ என்னை அந்தக் கணமே மறந்துவிட வேண்டியதுதான். என்ன சொல்லுகிறாய்? உனக்குச் சம்மதமா?'' என்று கொஞ்சம் கூட இதமில்லாமல் நாடக பாணியில் கேட்டார்.

அப்போது என் உள்ளம் பட்டபாடு சொல்லி முடியாது. கண்களில் கண்ணீர் மல்க அவரை ஏறிட்டு நோக்கினேன். அவர் மட்டும் அன்பான குரலில், ''இந்தக் குழந்தையை வளர்க்கும் பொறுப்பை நீ ஏற்றுக் கொள்வாயா?'' என்று ஒரு வார்த்தை கேட்டிருந்தால் நான் எல்லையற்ற மகிழ்வுடன் அக் குழந்தையைத் தழுவிக் கொண்டிருப்பேன். ஆனால்......அவர் என்னை ஒரு சர்க்கஸ் புலியாகக் கருதி மிரட்டியபோது என் உள்ளம் துடியாய்த் துடித்தது.

''என்ன யோசிக்கிறாய்?'' என்று பொறுமையின்றிச் சீறினார் உன் பிதா.

''உங்களுக்காக நான் எதையும் செய்யத் தயங்க மாட்டேன். எனக்கு ராமு வேறு, இந்தக் குழந்தை வேறு அல்ல'' என்று கூறினேன் உணர்ச்சி மிக்கவளாய். அதற்குமேல் என்னால் அச்சமயம் அதிகம் பேச முடியவில்லை.

''ராமு! பிறகு நான் அந்தக் குழந்தைக்கு ஜயராமன் என்று பெயரிட்டு, உன்னை விட எல்லா விதத்திலும் உயர்வாகவே அவனை வளர்த்தேன். உன் அப்பா என்னை எப்பொழுதும் சந்தேகக் கண்களுடனேயே பார்த்து வந்ததால் நான் நெருப்புமேல் நிற்பது போலவே வெகு ஜாக்கிரதையாக இருந்து வந்தேன். எந்த ஒரு காரியத்தையும் ஜயராமனுக்குத்தான் முதலில் செய்வேன். உன்மீது கரைகாணாப் பாசம் பொங்கி வழியும் என் தாயுள்ளத்தில். அதை வெகுவாக உள்ளடக்கிக் கொண்டு ஜயராமனைத் தலையில் வைத்துக் கொண்டு தாங்கினேன். நான் அவனைத்தான் வளர்த்தேன். நீ தானாகவே வளர்ந்தாய்.

இருவரும் பெரியவர்களானீர்கள். படிப்பும் முடிந்தது. உத்தியோகத்திலும் அமர்ந்தீர்கள். உன் அப்பா நோயில் விழுந்தார். அவர் நம்மை விட்டுப் பிரிந்து விடுவார் என்பதை நான் உணர்ந்தேன். அவரும் அறிந்து கொண்டார். அந்த நிமிஷத்தில்கூட அவருக்கு என்மீதுள்ள சந்தேகம் நீங்கவில்லை போலும். தமது கடைசி நேரத்தில் என்னை அழைத்து, ''பாக்கியம்! ஏதோ நானிருக்கிறவரையில் ஜயராமனை வேற்றுமை பாராட்டாமல் வளர்த்து விட்டாய். நான் போன பிறகு நீ அவனிடம் தாறுமாறாக நடந்து கொள்ளும் பட்சத்தில் அவனுடைய தாய் பத்மாவின் ஆவி உன்னைச் சும்மா விடாது. ஞாபகமிருக்கட்டும். அவனுடைய இடத்தைப் பறித்துக் கொண்டவள் நீ!'' என்றார்.

இந்த விஷயத்தை அவர் என்னிடம் பேசிக் கொண்டிருந்த சமயம் ஜயராமன் எங்களிடம் வந்து விடவே, விஷயம், அவனுக்குத் தெரிந்து போய்விட்டது. அவன் என்னை ஒரு மாதிரியாகப் பார்த்தான். அந்தப் பார்வைக்கு உன் தகப்பனாரின் பார்வையே எவ்வளவோ மேலாகப்பட்டது எனக்கு.

உன் அப்பாவின் மறைவுக்குப் பிறகு உன் தம்பி ஜயராமன் என்னை ஒவ்வொரு காரியத்திலும், செய்கையிலும் எடை போட்டுக் கொண்டே வந்தான். நானும் சளைக்காமல் அவனுக்கு ஈடு கொடுத்து வந்தேன். அதன் விளைவாகத்தான் நீ வேலையின்றி இருந்த அந்தச் சமயத்தில் நான் அப்படிப் பாசமற்றவளைப்போல் உன்னிடமும் உன் மனைவியிடமும் பேசியும் நடந்தும் கொண்டேன்.

உன் தகப்பனாரின் ஆத்ம சபதத்துக்கு என் ஒரே ஜீவநாடியான நீ ஆளாகிவிடக் கூடாதே என்ற பயம்தான் அதற்குக் காரணம்.

உள்ளத்து உணர்ச்சிகளை உறை போட்டு மூடிக்கொண்டு ஜயராமனுக்கும் அவன் குடும்பத்துக்கும் மாடாக உழைத்தேன். மண்வெட்டியாகத் தேய்ந்தும் போனேன். அப்படியிருந்தும் அவன் என் உள்ளத்தின் தாய்மையை உணர்ந்தானில்லை.

உன் அப்பாவுக்குப் பிறந்த பிள்ளை தான் என்பதை ஒவ்வொரு சமயமும் பறைசாற்றி என் உள்ளத்தை வதைத்தெடுத்தான் அவன். நீ இருந்தபோது எதுவும் மறைமுகமாக இருந்தது. நீ போன பிறகு ஏச்சும் பேச்சும் நேரிடையாகவே என்னைத் தாக்கின.

மனத்தின் வெறுப்பும், உடலின் தளர்வும் என்னைப் பொறுமையை இழக்கச் செய்து விட்டன. பெற்ற பாசம் குமுறிக் குமுறி எழுந்தது. அதன் பிறகுதான் உனக்குக் கடிதம் எழுதினேன். கடைசிக்காலத்திலாவது உன் மீது என் உள்ளத்து ஆசாபாசங்களையெல்லாம் தீர்த்துக் கொள்ள வேண்டும் என்று என் பெற்ற மனம் தவியாய்த் தவித்தது. உன் மடியில் என் உயிரை விட வேண்டும் என்ற ஆசை வேறு எனக்கு அடித்துக் கொண்டது. எல்லாமாகச் சேர்ந்து நான் உன்னுடன் என்னை இப்படி வரத் தூண்டியது. ராமு! இப்போது சொல். இன்னமும் உனக்கு என்மீது கோபம் தானா?'' என்று பொங்கிவரும் அழுகையின் நடுவே கேட்டாள் என் அன்னை.

நான் பாய்ந்து சென்று அவளுடைய இரண்டு கைகளையும் பற்றி என் கண்களில் ஒற்றிக் கொண்டேன். ''அம்மா! நீ ஒரு பெண் தெய்வம். நேசமில்லாத • கணவனுடன் வாழ்க்கை முழுவதும் போராடியிருக்கிறாய். நன்றிகெட்ட மகனுடைய அன்பைப் பெறுவதற்காகப் பெற்ற பிள்ளையிடமும் வெறுப்புக் காட்டி வந்திருக்கிறாய். ஆனால் நீ இதுவரை கண்டதெல்லாம் தோல்விதான். இதற்குக் காரணம் பெண் உள்ளத்தை மரக்கட்டையாக நினைக்கும் ஆண் இனத்தின் சுயநலம்தான். அதன் விளைவாகத்தான் உன்மீது ஆத்திரம் கொண்டிருந்தேன். கமலத்துக்கு உள்ள உதார குணம் எனக்கு இல்லாமல் போய் விட்டது. என்னை மன்னித்து விடு அம்மா!'' என்றேன்.

என் அன்னை அன்பு ததும்ப என்னைப் பார்த்தாள். பிறகு, '''பெற்ற மனம் பித்து. பிள்ளை மனம் கல்' என்று சொல்லுகிறார்கள். ஆனால் நான் அதை நம்ப மாட்டேன். பெற்ற மனத்துக்குப் பிள்ளை மனம் எந்த விதத்திலும் குறைந்ததில்லை!'' என்று மனம் நிறைந்த மகிழ்வுடன் கூறினாள். அது ஒன்று போதாதா என் மனச்சாந்திக்கு?

# படித்துப் பாருங்கள்

## சித்திர பாரதி

பாரதியின் கவிதைகளை அறிந்த அளவுக்கு யாருக்குமே அவரைப் பற்றித் தெரியாது என்று கூறுவதில் தவறில்லை.

கவிஞரை நன்கு அறிந்த வ. ரா. அவர்கள் எழுதிய ''மகா கவி பாரதியார்'' என்ற நூலும், கவிஞரின் மனைவியார் எழுதிய நூலும்தான் அவரது வாழ்க்கை வரலாற்றுக்கும் ஆதாரமாய் அமைந்துள்ளன.

''சித்திரபாரதி'' என்னும் இந்நூல் கவிஞரின் வாழ்க்கையைப் படங்களுடன் கூறுகிறது. அவரது வாழ்க்கையில் நடந்த முக்கிய நிகழ்ச்சிகளுக்கு ஒரு 'டாகுமெண்டரி' படக் காட்சி என்று இந் நூலைக் கூறலாம்.

நம் நாட்டில், எந்தக் கவிஞனைப் பற்றிய வாழ்க்கைக்கு குறிப்பும் சரியாகத் தொகுக்கப் பட்டதில்லை. கம்பரைப் பற்றி, வள்ளுவரைப் பற்றி ஆதாரபூர்வமான தகவல்கள் சரிவரக் கிடைக்காமற் போனது துர்ப்பாக்கியந்தான்.

புதுயுகக் கவிஞரான பாரதி, இலக்கிய உலகத்தில், ஒரு புது சகாப்தத்தையே ஏற்படுத்தி விட்டார். சோம்பிக் கிடந்த மக்களைத் தட்டி எழுப்பிச் சோர்வைப் போக்கினர். பாரதத்தின் மற்றப் பிரதேசங்களை விடத் தமிழகம் விடுதலை ஆர்வத்தில் சிறிதும் பின்னடைந்து விடவில்லை என்பதைக் காட்ட, தமது கவிதைச் சங்கினால் முழக்கம் செய்து மக்களை முன்னணிக்கு அழைக்கின்றார் ; தாய் மொழியின் பெருமையை நினைத்துப் பெருமிதங் கொள்ளச் செய்தார். பக்திப் பாடல்கள் பாடினர் ; இன்பக் கவிதைகளை இயற்றினர் ; வேதாந்தப் பாட்டுக்கள் புனைந்தார் ; தாழ்வுற்று, வறுமை மிஞ்சி, விடுதலை தவறிக் கெட்டுப் பாழ்பட்டு நின்ற பாரதநாட்டின் வீர சுதந்திரத்துக்காகப் பலப்பல கவிதைகள் செய்து மக்கள் உள்ளங்களில் புரட்சியை உண்டுபண்ணினர். வரப் போகும் சுதந்திரத்தைத் தீர்க்க தரிசனத்தினால் அறிந்து, அது வந்து விட்டதாகவே ஆனந்தப் பள்ளு பாடினர்.

அத்தகைய மகாகவியின் நினைவை அவரது கவிதைகள் மட்டும் கூறினால் போதாது, சரியானதோர் வாழ்க்கை வரலாறு வெளிவர வேண்டும் என்னும் ஆர்வம் பலருடைய உள்ளங்களில் இருந்தாலும், அது செயலாகப் பரிணமிக்கவில்லை. பாரதி பக்தரும், தமிழ் அன்பரும், சிறந்த எழுத்தாளருமான ஸ்ரீ ரா. அ. பத்மநாபன் அவ்வரிய முயற்சியை மேற்கொண்டு பல்லாண்டுகளாகப் பாடுபட்டு, பல ஊர்களுக்குப் போய், பல பாரதி நண்பர்களைச் சந்தித்துப் பல தகவல்களைச் சேகரித்து ஒரு நூலாகவே வெளியிட்டிருக்கிறார்.

நூலின் தோற்றுவாய் ''பத்தொன்பதாம் நூற்றுண்டில் தமிழ் நாடு'' என்ற தலைப்பில் ஆரம்பமாகிறது. அக்காலத்து நிலைமையை அப்பிரிவு நன்குவிளக்குகிறது. அதைப் படித்து விட்டு, பாரதியாரைப்பற்றி அறிந்துகொள்ள முயன்றால், அவரது கொள்கைகள், கவிதா சக்தி யாவுமே தெற்றென விளங்கும்.

புத்தகத்தின் ஒவ்வொரு பக்கத்திலும் ஒரு தலைப்புக் கொடுத்து விஷயங்களை அமைத்திருப்பது பாராட்டத்தக்கது. நூற்று எண்பது புகைப்படங்கள், இந்நூலில் வெளியிடப்பட்டிருக்கின்றன. அவற்றில், பாரதியின் நண்பர்கள், பாரதி பிறந்த இல்லம், வாழ்ந்த இல்லம், மறைந்த இல்லம், கவிஞரின் குடும்பம், நண்பர்கள், உறவினர்கள் இப்படிப் பல விதமான சுவை ஊட்டும் காட்சிகள் இடம் பெற்றிருக்கின்றன.

பாரதியார் முப்பத்தொன்பது வயது வரையில்தான் வாழ்ந்தார் என்றாலும், முப்பது முக்கோடி ஆண்டுகளுக்கு மேலும் வாழ்ந்திருக்கக்கூடிய சாகாவரம் பெற்று கவிதைகளை இயற்றி விட்டார். அக் கவிஞர் பெருமானின் குடும்ப வாழ்வு, பொது வாழ்வு, கவிதை வாழ்வு யாவும் மிகவும் குறுகிய காலத்தில் முடிந்து விட்டன. என்றாலும் புரட்சியும் புதுமையும் நிறைந்த வாழ்வு. தமிழகத்தின் தலைசிறந்த கவிஞரும், ஒப்புயர்வற்ற தேச பக்தருமான மகாகவி பாரதியின் இறுதி நாட்களை இந்நூலில் படிக்கும்போது கல் மனமும் கரைந்து விடும்.

கவிஞருக்காக எதையும் கொடுக்கச் சித்தமாயிருந்த அவருடைய அருமை நண்பர் மண்டயம் ஸ்ரீநிவாஸாச்சாரியார் அளித்திருக்கும் முன்னுரை இந்நூலுக்கு ஓர் அணிகலனாகத் திகழ்கிறது. பாரதியோடு நேரில் பழகும் பாக்கியம் பெற்ற அப் பெரியாரின் அநுபவ மொழிகள் சிந்தனைக்குரியவை.

'' நூல் தோன்றிய கதை '' என்னும் பகுதியில் இந்நூலாசிரியர் ஸ்ரீ ரா. அ. பத்மநாபன் இவ்வாராய்ச்சி வரலாற்று நூலைத் தாம் வெளியிட எடுத்துக் கொண்ட பெருமுயற்சிகளையும், முயற்சிகளுக்கு உறுதுணையாயிருந்த அன்பர்களையும் பற்றிச் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கிறார். ஆசிரியரின் தமிழ் நடை தங்குதடையின்றிச் செல்கிறது.

உயர்ந்த முயற்சிக்கேற்ற சிறந்த பதிப்பாக இந் நூல் வெளிவந்திருக்கிறது. உயர்ந்த தாளில், கண்ணைக் கவரும் பிளாஸ்டிக் உறையுடன் வந்திருக்கும் இந்நூல் யாவருடைய பாராட்டுதலையும் பெறும் என்பதில் ஐயமில்லை. பிரசுரம் : அமுத நிலையம், தேனும் பேட்டை, சென்னை-18 ; விலை : ரூ. 20.

## துர்க்கா சந்திரகலா ஸ்துதி

அவதார புருஷரான ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் அவர்கள் அருளிய துர்க்கா சந்திரகலா ஸ்துதி, ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளின் கட்டளைக்கு இணங்க இப்போது வெளியாகியிருக்கிறது. தேவி மகாத்மியத்தில் உள்ள மூன்று சரித்திரங்களும் இதில் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளன. இது, அம்பிகையின் அருள் பெற்று ஆனந்தமடைய விரும்பும் யாவரும் தினசரி பாராயணம் செய்ய வேண்டிய அருமையான தோத்திர நூலாகும். இதில் தோத்திர சுலோகங்களும், சுலோகங்களுக்குத் தமிழில் அர்த்தமும் அடங்கியுள்ளன. வேத விற்பன்னரும் சாஸ்திர பண்டிதருமான ஸ்ரீ ம. ராமநாத தீக்ஷிதரின் தமிழ் உரை சிறப்பாகவும் எளிதாகவும் இருக்கிறது.

கிடைக்குமிடம் : ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம், 4 பிரான்ஸிஸ் ஜோஸப்புத் தெரு, சென்னை. விலை : அணு 6.



# நெற்றிப் பொட்டு

## ரவீந்திரநாத் தாகூர்

(சென்ற வாரத் தொடர்ச்சி)

என்னைக் கண்டதும் அவளுடைய முகத்தில் தெளிந்ததோர் அமைதி நிலவியது. "நேற்று இரவே பிடித்து, எனக்கு உடம்பு சரியாக இல்லை. உன்னைப் பற்றிய நினைவே. ரொம்ப நாள் நான் இருக்கமாட்டேன்; அது எனக்குத் தெரிகிறது. நாளைக்கு மறு நாள் 'பாஇ போன்டா' நோன்பு.* நான் உன் நெற்றியில் கடைசியாகப் பொட்டு வைத்து விட்டுச் செல்வேன்" என்றாள் அநு.

பணத்தைக் குறித்து அவளிடம் பேச்சு எடுக்கவில்லை. ஸுபோதை அழைத்தேன். தாயின் சாயலாகவே இருந்தான். உலகம் அவனுக்குத் தன் பூரணமான நகில் அமுதினைத் தந்து ஊட்டும் அளிக்காததனால் இன்பமும், ஒரு ஏக்கமும் அவன் முகத்தில் பிரதிபலித்தன. அவனை என் உடலோடு தழுவி முத்தம் தந்தேன். என்னையே அவன் மௌனமாக வெகு நேரம் நோக்கினான்.

*   *   *

"போய் வந்தாயே, என்ன ஆச்சு?" என்றான் பிரஸன்னன்.

"இன்று அதைப்பற்றி அவளுடன் பேசச் சமயம் வாய்க்கவில்லை" என்றேன் நான்.

"உண்டியலின் கடுவு ஒன்பதே நாள்தான். கவனம் இருக்கட்டும்..." என்றான் அவன்.

அநுவின் ரத்தமிராத வெளுத்த முகத்தை மரணப் பொய்கையில் அலர்ந்த அந்தத் தாமரையைப் பார்த்தது முதல் என்னை நோக்கி வரும ஒரு பெருங் கேடு அப்படி பயங்கரமாகத் தோன்றவில்லை.

சில நாட்களாகவே நான் கணக்கு வழக்குகளைக் கவனிப்பதை விட்டு விட்டேன். கையெழுத்து மட்டும் போட்டு வந்தேன். என் நிலையைப் புரிந்துகொள்ள நான் எந்த முயற்சியும் எடுத்துக் கொள்ளவில்லை.

'பாஇபோன்டா' நாளன்று கணக்கு வழக்கின் ஒரு சுருக்கமான விவரத்தை எடுத்து வந்து என்னுடைய கார்பாரின் லட்சணத்தை உணர்த்தினான் பிரஸன்னன். மூலதனமே போன இடம் தெரியவில்லை. தேங்கி இருக்கும் கடன் பாபத்துக்களை இறைத்தால் என்னுடைய கார்பார் கப்பல் மூழ்காமல் இருக்க ஏதாவது வழி செய்ய முடியுமென்று இறுதி எச்சரிக்கை விடுத்தான் பிரஸன்னன்.

பண உதவியை நாட ஒருவித சாக்காக இருக்குமென்று நான் பாஇபோன்டா நாளன்று அநுவின் வீட்டுக்குச் சென்றேன். அன்று வியாழக்கிழமை. குழம்பி யிருக்கும் என் அறிவு வியாழக்கிழமையைக் கண்டு சற்றும் மருளாமல் இல்லை. அதிர்ஷ்ட மற்றவனுக்குத் தன் சுயபுத்தியில் உறுதியிராது போனால் அவனுக்கு விமோசனமே இல்லை. போகும் போது என் மனம் மிகவும் கலக்கமுற்றது.

அநுவுக்குக் காய்ச்சல் ஏறத் தொடங்கியது. அவள் படுக்கையில் கிடந்தாள். கீழே தரை மீது நிசப்தமாக ஸுபோத் ஓர் ஆங்கிலப் பத்திரிகையிலுள்ள படங்களைக் கத்திரித்து ஒரு நோட்டில் ஒட்டிக் கொண்டிருந்தான்.

நல்லவேளை பார்த்துக்கொண்டு நான் சற்று முன்னதாகவே வந்துவிட்டேன். என்னுடைய மனைவியையும் அழைத்துக்கொண்டு வருவதாகச் சொல்லியிருந்தேன். ஆனால் அநுமீது என் மனைவிக்கு அழுக்காறு இருப்பதால் புறப்படும்போது அவள் வரமறுத்து விடுவாளென்று எனக்குத் தெரியும். நான் அவளைக் கட்டாயப் படுத்தவில்லை.

*   *   *

"மனைவி ஏன்வரவில்லை?" என்றாள் அநு.

"அவளுக்கு உடம்பு சரியாக இல்லை" என்று கூறினேன்.

அநு பெருமூச்செறிந்தாளே தவிர வேறு ஒன்றும் பேசவில்லை. ஒரு காலத்தில் என்னிடம் குடியிருந்த இனிமை அன்று அநுவின் படுக்கைமீது உருகியோடும் சரத்காலத்தின் பொன்னவிர் ஒளிபோல் தோய்ந்திருந்தது. எத்தனை விஷயங்களைப் பற்றி நாங்கள் இருவரும் அன்று அளவளாவிப் பேசினோம். எனக்கு மூண்டிருக்கும் ஒரு கேட்டை விட இளமையில் நடந்த அற்ப விஷயங்களே அன்று பெரிதாகத் தோன்றின.

'பா இ போன்டா' விருந்து உண்டேன். மரணத்தை நோக்கி விரையும் அநுவையோ என் நெற்றியில் என்னுடைய நீண்ட ஆயுளைக் கோரிச் சந்தனத்திலகம் இட்டு என் காலடியில் விழுந்து வணங்கி என் கால் தூசுகளை எடுத்துத் தலைமீது வைத்துக் கொண்டாள். பொங்கி எழுந்த கண்ணீரை மறைவில்போய்த் துடைத்துக் கொண்டேன்.

அறையில் வந்து உட்கார்ந்ததும் அவள் ஒரு தகரப் பெட்டியை என்னெதிரே கொண்டு வந்து வைத்தாள். "ஸுபோதுக்காக நான் இத்தனை நாட்கள் பத்திரமாகக் காப்பாற்றி

வதை உன்னிடம் தருகிறேன். அத்துடன் ஸுபோதையும் உன் வசம் ஒப்படைத்து விடுகிறேன். இனிமேல் நான் நிம்மதியாகப் பிராணனை விடுவேன்'' என்றாள்.

''அநு, உன் மீது ஆணை. பணத்தை நான் எடுத்துக் கொள்ள மாட்டேன். ஸுபோதை நான் ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்கிறேன். அதில் ஒரு குறைவும் ஏற்படாது. ஆனால் ரூபாயை வேறு யாரிடமாவது கொடுத்து வை'' என்றேன்.

''இந்த ரூபாயை அடித்துக் கொண்டு போக எத்தனை கைகள் காத்துக் கொண்டிருக்கின்றன. அவர்களிடமா இதைக் கொடுத்து விடச் சொல்லுகிறாய்?'' என்றாள் அநு.

நான் கம்மென்று இருந்தேன்.

''ஸுபோதுக்கு இருக்கும் உடல்நிலையைப் பார்த்தால் அவன் அதிக நாள் பிழைத்திருக்க மாட்டானென்றே தமக்குத் தோன்றுவதாக டாக்டர் சொன்னது என் காதில் விழுந்தது. அதுமுதற்கொண்டு திகில், எங்கே மரணம் எனக்குச் சீக்கிரம் வராது போய் விடுமோ வென்று. இன்று நான் நிச்சிந்தையாகக் கண்ணை மூடிக் கொள்ளலாம். டாக்டர் சொன்னது போல் நடக்காமலும் போகலாம். 47 ஆயிரம் ரூபாய் நோட்டுக்களாக இருக்கின்றன. இன்னும் இரண்டொரு இடத்திலிருந்து வர வேண்டிய பணம் இருக்கிறது. அந்த ரூபாய் ஸுபோதுக்கு நல்லவைத்தியம் பார்க்க உதவும். ஒரு கால் பகவான் அவனை இளமையிலேயே இழுத்துக் கொண்டால் இந்தப் பணத்தை ஏதாவது ஒரு நல்ல காரியத்துக்கு அவன் பெயரால் உபயோகித்துக் கொள்'' என்றாள் அநு.

''அநு! உனக்கு என் மீது நம்பிக்கை இருப்பதுபோல் அவ்வளவு என் மீது எனக்கு நம்பகம் விழவில்லையே?'' என்றேன் நான்.

இதைக் கேட்டு அநு சற்றே முறுவல் செய்தாள். நான் இப்படிப் பேசியது ஏதோ ஒரு குற்றத்தை மறைக்க நான் பொய் பேசுவது போலவே இருந்தது.

விடைபெற்று வரும் சமயம், அநு பெட்டியைத் திறந்து நோட்டுக்களை எண்ணித் தந்தாள். அவள் எழுதியிருந்த உயிலில் ஸுபோத் பிள்ளையிராமலோ அவனது இளமையிலேயோ காலமாகி விட்டால் நானே சொத்துக்கு உரியவன் என்று கண்டிருந்தது.

''இப்படி என்னுடைய நலத்துடன் உன் சொத்தை எதற்காகப் பிணைக்கப் பார்க்கிறாய் அநு?'' என்றேன் நான்.

''என் மகனின் நலனைக் கவனிப்பதால், உன்னுடைய நலன் பாதிக்கப்படுமென்பதை நான் அறிவேன்'' என்றாள் அநு.

''இப்படித் திடுமென்று ஒருவனிடம் நம்பிக்கை வைப்பது எனக்கு உசிதமாகப் படவில்லை'' என்றேன்.

''நான் உன்னை அறிவேன்... தர்மத்தை அறிவேன். காரியங்களை எப்படிச் செய்வதென்பதை மட்டும் தான் அறியேன்'' என்றாள் அநு.

பெட்டியிலுள்ள நகைகளை எடுத்துக் காட்டி அவள், ''ஸுபோத் உயிருடன் இருந்து விவாகம் செய்து கொண்டால், மணப்பெண்ணுக்கு இதையெல்லாம் போட்டு, என் ஆசியைத் தா. இந்த மரகதக் கண்டியை மன்னியிடம் கொடுத்து அவள் அதைக் கட்டாயமாக அணிந்து கொள்ள நான் சொன்னேனென்று சொல்லு'' என்றாள்.

இதைக் கூறியதும், அவள் தரையில் படிய என்னை வணங்கியபோது அவள் கண்களில் நீர் பளபளத்தது. விரைவாக எழுந்து வேறு புறமாக முகத்தைத் திருப்பிக்கொண்டு போய் விட்டாள். அதுவே கடைசியாக அவள் எனக்குச் செலுத்திய வணக்கம். இது நடந்த இரண்டாவது நாள் மாலை திடுமென அவள் மூச்சு அடைப்பினால் இறந்து போனாள். எனக்குத் தன்னுடல் நிலையைப்பற்றிச்சொல்லி அனுப்பக் கூட அவகாசமில்லை.

பாடு போன்டா அழைப்பை ஏற்று விருந்து உண்டு விட்டு, அன்று நான் அவள் தந்த பெட்டியுடன் வீட்டுக்கு வந்து சேர்ந்தேனோ இல்லையோ, பிரஸன்னன் எனக்காகக் காத்திருப்பதைக் கண்டேன். ''அண்ணா! நல்ல சமாசாரந்தானே?'' என்றான்.

''இந்தக் காசில் கை வைக்கவே மாட்டேன்'' என்றேன்.

''ஆனால்—'' என்றான் பிரஸன்னன்.

''அதென்னவோ அதெல்லாம் தெரியாது. இந்தப் பணத்தை என் வியாபாரத்தில் போட முடியாது'' என்றேன்.

''அப்படியானால் உன் கடைசிச் சடங்குக்குத் தான் அது உபயோகப்படும்'' என்றான் பிரஸன்னன்.

அநு இறந்தவுடன் ஸுபோத் என் வீட்டுக்கே வந்து விட்டான். என் மகன் நித்யனுக்குத் தோழனானான்.

கதைப் புத்தகங்களைப் படிப்பவர், நினைத்துக் கொள்ளலாம், மனிதனின் மனத்துள் மாறுதல்கள் மெல்ல மெல்லத்தான் தோன்றுமென்று. உண்மை இதற்கு நேர்மாறாகவே இருக்கிறது. உக்காவில் நெருப்பு பற்றுவதற்கு நாழிகை ஆகும். ஆனால் பெருந்தீ 'கபகப' வென்று பற்றி எரியும். ஸுபோத் என்னை அண்டிவந்த சில காலத்துக்கெல்லாம் அவனைப் பற்றி என் மனத் துவேஷம் மடமடவென்று வளரத் தொடங்கியது. இதை நான் வாய் விட்டுச் சொல்வதால் அதன் காரணத்தைக் கேட்காமலா விடுவீர்கள்? ஸுபோதுக்குத் திக்கு யாருமில்லை. அவனோ மிகவும் நோஞ்சலான பையன். கண்ணுக்கு அழகாக இருக்



கிறான். எல்லாவற்றையும்விட ஸ்ரீபோதின் தாய்தானே அது. ஆனால் அவனுடைய பேச்சு, போக்கு விளையாட்டு யாவும் இரவு பகல் என்னைத் துன்புறுத்தியே வந்தன. அதன் காரணம் இதுவே. எனக்கு நெருக்கடியான காலம். ஸ்ரீபோதின் பணத்தைத் தொடக்கூடாதென்ற பிரதிக்ஞை. ஆனால் எனக்கு ஏற்பட்டிருக்கும் சங்கடமான நிலை அதைக் கையாளாது போனால் தீராது போலவே தோன்றியது. மென்னியைப் பிடிக்கும் அளவு வந்தபோது அதில் கொஞ்சம் எடுத்தேன். இதனால் என் மனமே பெரிய பாபத்தைச் செய்துவிட்ட மாதிரி கலங்கிப் போயிற்று. ஸ்ரீபோதின் முகத்தில் விழிக்கவே எனக்கு லஜ்ஜையாக இருந்தது. முதலில் அவன் கண்களில் படாமல் செல்வேன். வர வர அவன் மீது எனக்கு எரிச்சலே உண்டாயிற்று.


நாலாவது டயர் எங்கே ?

இந்த எரிச்சல் தோன்றுவதற்கு ஒரு சாக்காக அமைந்தது ஸ்ரீபோதின் சுபாவம். சற்று நேரம் சும்மா இருக்காமல் ஏதாவது செய்துகொண்டே இருப்பது என் இயற்கை. எந்தக் காரியமும் சட்டபட்டென்று தீர்ந்துவிட வேண்டும் எனக்கும். ஆனால் ஸ்ரீபோதின் தன்மை, நான் எதற்காவது கூப்பிட்டால் அவன் மனம் எங்கோ இருக்கும். பதில் தரவே மாட்டான். தெருப் பக்கமாக உள்ள ஜன்னல் கிராதியைப் பிடித்துக் கொண்டு மணிக்கணக்காகப் பொழுதைப்போக்குவான். வெளிக் காட்சிகளைக் காண்பதில், என்னதான் இருக்குமோ அவற்றில்? இது எனக்குச் சகிக்கவில்லை. ஸ்ரீபோதின் நோயாளியான தாய் உருவாக்கிய பிள்ளை. அவனுடன் விளையாட அவனுக்குச் சம வயதினரான கூட்டாளிகள் இல்லை. அதனால் அவன் தன் மனத்துக்குள்ளேயே எத்தனையோ விளையாட்டுக்களைக் கற்பனை செய்து தனி உலகில் உலவிவந்தான். இத்தன்மையான பிள்ளைகளைப் பற்றி ஒரு சங்கடம் என்னவென்றால், ஏதாவது வேதனை இவர்களின் உள்ளத்தை அலைக்கும்போது இவர்கள் நன்றாக அழுது வெளிப்படுத்த மாட்டார்கள்: அதை மறைக்கவும் வழியும் தெரியாது. இதனாலேயே அவனைக் கூப்பிடும்போது அவனிடமிருந்து பதிலே வராது. எதையாவது செய்யச் சொன்னால் செய்ய மறந்து விடுவான். சாமான்களைக் கெட்டுப் போக்கி விடுவான். அதற்காகக் கடிந்து கூறினால், முகம் வாடிப் போய்விடும். பொலபொலவென்று கண்ணீர் உகுப்பான்.

அவன் இப்படி இருந்ததால் என் மகன் நித்யன் அவனைப் பின்பற்றிக் குட்டிச்சுவராகப் போக இடம் ஏற்பட்டது. இவனிடத்தில் நித்யனுக்குத் தனிக் கவர்ச்சி. பிறருடைய குணத்தில் தென்படும் குறைகளைத் திருத்துவது என்னுடைய முக்கிய வேலை. இதில் எனக்குத் திறமை உள்ளது போல உற்சாகமும் அதிகம். ஸ்ரீபோதிடம் சுறுசுறுப்பில்லை என்பதால் நான் அவனுக்கு ஏதாவது வேலையிடுவேன். அவன் பிசகப் பிசகத் தன் தவற்றை உணர்வதற்கு மீண்டும் வேலைகளைக் கொடுப்பேன். அவனிடத்திலுள்ள ஒரு வழக்கம்,- அது அவன் தாய்க்கும் இருந்தது. தன்னைப் பற்றியும், தன்னைச் சூழ இருக்கும் விஷயங்களைக் குறித்தும் பலவிதக் கற்பனைகளைப் புனைவதுதான்.

ஜன்னலுக்கு எதிர்ப்புறமாக ஒரு ஜாம்ருல் மரம். அதற்கு அவன் ஒரு விசித்திரப் பெயரை வைத்திருந்தான். தனியாக அந்த மரத்தண்டை வந்து தானே என்னவோ பேசிக் கொள்வானென்று என் மனைவி என்னிடம் கூறியிருக்கிறாள். தன்னுடைய படுக்கையை மைதானமாகவும், தலையணையை மாட்டு மந்தையாகவும் நினைத்துக் கொண்டு இடையன் விளையாட்டு விளையாடுவான். அது எவ்வளவு பொய் என்பதை அவனுக்கு நினைவுறுத்தித் தன் பிசகைத் திருத்திக் கொள்ளச் சொன்னாலும் அவன் திருந்துவதாக இல்லை. நான் எவ்வளவு அதட்டினாலும் மிரட்டினாலும் அவன் செய்யும் தவறுகள் மேலும் மேலும் வளர்ந்து கொண்டே போயின. என்னை மிகவும் திடுக்குறச் செய்தது, அவன் என் சாதாரணப் பேச்சைப் புரிந்து கொள்ளாமல் பராக்காக இருப்பதுதான்.

கோபம் தலைக்கு ஏற ஏற, அதைத் தடுக்க வெளியிலிருந்து அதிர்ச்சி ஏதாவது ஏற்படாது போனால் அது வரம்பை மீறிச் சென்றுவிடுகிறது. புதிய காரணத்துக்காக அது காத்திருப்பதில்லை. ஸ்ரீபோதின் மீது எனக்கு மூண்ட இந்தத் துவேஷம் வரவர எனக்குள்ள ஒரு வழக்கமாக மாறிவிட்டது. அதை விட்டுத் தொலைக்க முடியவில்லை.

இப்படி ஐந்தாறு ஆண்டுகள் கழிந்தன. ஸ்ரீபோதுக்குப் பன்னிரண்டு வயதாயிற்று. அப்போது அவனுக்காக அவன் தாய் வைத்துச் சென்ற பணத்தையும், நகைகளையும் அழித்து வந்த தொகையை என் வியாபாரக் கணக்கின் பேரேட்டில் இரண்டு பக்கம் இலக்கமாகக் காட்டி விட்டேன்.

என் மனத்துள் ஏதனாலோ இப்படி ஓர் எண்ணம் தோன்றியது; 'அநு எனக்கே கடைசியில் சொத்து சேருவதற்கு உயிலில் வகை செய்திருக்கிறாள். ஸ்ரீபோதன் இப்போது உயிருடன்தான் இருக்கிறான். ஆனால் அவன் வெறும் நிழல்தானே. என்னையே அடையப் போகும் அந்தப் பணத்தை முன்னால் எடுத்துச் செலவு செய்வது அதர்மமாகாது.'

சிறிய வயதிலேயே எனக்கு வாதத்தினால் பிடிப்பு நோய் உண்டு. அது இப்போது சற்று அதிகமாக என்னைப் பிடிக்கத் தொடங்கி விட்டது. என் வாதை ஒருபுறமிருக்க, வீட்டில் உள்ளவர்களையெல்லாம் கதிகலங்க வைத்தது இவ்வளவு அவ்வளவு இல்லை.



# கெமிகல் டெஸ்டிங் & அனலிடிகல் லேபரடரி

(இரசாயன பரிசோதனை நிலையம்)

(சென்னை அரசாங்க கைத்தொழில் அண்டு வர்த்தக இலாகா)

**இண்டஸ்ட்ரியல் எஸ்டேட், கிண்டி, சென்னை-16**



இந்நிலையத்தில் உலோகங்கள், தாதுப் பொருள்கள் மற்றும் இரசாயனப் பொருள்கள் முதலியவைகளைப் பரிசோதனை செய்து அரசாங்க இலாகாக்களுக்கும் மற்றவர்களுக்கும் பத்திரங்களும் அபிப்பிராயங்களும் வழங்கப்படுகின்றன

மேற்கூறிய பொருள்களை, அவைகள் கிடைக்கும் இடங்களிலும் துறைமுகங்களிலும் மற்றும் எவ்விடங்களிலும் சாம்பிள் செய்து அதற்குகந்த பத்திரங்களும் வழங்கப்படுகின்றன

**விவரங்களுக்கு லேபரடரி சீப் கெமிஸ்டு அவர்களுக்கு எழுதவும்**

கல்கெமிகோவின்

# காந்தரிடைன்

## கூந்தல் தைலம்



கூந்தலை செழுமையாக வளரச் செய்வதில் இணையற்றதெனப் பண்டைக்காலம் முதல் புகழ்பெற்ற **ஆலிவ் ஆயில்** அடங்கியுள்ளது.

மென்மையான நறுமணம் கொண்டது.

6 அவுன்ஸ் கொண்ட அழகான பாட்டிலில் கிடைக்கும்.

**கல்கத்தா கெமிகல் கோ. லிட்.,**
**கல்கத்தா-29.**

தென் இந்திய ஆபீஸ்: 5/149, பிராட்வே, சென்னை-1

நாள்முழுவதும்
கவர்ச்சிகரமாக
தோற்றமளிக்க






**ஸான்டல்வுட் டாய்லட் பவுடர்**
சுத்தமான தனி சந்தனத்தை
மென்மையாக்கப்பட்டது.

**ஸான்டால்**
சந்தனத்துடன் கூடிய டால்கம் பவுடர்

# டி.எஸ்.ஆர். & கோ
## கும்பகோணம்

A. K. GOPAL & CO.,

சென்னை நகருக்கு டிஸ்ட்ரிபூட்டர்கள்: சுசாந் ஏஜன்ஸீஸ், 18, ராயப்பேட்டை ஹைரோடு, கோயமுத்தூர் பாலக்காடு நீலகிரிக்கு சோல் ஏஜண்டு: B. பாலபட்டாபி (ஸ்தாபிதம் 1932) வைசியாள் தெரு கோயமுத்தூர் மதுரை ஏஜண்டு: மெஸர்ஸ் மீனாக்ஷி எண்டர்பிரைஸஸ், 4, கூட்ஸ் ஷெட் தெரு, மதுரை

எனக்குத் தெரிந்த விதவை உறவினர்கள் சிலர் என்னிடம் வட்டிக்காகப் பணம் கொடுத்திருந்தனர். கொடுக்க வேண்டிய வட்டித் தொகை ஏராளமாகச் சேர்ந்து விட்டது. முன்னர் இப்படி யெல்லாம் நேர விடுவதில்லை. அவ்வப்போது பைசல் செய்து விடுவேன். நான் நோயுற்ற சமயம் இவர்களுடைய தாக்கீது எனக்குப் பெருந் தொல்லையாகியது. கடன் கொடுத்தவர்கள் பணத்துக்காக என் வீட்டு வாசலிலேயே வந்து தகராறு செய்ய ஆரம்பித்து விட்டனர். பிரஸன்னன் ஆளையே காணவில்லை.

'ஸ்போதனைக் கூப்பிடு' என்று நித்யனிடம் கட்டளை யிட்டேன்.

''ஸ்போத் படுத்துக்கொண்டிருக்கிறான்'' என்றான் நித்யன்.

எனக்குக் கோபம் பற்றி வந்தது. ''படுத்துக் கொண்டிருக்கிறானா? மணி பதினொன்றுக்கு மேல் ஆகிறது! இன்னுமா எழுந்திருக்கவில்லை?'' என்றேன்.



ஸ்போதன் என் குரலைக் கேட்டு நடுங்கிக் கொண்டே உள்ளே வந்தான். ''பிரஸன்னனை எப்படியாவது, எங்கே இருந்தாலும் தேடிக் கொண்டு வரவேண்டியது உன் வேலை' என்று உத்தர விட்டேன்.

இது போன்ற என் ஏவல் களைச் செய்வதில் பக்குவ மடைந்தவன் ஸ்போதன். யார், எந்தச் சமயத்தில், எங்கே அகப்படுவார்கள் என்பது அவனுக்கு நன்றாகத் தெரியும்.

பகல் மணி ஒன்றாகியது; இரண்டாயிற்று. மூன்றும் அடித்தது. ஸ்போதன் போனவன் திரும்பவில்லை. நான் எவ்வளவு கூறியும் என்ன, ஸ்போதன் தன் போக்கை மாற்றிக் கொள்ளவில்லை. சோம்பல் அவனுக்கு உடன் பிறந்தது. ஒரு காரியம் சொன்னால் மெல்ல நகர்ந்து அதைச் செய்து முடிக்க ஒன்பது நாட்கள் ஆகுமே! உதவாக்கரை, தண்ட ஜன்மம் என்று என்ன திட்டினாலும் அவன் தலை குனிந்துகேட்டுக் கொண்டு சும்மா இருப்பான். ஒரு நாள் நான் அதிகமாகக் கடிந்து சொல்லவே அவன் விக்கி விக்கி அழுது விட்டான். எது வேண்டுமானாலும் தாங்கிக் கொள்ளலாம், வசவு அடிகூட. ஆனால் என்னுடைய கடிதல் அவனை உள்ளூற வருத்தியது.

பொழுது போய்விட்டது. இரவு என் அறையில் யாரும் விளக்கு ஏற்றவில்லை. ஒரே இருள். நான் உரக்கக் கத்தியும் யாரும் பதில் குரலே தரவில்லை. வீட்டில் இருக்கும் அத்தனை பேர் மீதும் எனக்குக் கடுமையான கோபம் பொங்கி வந்தது. ஒரு சந்தேகம் தட்டியது எனக்கு. பிரஸன்னன் ஸ்போதிடம் பணம் கொடுத்திருப்பான்; அவன் அதை எடுத்துக் கொண்டு ஓடி விட்டிருப்பான். அவனுக்குத் தான் என் வீட்டில் நிம்மதியே இல்லையே!— இப்படி யெல்லாம் அமைதியிராமல் சுற்றிக் கொண்டே இருப்பதுதான் சிறுவர் வாழ்க்கையின் லட்சணம் என்பதே என் கருத்து. இதனால் ஸ்போதின் மீது எனக்குத் துளியேனும் பச்சாத்தாபமே ஏற்படவில்லை. 'நன்றி கெட்ட பயல்' என்று அவனை மனத்துள் திட்டித் தீர்த்து விட்டேன்.

இந்த வயசிலேயே இந்தத் திருட்டுப் புத்தி வந்து விட்டால் பின்னால் அவன் உருப்படப் போவது ஏது! வீட்டிலேயே இத்தனை நாட்கள் இருந்து வளர்ந்த பையன், அவனுக்கு இந்த மாதிரி புத்தி எப்படி ஏற்பட்டது? ஸ்போத் பணத்தை எடுத்துக் கொண்டு தலை மறைந்து விட்டானென்றே முடிவு கட்டி விட்டேன். அவன் என் கையில் அகப்பட்டுக் கொண்டால் நன்றாகக் கைகொண்ட மட்டும் அறைய வேண்டுமென்று ஆத்திரம் உண்டாயிற்று.

அதே சமயம், இருள் கவிந்த என் அறைக்குள் ஸ்போத் நுழைவதைப் பார்த்தேன். எனக்கு வந்த கோபம் தணியவில்லை. ''பணம் கிடைக்கவில்லை'' என்று ஸ்போத் சொன்ன போது கோபம் கட்டுக்கு அடங்கவில்லை. நான் ஸ்போதைப் பணம் வாங்கி வரச் சொல்லவில்லையே? அவன் எதற்காகப் பணம் கிடைக்கவில்லை யென்றான்? இதிலிருந்து அவன் நிச்சயமாகப் பணத்தைத் திருடி யிருக்கிறான். எங்கேயோ மறைத்து விட்டான். நல்ல மாதிரியாகத் தோன்றும் பிள்ளைகள் உண்மையில் கொடிய சைத்தான்கள்.

கோபத்தால் கனலும் குரலைக் கனைத்து, ''பணத்தை மரியாதையாக எடுக்கப் போகிறாயா இல்லையா?'' என்றேன்.

அவனும் சற்றுப் பிடிவாதமாக, ''முடியாது. என்ன வேண்டுமானாலும் செய்து கொள்'' என்றான். வந்த ஆத்திரம் என்னால் அடக்கிக்கொள்ள முடியவில்லை. என் கைக்கு அருகில் சிறு தடியிருந்தது. அதை எடுத்துப் பலங்கொண்டமட்டும் ஸ்போதின் தலையைக் குறித்து அடித்தேன். சிறுவன் அப்படியே தரையில் சாய்ந்தான். எனக்குப் பயமாகி விட்டது. உரக்க அவன் பெயரிட்டுக் கூப்பிட்டேன். பதிலே வரவில்லை. அருகில் சென்று பார்க்கலாமென்று எழுந்தபோது எனக்குச் சக்தியில்லை என்பதை உணர்ந்தேன். எப்படியோ எழுந்து தடவிக் கொண்டே குனிந்து பார்க்கிறேன்: 'இதென்ன! தரையிலுள்ள ரத்தினக் கம்பளத்தில் இவ்வளவு ஈரம்? ஐயோ ரத்தம்! திறந்த ஜன்னல் வழியாக அந்தி வெள்ளி சிமிட்டுவது தெரிந்தது. கண்களைத் திருப்பிக் கொள்கிறேன். அந்தத் தாரகை, அது என் நெற்றியில் அன்று வைத்த சந்தனப் பொட்டின் நினைவை எழுப்பியது. இது வரையில் நான் ஸ்போதின் மீது கொண்டிருந்த துவேஷம் நொடிப் பொழுதில் மறைந்து விட்டது. அது பெற்றெடுத்த அருமைச் செல்வ

தாயார்: ஏண்டா இப்படித் தூங்கறபோது நடு இரவிலே இப்படி அடிக்கடி குடிக்கத் தண்ணீர் கேட்டுப் பிராணனை வாங்கறே?



மகன்: பாலைவனத்திலே பிரயாணம் செய்கிறாப்பலே சொப்பனம் கண்டுண்டே இருக்கேனம்மா, அதனாலேதான்!

மாயிற்றே அவன்! அன்னையின் மடியிலிருந்து என் இதயத்துள் இடம் பெற வந்தவன், குழந்தையாயிற்றே! சே, இதென்ன அவனுக்கு நான் செய்தது? இப்படி ஒரு புத்தியை பகவான் எனக்கு ஏன் தந்தார்! ஐயோ! இந்த நோயாளிப் பையனையா இப்படிச் செய்தேன்?

எனக்கு நடுக்கம் ஏற்பட்டது. யாராவது வந்து விடுவார்களோ வென்று, இந்த அநியாயம் வெளியாகி விடுமோ வென்று. 'யாருமே விளக்கு ஏற்ற வராமல் இருக்க வேண்டும். இந்த இருள் பிரியவே கூடாது. சூரியன் எழாமல் இருக்க வேண்டும். நானும் அவனும் இந்த இருளுக்குள்ளேயே அமுந்தி மறைந்து விடவேண்டும்' என்று உள்ளூறப் பிரார்த்தனை செய்தேன்.

காலடிச் சத்தம் கேட்டது. யாரோதான் விஷயம் தெரிந்து போய் போலீசுக்கு எட்ட விட்டிருப்பார்கள். நடந்த காரியத்துக்கு என்ன பதில் சொல்லுவதென்று தோன்றாமல் என் மனம் குழம்பியது. தடாரென்று யாரோ கதவைத் திறந்தாற் போலிருந்தது. எனக்கு உச்சந்தலை பிடித்து உள்ளங்கால்வரை ஆடியது. வெளியே நல்ல வெய்யில் காய்வது தெரிந்தது. நான் பாழும் தூக்கத்தில் கனவு கண்டதே இதெல்லாம்! ஸுபோத் வருவதற்கும் நான் கண் விழிப்பதற்கும் சரியாக இருந்தது.

ஹாட்ரோட், பேலாகாட் இன்னும் எங்கெங்கோ சுற்றி அலைந்து பிரஸன்னனைத் தேடிப் பிடிக்க முடியவில்லை என்று ஸுபோத் சொன்னான். நான் என்ன கோபித்துக் கொள்வேனோ என்று திகில் அவன் முகத்தில். இப்போதுதான் அவன் முகத்தை நன்றாகக் கவனித்தேன். என்ன களை, என்ன அழகு!

"அப்பா ஸுபோத்! என்கிட்டே வந்து உட்கார்" என்றேன் நான்.

நான் சொல்வது அவனுக்கு விளங்கவில்லை. ஒருவேளை நான் கேலி செய்கிறேனோ என்று நினைத்துக் கொண்டானோ என்னவோ? என்னையே நோக்கிப் பேந்தப் பேந்த விழித்தான்; சற்றுநேரம் நின்றதும், மடிந்து தரையில் சாய்ந்தான்.

இமைப் பொழுதில் என் வாதமெல்லாம் பறந்தோடியது. ஓடிப்போய் அவனைத் தூக்கி எடுத்து என் படுக்கையில் படுக்க வைத்தேன். கூஜாவிலிருந்து குளிர்ந்த நீரை எடுத்து முகத்தில் தெளித்தேன். மயக்கம் தெளியவில்லை அவனுக்கு. டாக்டருக்கும் ஆளை அனுப்பினேன். டாக்டர் வந்து அவனைப் பரிசோதித்து முகத்தில் தென்படாமல், "களைப்பின் கடைசி எல்லைக்கு வந்துவிட்டான். இது எப்படி நேர்ந்ததோ, தெரியவில்லையே?" என்று கூறினார்.

"இன்று ஒரு வேலையாக அவனை வெளியே அனுப்பினேன்; நாலு இடம் சுற்றியதனால் ஏற்பட்டிருக்குமோ?" என்றேன்.

"இன்று ஒரு நாள் சிரமத்தால் இப்படி நேராது. நெடுநாட்களாகவே இவனுக்கு உள்ளுக்குள் ஏதோ ரோகத்தினால் பலவீனம் ஏற்பட்டிருக்க வேண்டும். இதை யாருமே கவனிக்க வில்லையா?" என்றார் டாக்டர்.

உணர்வூட்ட மருந்தும் பத்திய உணவு தந்தும் அவனுக்கு உயிர்ப்பு மூட்ட எவ்வளவோ பாடுபட்டார் டாக்டர். "மிகவும் ஜாக்கிரதையாகத் தேற்றினால் ஒரு கால் பிழைத்தாலும் பிழைக்கலாம் இவன்... ஆனால் உடலில் பிராண சக்தி துளிக்கூட இல்லையே. வெறும் மன உறுதியால் சிலநாட்களாக அவன் உயிரைப் பிடித்துக் கொண்டு அலையவந்திருக்கிறான்" என்று சொல்லி விட்டார் டாக்டர்.

எனக்கு மூண்டிருந்த நோயை நான் பொருட் படுத்தவில்லை. ஸுபோதனுக்கு இரவு பகலாக அவனைத் தேற்ற என்னால் முடிந்ததைச் செய்தேன். டாக்டருக்குப் பணம் தர என்னிடம் ஒன்றுமில்லை. நகைப் பெட்டியைத் திறந்து, அதிலிருந்து மரகத கண்டியை எடுத்து என் மனைவியிடம் தந்து, "இதை வைத்துக் கொண்டு, உன் நகைகளைத் தா. அவற்றை அடகு வைத்துப் பணம் கொண்டு வருகிறேன்" என்றேன்.

ஆனால் பணத்தால் மட்டும் ஒருவனைப் பிழைக்க வைத்துவிட முடியுமா? நான்தான் அவன் உயிரை இத்தனை நாள் நசுக்கி வந்திருக்கிறேனே. அது எப்படி நிற்கும்? என் அன்பு ஆதரவிலிருந்தும் அவனை வஞ்சித்து விட்டேனே; இன்று எவ்வளவுதான் என் அன்பு பொங்கி எழுந்தாலும் என்ன...அதை அவனால் ஏற்றுக் கொள்ள முடியாது. வெறுங் கையுடன் தன் அன்னையிடமே அவன் போய்ச் சேர்ந்து விட்டான்.

---

* 'பாயி போண்டா' என்ற நோன்பு-கார்த்திகை மாதம் சுக்லபட்ச துவிதியை திதியில் வங்க நாட்டுப் பெண்கள் உடன்பிறந்த தமையன், தம்பி அல்லது அவர்களைப் போன்ற தம் மதிப்புக்குரியவர்களின் நீண்ட ஆயுளை விரும்பி நோற்கும் ஒரு நோன்பு. இதற்கு யம துவிதியை என்றும் பெயர். உடன் பிறந்தவரின் நெற்றியில் சந்தனத் திலகம் இட்டு, அவனுக்கு நல்ல விருந்து உபசாரமே செய்வார்கள். இந்த நோன்பை முதன் முதல் அனுஷ்டித்தது ராஜா நந்திவர்த்தனருடைய தமக்கையாம். ஜைன குருவான மகாவீரர் மறைந்ததைக் குறித்து அவரிடம் அளவற்ற அன்பு கொண்டிருந்த நந்தி வர்த்தனன் ஒரே துக்கத்துடன் மெலிந்து வருவதைக் கண்டு அவனுடைய தமக்கை, அவன் நீண்ட ஆயுளை விரும்பி அவனைத் தேற்றி இவ் விரதத்தைச் செய்தாள் என்பது விரதகல்பம் கூறும் செய்தி.

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10
for the Proprietors Messrs Bharathan Publication Private Limited
Managing Editor: T. Sadasivam

அவனுக்கு
ஜான்ஸன்ஸ்
பேபி பவுடரின்
சுகத்தை
அளியுங்கள்




இலவசபுத்தகம்: ஜான்ஸனின் குழந்தை பராமரிப்பு புத்தகத்தின் இலவசப் பிரதிக்கு எழுதுங்கள். பெற்றோர்களுக்கு உபயோகமான அநேக விஷயங்கள் இதில் அடங்கியுள்ளன. இங்லிஷ் அல்லது ஹிந்தி பிரதிகளில் எது வேண்டுமென்று குறிப்பிடவும்!

ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன் ஆப்
இந்தியா பிரைவேட் லிமிடெட்
பி. ஓ. பாக்ஸ் 1976,
டிபார்ட்மெண்ட் 84-D
பம்பாய்

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon